ஸ்ரீ

திருஞாந முத்திரைக் கோவை,
தொகுதி 2.

( ஆழ்வார்திருநகரிப் பிரதிகளின்படி )

# நம்மாழ்வார் தாலாட்டு,
# ஸ்ரீ சடகோப திவ்விய சரித்திரம்,
# பவனிக்குறம்,
# குருகூர் பள்ளு,
# ஆழ்வார்கள் வைபவங்கள்,
# ஸ்ரீ பராங்குச நாடகம்.



பதிப்பாசிரியர்.
பெரியன்: வெ. நா. ஸ்ரீனிவாஸய்யங்
திருஞாந முத்திரைப் பிரசுராலயம்,
ஆழ்வார்திருநகரி.



*

விலை 5-0-0 ரூபாய் ஐந்து

ஸ்ரீ:

திருஞானமுத்திரைக் கோவை எண் 1.

# நம்மாழ்வார்
# நூற்றெட்டுத் திருப்பதித் தாலாட்டு.

உபயகவி அப்பா
இயற்றியது.
[இரண்டாம் பதிப்பு.]

பதிப்பாசிரியன்
பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸன்.
ஆழ்வார்திருநகரி.

ஸ்ரீசடகோபாய மங்களம்

# இரண்டாவது பதிப்பின் முன்னுரை.



ஸ்வாமி நம்மாழ்வார் வைபவங்களை ஸவிஸ்தாரமாய் சிறுவர் முதல் பெரியோர் ஈறாக சுலபமாயறிந்துய்யும் வண்ணம் இந்நூல் அமைக்கப்பட்டுள்ளது. இந்து நம்மாழ்வார் அவதரித்து கோயில் கொண்டருளும் திருக்குருகூர் என்னும் ஆழ்வார்திருநகரி மார்கழி (முதற்பத்து) உத்ஸவங்கள் தோறும் சந்நிதி சங்கித கைங்கர்ய பரர்களால் இன்றும் சேவிக்கப்பட்டு வருகிறது.

இதை முதலில் 1900-ஆம் வருடத்தில் தெந்திருப்பேரை ஸ்ரீ உ. வே. (குடும்பகவி) பிச்சுவய்யங்கார் ஸ்வாமிகள் சிற்சில வித்தியாசமான பாடாந்தரங்களுடன் வெளிப்படுத்தி யுதவினார்கள். இந்நூலில் காணும் முதல்காப்புக்குப் பதிலாக (எதிராஜன்) எம்பெருமானாருக்கு கூறியிருக்கும் காப்பு வருமாறு.—

பூமாறன் செங்கமலப் பொன்னடியே தஞ்சமெனும்
பாமாறன் றாலாட்டைப் பாடவே—ஆமாறு
வந்து துணையருளும் வள்ளலெதி ராஜனிரு
கந்தமலர்ச் சேவடியே காப்பு.

இந்நாலியற்றிய (நூற்றெட்டுத் திருப்பதித் தாலாட்டு 45-ல் காணும்) உபயகவி அப்பாவைப்பற்றிய விபரங்கள் நன்கு தெரியவில்லையாயினும், இவர் ஆச்ரயித்த ஆசாரியர் ஸ்ரீவானமாமலைமடத்து விஞ்சையூர் ஸ்வாமி என (நூற்றெட்டுத் திருப்பதி 43-ல்) தெரியவருகிறது. இந்த ஸ்வாமியைப்பற்றி ஸ்ரீ வானமாமலைமடத்து 7-வது பட்டம் ஸ்வாமி வாழித்திருநாமங்களில் "விஞ்சைமுனிதாள் பணியும் வேதியர்கோன் வாழியே" தாவளமா விஞ்சைமுனி தாள்தொழுவோன் வாழியே" விஞ்சை வாமுனிவன் மெய்யருளால் மாறன் செஞ்சொல் மறை தேர்ந்துரைக்கும் சீர்" என்பவைகளால் 6-வது பட்டம் எம்பெருமானார் ஸ்வாமி என அறியலாம். இந்த ஸ்வாமி பட்டத்தில் எழுந்தருளியுள்ளகாலம் 780-ம் ஞு தை முதல் 834 ஆடி வரை என (என் தகப்பனார், மணவாள மாமுனிகளால் அஷ்டதிக்கஜ ப்ரதமபரிகணிதராய் நியமிக்கப்பட்ட ஸ்ரீவானமாமலை மடத்து 1-வது ஸ்வாமி முதல் நாளது 25-வது பட்டத்து ஸ்வாமியவரை ஒவ்வொரு ஸ்வாமியுடைய காலங்களையும் அவ்வவர்களால் நடத்தி வைக்கப்பட்டுள்ள கைங்கர்யங்களையும் பற்பல ஆதாரங்கள்கண்டு குறித்துவைத்துள்ளவைபால்) தெரியவருகிறது. ஆசை மிகுதியால் இவ்விரண்டாம் பதிப்பும் பதிப்பிக்க நேரிட்டது. பெரியோர்கள் குற்றத்தை எடுத்துக்காட்டி ஆதரிப்பார்களென்று பெரிதும் விரும்பி எதிர்பார்க்கும்,

திருஞானமுத்திரைப்
பிரசுராலயம்,
ஆழ்வார்திருநகரி.
11—12—32.

பெ. வெ. நா. ஸ்ரீநிவாஸன்,
பதிப்பாசிரியன்.

நம்மாழ்வார் தாலாட்டுக்கு

வாணிதாஸர் அளித்துள்ள

# நன்றியுரை

மாலூட்டும் பிறவியெனும் பெருங்கடலைக் கடந்துயிர்கள் மாலைச்சேரப் பாலூட்டும் பசுந்தமிழிற் பரமகுரு வகுளமொளிர் பகவனேற்குந் தாலாட்டின் சுவையறிந்து மனமுருக வச்சேற்றித் தாணிக்கீந்த கோலாட்டும்பெரியனெனுமாபூதித்த கோதில்குணக் கொழுந்துநீயே.

ஷியார் சடகோப திவ்ய சரிதத்துக்குக் கூறியது:-

முயக்குறு மாமுறை மாசு நீங்கிடக்
கயக்கறு போதங் கனிந்து தெளிய
கோதில் கனியென குணபான் றன்னைத்
தீதில் திருவாய் மொழியினில் திரட்டிய
பகவன் பெரியன் பராங்குசன் சரிதம்
தகையுறு நெஞ்சந் தழைக்க வருளிய
தேவேச பாரதித் தெருளோன் பெயரை
நாவி றன்றன் நற்புகழ் தன்னால்
உலகுக் களித்த ஒருபெருங் குணத்தோய்!
நிலவுஞ் செல்வ நீடிசைக் குலத்துப்
பெரியன் ஸ்ரீநிவாஸப் பெரியோய்!
அரிது நின்செயல் அனைத்து மோங்குக!
கைம்மாறெவன்செயக் கருதுவன் வாழி!
அம்மா பெரிதுன் அன்பின் திறனே.

ஸ்ரீ ராமஜயம்.

திருஞான முத்திரை துணை.

# நம்மாழ்வார் தாலாட்டு.



## காப்பு.

தென்குருகை மாறன் திருவவதா ரச்சரிதை
நன்குருகித் தாலாட்டி ஞட்டவே—யென் குருவாஞ்
செல்வச் சடகோப தேசிகன்பொற் சீர்பாதங்
கல்விப்பி ரான்சரணங் காப்பு.

வச்சிரமெய்க் கூன்சேழியன் மைந்தன் றிருவழுதி
பச்சையறந் தாங்கிசக்ர பாணியா—ரச்சுதரோ
சீரியலுஞ் சேந்தருடன் செங்கண்ணர் போர்க்கழியார்
காரிகுலச் சேய்மாறன் காப்பு.

## நூல்

சீர்பூத்த நீண்மதிளுஞ் செம்பொன்செய் கோபுரமுங்
கார்பூத்த மாளிகையுங் கற்பகக்கா வுஞ்செறிந்த

திருவண் பரிசாரத் தேவே சனியே
மருவவா விந்தத்தில் வாழ்திரு வாழ்மார்பன்.

கற்றெடுத்த கல்விக் கடலான ருந்தவத்தாற்
பெற்றெடுத்த பெண்கள் பெருமாளு டையநங்கை

பருவங் குறித்துநந்தம் பாக்கியத் தாற்றோன்றுந்
திருவின்வடி வுக்கேற்ற செல்விம ணவாளன்

எவனுமெ னப்புவன மெல்லாங்கு றித்தெடுத்து
நவனுக ரீசனிவ னுகுமென நண்ணி

சித்திரை மாதத்திற் றிருவோண நன்னாளில்
உத்தமயோ கத்தினல்ல வோரைமு கிழ்த்தத்தில்

திருவழுதி நாடுமுற்றுஞ் செங்கோல் செலுத்துந்
திருவழுதி நன்மரபிற் செல்வக்கு மாரன்

காரியார் செங்கமலக் கைபிடித்திம் மாதுனக்கு
பாரியா மென்றே பரிவா யளித்தருளி

கோசலையும் பார்த்திபர்கள் கோமான் றசரதனும்
நேசமுடன் வாழ்ந்துபோ னீடூழி வாழுமென

வாழ்த்தியபின் வேதியரு மாதவத்தோ ரும்வாழ்த்த
சூழ்த்ததிசை யோர்வாழ்த்த சொற்பாவ லர்வாழ்த்த

நந்தாத தெய்வ நகரை யலங்கரித்து
வந்தார்க ளெல்லாம் வழியெதிரே வந்தேத்த

மாடத் திருக்குருகூர் மாநகரி லெண்டிசையோர்
நாடச் சிறந்துநெடு நாளரசு செய்ததற்பின்

கங்கையார் நன்மரபிற் காரியார் கற்புடைய
நங்கையார் செய்ய நளின முகநோக்கி

மானே! விலையில்லா மாணிக்க மேதெவிட்டாத்
தேனே யொருவார்த்தை செப்புவது கேளென்றார்

நாடு நகரமு நன்மணியு நல்வளமுந்
தேடும் பொருளுந் திரமா மெனவிருந்தோம்

குதலைமொழிக் கிண்கிணிக்காற் கோகனகச் செவ்வாய்
மதலையரை யில்லாத வாழ்வுமொரு வாழ்வாமோ!

புக்கடிசி லுண்டு புறம்புல்கிக் கூத்தாடும்
மக்கள்முகங் காணாத வாழ்வுமொரு வாழ்வாமோ!

ஐந்தடக்கி வேண்டு மறங்கோடி செய்தாலும்
மைந்தரைப்பெற் றுய்யாத வாழ்வுமொரு வாழ்வாமோ!

மிகப்பே றளித்து விரசை நீராட்டு
மகப்பே றடையாத வாழ்வுமொரு வாழ்வாமோ!

இத்தனைகா லங்களுமீ தெண்ணினோ மில்லையென
உத்தமனு முத்தமியு முள்ளமிக வேவாடி!

ஈடேற்றி ஜன்மத் திடரேற்றி யந்தாய
வீடேற்றி வீறளிக்கு மெய்ப்புதல்வன் வேண்டுமென

சிந்தித்து வாவித் திருநகரி மாமாலை
வந்தித் திறைஞ்ச வளையாழி யெம்பெருமான்

ஆகாச வாணிவடி வாங்கிக் குறுங்குடியில்
ஏகாமு னங்குழவி யீவோ மெனப்பகர

கேட்டபொழு துள்ளக் கிலேசமற நீத்துமன
வாட்டமொழித் தச்சுதனை வாயார வாழ்த்துதற்கே

தென்குறுங்கை மாநகருஞ் சேர்ந்துதெரி சித்துடலம்
நன்குருகிப் பத்திபண்ண நம்பிகன விற்றோன்றி

எத்திரசம் பத்துமுமக் கீட்டுஞ் சதுர்வேதன்
புத்திரசம் பத்தைப் பொறித்தானி லைகொலென

அச்சுதா னந்தா ஹரிகேச வாகண்ணா
மச்சரூ பாவனந்தா வாமனா மாதவனே

எழு தலைமுறையா யாங்கடொண்ட ராகிநிற்க
வாழுமடி யோங்களுக்கு மக்கட்பே றில்லையென்றால்

ஊழ்வினையோ தெய்வ முனதருளும் பொய்யாமோ
வாழ்வினையே நல்கு மகவளிக்க லாகாதோ

முன்செய்த மாதவத்தை முற்றும் முடித்திலமோ
பின்செய்த பேறும் பெறும்பேறாய்ப் பெற்றிலமோ

கற்றாவுங் கன்றுங் கதறப் பிரித்தோமோ
பெற்றாரைப் பார்த்துப் பெருமூச் செறிந்தோமோ

பேதலித்து முற்பிறப்பிற் பிள்ளைப்பால் வார்த்திலமோ
காதலித்து மைந்தருண் ணுங் கையைப் பிடித்தோமோ

கற்புடைய மின்னார் கருவை யழித்தோமோ
பொற்புடைய பிள்ளைகளைப் போற்றி யெடுத்திலமோ

நல்வினையே துஞ்செய்யா நாங்க ளொழியாத
வல்வினையோ மையோ மலடாய்ப் பிறந்தோமோ

செங்கோலை விட்டுக் கொடுங்கோல் செலுத்தினமோ
வெங்கோப நீத்தோர்க்கு வேதனைகள் செய்தோமோ

ஆறிலொன்று கொள்ளா தவனி புரந்தோமோ
ஊறிலன்பர் செய்த வுதவிம றந்தோமோ

என்று வழக்காக வுரைத்தேங்கிப் பரதவிக்க
நின்று புலம்பினர்பா னேசத்தா லுள்ளிரங்கி

ஆதிநம்பி கண்ணுக் கணித்தா யெழுந்தருளி
நீதிமைந்த னாமுமக்கு நீரேகு வீரென்று

கண்ணீர் துடைத்துக் கரத்தினாற் றைவந்து
பெண்ணீர் மையினானீர் பேதலியா தேகுமென

வெள்ளையா ழித்துயிலும் வேதாந்த மூர்த்தியையே
பிள்ளையா கப்படைக்கப் பெற்றோ மெனமகிழ்ந்து

கண்டா தரிக்கவிண்ணோர் காதலிக்கப் பூதலத்தோர்
கொண்டாட மீண்டுங் குருகா புரிக்கேகி

தென்னர் புகழச் செகத்தோர் பணிகேட்ப
மன்னர் வணங்க மறையோர் புடைசூழ

# நம்மாழ்வார் தாலாட்டு

சீர்புகழ வாழ்ந்தநாட் டேவி திருவயிற்றிற்
பார்புகழக் கர்ப்பக்குறி பையக்காண் பித்ததனால்

அங்கமெங்கும் வெண்பவள மாக வெளுவெளுத்து
கொங்கை வட்டமிட்டுக் குறுங்கண் கருப்பேறி

மேனிப் பசுநரம்பு மேற்றோன்றி வேற்றுமுகந்
தானித் தனைக்குமொரு சாட்சிக் குறிகாட்டி

பண்டிபெறுத் தோரழகு பாலித்து வேர்வைசிந்தி
உண்டிவெறுத் துண்ணு துறக்கம் பெரிதாகி

ஆக்கைவிட்டு மெய்சோர்ந் தயாவருத்தங் கொண்டுநுனி
நாக்குலர்ந்து தாகித்து நாடா ததுநாடி

சாலப் புளித்ததுவும் தண்சுவர்மேற் பூசுமண்ணும்
பாலொத்த நீரும் பலகால முமருந்தி

திங்களீ ரைந்துந் திருவயிறு வாய்த்ததற்பின்
அங்கங்கு ழைந்துகுழைந் தாகுலமாய் நொந்துபட்டு

வெண்சங் கினமுழங்க வேதியர்பல் லாண்டிசைப்ப
பண்சங்கைப் பட்டமொழிப் பைந்தொடியார் வாழ்த்தெடுப்ப

தேவ ரனைவோருந் தேமலர்வா ரிச்சொரிய
மூவர் கருணை முகத்தா மரைமலர

அரம்பையர்கள் கூத்தாட வணிமுரசந் தானார்ப்ப
நிரந்தரமுங் கொண்டல் நிதிமாரி பெய்ய

பூபாரம் தீரப் புலவோ ரிசைபாட
ஸ்ரீபாஷ்ய முரைத்தோன் சிந்தைசெய்யுந் தேவாகி

நாட்டுங் கலியாதி நாற்பத்து மூன்றாநாள்
வேட்டதிரு வைகாசி வெள்ளிநாட் பூரணையில்

திருவிசா கத்துதையஞ் செய்யமட மானார்
மருவியைய னய்யனென்றே வாழ்த்திக் குரவையிட்டு

பொற்கலத்தி லேந்திப் புதுமஞ்ச னீராட்டி
நற்கலையால் மெய்துடைத்து நாபித் தலம்பார்த்து

சற்கரையுந் தேனுமொன்றாய்ச் சாதித்துச் சங்கிலிட்டு
பொற்கொடி யார்சேனை புகட்டியுச்சிக் கெண்ணெயிட்டு

நெற்றி பிடித்தமர்த்தி நீண்டபசுங் கைமுறுக்கி
முற்றுந் தடவி முழந்தா ளிணைநிமிர்த்து

சோணை யுருவிச் சுடர்மூக்கந் தண்டுருவிக்
காண வினிய கனிவாய் வசம்பூட்டி

புத்திரனைக் கைக்கொடுத்த போதுவந்து காரியார்
முத்தமிட்டு மூரல் முகத்தா மரைநோக்கி

பூதானங் கோதானம் பூரிதா னம்வித்தின்
மாதானம் பூசுரர்க்கு மாசுரர்க்குந் தான்வழங்கி

நன்னிலத்தில் பன்னிரண்டா நாளாதி நாதர்திருச்
சன்னிதியிற் றொட்டிலிலே தக்கோனைக் கொண்டுவந்து

வீறன் கலைஞ்ஞான மேதாவி யானமகிழ்
மாறனென்ன நாமம் வழுவாது சாத்தியபின்

ஆனைக் கழுத்தில் அலங்கரித்த பூந்தேரில்
சேனைத் தலைவருடன் செல்வனைக்கொண் டூர்க்கேகி

காதலாய்க் காண்போர்கள் கண்ணேறு வாராமல்
ஆசாரவாய்க் கற்பூர வாரத்தி யுங்காட்டி

ஒப்பமிட்ட பொற்றகட்டி லுள்ளும் புறத்துமொன்றாய்
செப்பமிட்ட வச்சிரத்தாற் செய்த திருத்தொட்டில்

வயிரக்கால் நாட்டி வயிரவயி டூரியத்தாற்
செயிராறுத்து விட்டமெனச் சேர்த்ததனி னூடே

கண்டகுசோ பைச்சுடரோன் கற்றைக் கதிர்முழுதும்
பூண்டதென நீண்டதங்கப் பொற்சங் கிலிநாற்றி

செஞ்சூரி யப்படத்திற் சேர்த்தசிறு மெத்தையின்மேற்
பஞ்சூடு நீலப் படாத்தின் றழுவணையுங்

கைக்கொட்டை யுஞ்சிவந்த கால்க்கொட்டை யுந்திருத்தி
மெய்க்கேற்க வேழடுக்கு வெண்பட்டு மேல்விரித்து

சூற்கட்டு மேகத்திற் றோன்றுமுடு ராசிமுத்தின்
மேற்கட்டு கட்டி விடுபூ மழைசிதறி

மருக்கொழுந்து பிச்சியிரு வாட்சிமுல்லை மல்லிகைப்பூ
தருக்கொழுந்து கோகனகஞ் சாதிவெற் சண்பகப்பூ

சூழவிதா னித்ததனுட் சோதிப் பிழம்பொளிபோல்
வாழப் பரிவாய் மலர்க்கண் வளரவிட்டு

பாந்த ளரசன் பணைமகுடப் பார்காக்குஞ்
சேந்தர்புகழ் விளக்குந் தெய்வத் தனிச்சுடரோ

அங்கண்ணர் யார்க்கு மருட்கொழும் பாய்நீதிச்
செங்கண்ணர் தோன்ற செழித்தவழித் தோன்றலோ

கச்சலவு கோலக் கனதனத்தார் சீராட்டி
அச்சுதற்கு மச்சுதரென் றாதரிக்குங் கோளரியோ

வங்கர் கலிங்கர் மகதர் திறையிட்டும்
எங்கள்சக்ர பாணியா ரெண்ணரிய போரேறே

கார்க்கழியா வேழக் கடறாண்டி மாறுபட்டோர்
போர்க்கழியார் தோளாண்மை பூத்தகுணக் குன்றமோ

மறந்தாங் கியசமைய வாதியரை வென்றே
அறந்தாங் கியார்பே ரறந்தாங்கு மற்புதமோ

ஆழ்வார்க ளொன்பதின்ம ராரியர்முக் கோல்தரித்து
வாழ்வார்க டொண்டர்தொண்டர் வாழப்பி றந்தானே

தண்டமிழும் வேதாந்த சாரப் பெரும்பொருளும்
மண்டலமும் விண்டலமும் வாழப் பிறந்தானே

திருப்பதிநூற் றெட்டுஞ் செழுந்துளபத் தாமம்
மருப்பதிநூற் றெண்மர்களும் வாழப் பிறந்தானே

திருநாளும் மாதத் திருநாளுஞ் சான்றோர்
வருநாளு மென்னாளும் வாழப் பிறந்தானே

தழைவளமுஞ் சேணிற் றருவளமு நீங்கா
மழைவளமு மெவ்வளமும் வாழப் பிறந்தானே

ஒன்பதின்ம ராகி யுரைத்ததிரு வாய்மொழியுந்
தன்பதியு நாளுந் தழைக்கப் பிறந்தானே

அண்டமா யண்டத் தடுக்கா யடுக்கழியாப்
பிண்டமா யொன்றும் பெருந்தகையைச் சொன்னார்

அனலும் விசும்பு மகலிடமுங் காற்றும்
புனலும் பொருவும் புராதனனைச் சொன்னார்

ஆலாகி யாலி னடையா யடைக்கிடந்த
மாலாகிய வேங்கின வாகனனைச் சொன்னார்

பத்திக்கு வித்தாய்ப் பணித்தடங்காப் பண்ணவனை
முத்திக்கு வித்தாய் முளைத்தவனைச் சொன்னார்

நல்குரவுஞ் செல்வமு நரகு சுவர்க்கமுமாய்
வெல்பகையு நட்புமாம் வித்தகனைச் சொன்னார்

கொங்கார் பொதும்பர் தொறும் கோகனகப் போதுதொறும்
செங்கா லனஞ்சேர் திருவழுதி நாடனே

கால்பாயுஞ் சேற்றுக் கருமேதி பாயவரிச்
சேல்பாயும் வாவித் திருவழுதி நாடனே

முன்னம் பழுத்தபலா முட்புறத்தின் காய்சிதறத்
தென்னம் பழம்வீழ் திருவழுதி நாடனே

மஞ்சாலி முத்தோ வயல்முத்தோ காந்தியெனச்
செஞ்சாலி சூழுந் திருவழுதி நாடனே

மூசுவரி வண்டாட முல்லைமுகை விண்டாடுந்
தேசுகுடி கொண்ட திருவழுதி நாடனே

இருகூர் விழியா ரிசைபோலக் கூகை
குருகூரென் றோதுங் குருகைப் பெருமானே

நாலாக லைப்பொருளு நால்வேத மும்பயிலக்
கோலா கலமாங் குருகைப் பெருமானே

வெஞ்சரத்தாற் புண்படுத்தும் வில்வேட னுங்கொடிய
குஞ்சரமும் போற்றுங் குருகைப் பெருமானே

நாடிவலஞ் சூழ்ந்தசங்க ராசனுஞ் சங்கமுனி
கோடிவலஞ் சூழுங் குருகைப் பெருமானே

கருவூரன் ஞாளியாற் காசினியில் வைகுந்தங்
குருகூரென் றோதுங் குருகைப் பெருமானே

சுழிக்குந் திரைநீர்ச் சுழிதோறு முத்தங்
கொழிக்கும் பொருநைக் குருகைப் பெருமானே

என்றுதா லாட்டு மிசைக்குருகி நங்கையெந்தன்
கன்றுமுலை யுண்ணாது காலங் கழிக்குமோ

ஆவா வெனப்பதறி யள்ளி யெடுத்தணைத்து
கோவா மணியைக் குறங்கி னிடைகிடத்தி

எந்திப் பிடித்திருத்தி யேலக் குழல்முடித்து
பூந்தெரிய லுஞ்சூட்டிப் பொற்கொண்டை யுஞ்சாத்தி

பொன்னி னரசிலைசூழ் பொற்பட்ட முஞ்சாத்தி
மின்னினக் கிழைமான வீரபட்ட முஞ்சாத்தி

திருவும் பிறையுந் திகழ்ந்தசுட்டி மீதணிந்து
மருவுங் கொடிநெடிய வள்ளைக் குழைபெருக்கி

சிலைக்கு தம்பையிட்டுச் சீராக வெண்ணையிட்டு
காலைக் கதிரிற் கனத்த குணுக்குமிட்டு

வடிந்த குழைக்காதில் மகரக் குழைசாத்தி
படிந்தாற்றினக் கொப்பணிந்து பச்சைமணி வாளியிட்டு

மூக்குப்பூ இட்டதின்மேல் மூக்குத்தி யுஞ்சாத்தி
நோக்குந் திருக்கழுத்தில் நோக்கரிய காரையிட்டு

தாவியும் ஐம்படையுந் தங்கத்தி னுலணிந்து
மாலிகையும் வெண்டாள மாலிகையுங் கோர்த்தணிந்து

முன்கை முதாரியிட்டு முத்தின் கடகமிட்டு
நன்குபெறு தோள்வளையு நற்பவள மும்புனைந்து

வெள்ளிவளை தந்தவளை வேகடஞ்செய் செம்பொன்வளை
ஒள்ளியதா கக்கரத்துக் கொப்பாய்த் தெரிந்தணிந்து

அரைவட்டமும் கிண்கிணியு மச்சு மரைநாணும்
நிரைமணியுங் கட்டுவட நீங்கா வரைக்கணிந்து

தண்டைச் சிலம்பு சதங்கைசிறு தாட்கணிந்து
கெண்டைவிழி மையெழுதிக் கீறுதிரு நாமமிட்டு

கட்டாய திருநுதலிற் கத்தூரிக் காப்பெழுதி
பட்டாடை சாத்திப் பனிநீ ரயினிசுற்றி

அப்பாவென் னாருயிரே ஆருயிர்க்கு மாருயிரே
ஒப்பாரு மிக்காரு மில்லா வொளிவிளக்கே

கண்ணுக் கினியானே கட்டழகில் மிக்கானே
பண்ணுக் கினியானே பாகொழுகுஞ் சற்கரையே

தேனின் மதுரமே செங்கருப்பந் தீம்பாலே
மானேர் விழியார் மனமுருக்குங் குஞ்சரமே

செல்வக் குழல்வணனே தேமாம் பழச்சுவையே
கல்விக் களஞ்சியமே காமருசீ ரோவியமே

கிட்டாத் திரவியமே கேடில்லா மெய்யுணர்வே
அட்டாங்க யோகத்துக் காணிப் பசும்பொன்னே

பேறளிக்கும் வித்தகனே பிள்ளைமா ணிக்கமே
கூறரிய நித்திலமே கோமேத கத்தெளிவே

நந்தாத கோமளமே நாடறிய சொற்பொருளே
சிந்தா மணிவடிவே தித்திக்குந் தெள்ளமுதே

அல்ல லொழிக்கும் அருமைப் பெருமானே
நல்லதிரு மகனே நாவீ றுடையானே

திருவிசா கத்தில்வந்த தெய்வத் தனிச்சுடரே
சுருதியா ராயுந் தொடரிமலை காவலனே

குருகைப் பெருமானே குமரித் துறையானே
பொருனைத் துறையானே பொதியமலை காவலனே

செம்மலே நாவிற் றெவிட்டாத முக்கனியே
அம்மமுண்டு கண்துயிலா வற்புதனே யென்றென்றே

ஒக்கலைமேற் கொண்டுமுலை யூட்டநினைத் தூறுபால்
தக்கபடி முன்னே தரையிற் சிறிதூற்றி

கோகனகச்செவ்வாயிற் கொம்மைமுலை யைப்பிடித்து
மாகனகக் கையால் மடித்திருத்தும் போழ்தினிலே

மைந்தன் கடைவாய் வழியே வழிந்தொழுக
நைந்துபயப் பட்டு மடநல்லார் தமைநோக்கி

எங்கள் குடிக்கு யிறையோன் பெருங்குடிக்கும்
உங்கள் குடிக்கு மொருமகவாய்த் தோன்றினான்

பாலுண்ண வில்லை பசித்தழவோ தானுமில்லை
மேலுண்பா னென்றால் விழியுந் திறக்கவில்லை

உச்சி குளியவில்லை உள்ளங்கால் வேர்க்கவில்லை
அச்சங்கை யுண்டா மரிவையரிங் கெய்தவில்லை

இயக்கமொன் றுங்காணே னிளைத்திளைத்து மூசி
மயக்கம் பெரிதாய் மருண்டிடவுந் தானுமில்லை

கலையுண்ணாத் திங்கணுதற் கன்னியரே தாயார்
முலையுண்ணாப் பிள்ளைகளை மூதுலகிற் கண்டதுண்டோ

பெண்கொடியீ ரம்மமுண்ணப் பேதலித்துப் பண்டியெக்கிக்
கண்பிசைந்து வாய்காட்டாக் காதலரைக் கண்டதுண்டோ

பெண்ணீர் நீங்கள்பெற்ற பிள்ளைகளிற் சேனைமுதல்
உண்ணாது பூரிக்கு முத்தமரைக் கண்டதுண்டோ

கைகா லசையாமற் கண்ணும் விழியாமல்
மெய்வாய் திறவாத வித்தகரைக் கண்டதுண்டோ

இருத்தினா லெட்டுநா ளாகிலு மவ்வண்ணம்
இருக்குங் குழந்தைகளை யிவ்வுலகிற் கண்டதுண்டோ

எடுத்துக் கிடத்தினால் யான்கிடத்து மவ்வண்ணம்
படுத்திருக்கும் பாலகரைப் பாருலகிற் கண்டதுண்டோ

பண்பினுடன் மையெழுதப் பையத் திறந்துபின்னைக்
கண்திறவாப் பாலகரைக் காசினியிற் கண்டதுண்டோ

மறுகியன்னை நின்று மயங்கினாற் சற்றே
குறுமூரல்செய்யுங் குழவியையுங் கண்டதுண்டோ

ஈதேது மாயமோ வெண்ணமுடி யாதென்றார்
மாதே குழந்தையைநா மால்முனம்வைப் போமென்றார்

நன்றுரைத்தீ ராதி நாரா யணன்செயலே
என்றுரைத்துத் தன்கணவர்க் கிவ்வண்ணஞ் சொன்னதற்பின்

தண்சுடரோ னென்னவன்னத் தந்தச் சிவிகையின்மேல்
எண்சுடரோ னென்ன வெழுந்தருளப் பண்ணுவித்து

பல்லியமுஞ் சங்கினமும் பம்புமுகில் போல்முழங்க
மெல்லியலா ராலவட்டம் வெண்சா மரையிரட்ட

பூச்சக்ர வாளப் புவியோர் புடைசூழ
மாச்சக்ர வாளவன்ன வட்டக் குடைநிழற்ற

சங்கீத மேளஞ் சதிமுறையா கப்பயில
நங்கீதங் கேளுமென நாரதர்யாழ் வாசிப்ப

கயரதவா சிப்படைமற் காலாட் படைமிடைய
செயசெய வென்றோத செகவேந்தர் நின்றிறைஞ்ச

நீலமலை போற்பொலிந்து நின்றபெரு மான்றிருமுன்
கோலமலை போற்பொலிந்து கோதிலாப் பாலகனை

தெண்டனிட விட்டுத் திருத்தாய் மனங்குளிர
கண்டுகண்டு காரியார் கண்கள் களிகூர

சுற்றத்தார் பின்றொடரத் தொல்புவியோர் பூரிக்க
பற்றற்றார் கொண்டாட பாகவத ரேத்தெடுப்ப

காதசையத் தோளசையக் கையசையத் தாளசையத்
தாதசையப் பூவசையத் தாரசைய மெய்யசைய

மேருவி மானமெனு மேவியுறை கோயில்சுற்றிப்
பேருகத்தின் சீர்மை பெருகுந் துவாபரத்துள்

ஒருகந்த ஆனி மூலததிலே யுற்பவித்த
தாருவுர கப்புளிக்கீழ்த் தானே தவழ்ந்தோடி

தெற்கே முகநோக்கி செய்யபது மாசனத்தில்
விற்கே ணுதலார் விரகா னலங்கடந்த

போதத் தளவே புதிது புதிதாக
சீதப் புனிதத் திருவுள்ளம் வேறொன்றி

கண்ண னடிக்கமலங் காமித்து மெஞ்ஞானக்
கண்ணனென வுண்மைக் கரமுத் திரைதரித்து

மண்ணவரும் விண்ணவரும் வாழ்த்தெடுப்ப வேதாந்தப்
பண்ணமுத மூறப் பரஞ்சோதி யாயிருந்து

நாசி நுனிநோக்கி நாட்டம் பிறழாமல்
மூசியெதி ரோடுபெரு மூச்சுமகத் தாடடக்கி

மார்பு நிமிர்ந்துதிரு மந்திரமே தாரகமாய்
ஆர்வமுடன் கொப்பூழி லம்புயமா மக்கரத்தை

வைத்துயோ நத்திருந்த வாறுதெரி சித்துலகோர்
மொய்த்துவழி பட்ட முறைநோக்கி யீராறு

திங்கள்மட்டா யாவிபெற்ற சித்திரம்போ லச்சிறந்த
மங்கலரூ பத்தினெழில் வாய்த்த சிறுபாலன்.

தவழ்ந்ததொன்றும் போதுமெனத் தங்களிலே சொல்லி
யுவந்துவந்து பார்த்துப்பார்த் துள்ளங் களிப்பாகி

திருப்புளிக்கீழ் வீற்றிருந்த சேயை யெடுத்தணைவிற்
பொருப்பையசைத் தாலுமிந்தப் புத்(தி)ரனசை யானென்றே

நங்கைமட மாதுரைக்க நங்காரி யார்பரிவாய்
அங்கைகொடு சீரா யணைத்தெடுத்துப் பார்த்ததற்பின்

மானா ரெடுத்தார் மகவுடையோர் தாமெடுத்தார்
ஆனாத செங்கோ லரசரெல்லாம் வந்தெடுத்தார்

நானா விதத்தாலு நம்மா லசைபடான்
ஆனாலு மிந்தமைந்தன் ஆனைக்குந் தானசையான்

என்றெவருங் கூற விரங்கித் தாங்கியவர்
மன்றல்மலர்க் கூந்தல் வடிவுடைய நங்கைமின்னாள்

கைசோர வுள்ளங் கரையக்கண் ணீர்சோர
மெய்சோரக் கால்சோர விம்மல் பொருமலாய்

நோய்விட்டுப் பின்னுமந்த நோய்பிடித் தாற்போல
வாய்விட் டழுதரற்ற மாட்டாமல் உள்ளடக்கி.

அன்றுபோல் போட்ட வணையாடை யிற்கிடவா
தின்றுதவழ்ந் தோடவைத்த எம்பெருமா னேயிரங்காய்

சாத்திரர்க்குங் காணாத தாமோத ரனிரங்காய்
வீற்றிருக்கப் பண்ணுவித்த மெய்ப்பராந்தா மாவிரங்காய்

அறமே யிரங்கா யருள்மூர்த்தி யேயிரங்காய்
மறமே யிரங்காய் வனதேவ தாயிரங்காய்

விண்ணே யிரங்காய் விதிவலியே சற்றிரங்காய்
மண்ணே யிரங்காய் மதியாத வாவிரங்காய்

ஆரிரங்க வல்லாரென் றாகுலிக்கு மக்காலம்
பாரிடங்க ரோட்டப் படித்தமந்த்ர வாதியரும்

பண்டிதருந் தங்கடங்கள் பார்வைக்கும் மூலிகைக்குந்
தண்டுதலில் லாதுமனஞ் சலித்துத் தடுமாறி
செய்கைதனிற் பேதித்துச் சிந்தா குலித்துலைந்து
கைதவமென் பார்சிலவர் காரணமென் பார்சிலவர்

சேனைமு தல்வனென்பார் செய்தவத்தோன் காணென்பார்
ஆனைபி டரொழித்த வச்சுதா னந்தனென்பார்

அவ்வவர்க டங்கடங்கட் கானபடி சொல்வதெல்லாங்
கௌவைபெரி தாய்க்கேட்டுக் காண்முலையை விட்டகலார்

இன்னம்ப ருணிதர்வுந் தெய்திநந்தம் பாக்கியத்தால்
அன்னமுண்ண வாய்பேச வாதரிக்கப் பண்ணுவித்தால்

ஆகாதோ வென்றே யனைவோரு மங்குவிட்டுப்
போகாது காத்திருந்து புத்திரனுக் கன்னைமார்

எவ்வண்ணம் சீராட்டி எவ்வண்ணம் பாராட்டி
எவ்வண்ணம் போற்றுவா ரவ்வண்ணஞ் செய்துவந்தார்

ஆண்டுதொறு மாண்டுதொறு மங்க மவையவங்கள்
நீண்டு தசைந்து நிரந்தரமும் பூரித்துப்

பாவச மாகிப் பராபக்தி யேபண்ணி
நிரவதிக ஞான நியமநிலை யுண்டாகி

பேரோகை யன்பாற் பிதிரோடக் கொங்கைவிம்மி
வாரோ டிகலு மருக்கமுந்தான் கண்டுகண்டு

மாறா வழுதிகுல வாழ்வே மலக்குரா
வீறா புவிவேந்தர் வேந்தே குருகூரா

பொற்காரி யாருனக்குப் பொற்கழங்கும் பொற்பந்தும்
பொற்காம தேனுவும் பொற்பூவும் வரவிட்டார்

தென்னர் சிறுதேருஞ் சிறுபறையுந் தொட்டிலுஞ்செம்
பொன்னினம் மானையும் புதிதாய் வரவிட்டார்

சப்பாணி கொட்டித் தளர்நடையிட் டப்பூச்சி
எப்போது காட்டி யெமக்கின்பந் தந்தருள்வாய்

திருமஞ் சனமாட்டிச் சிற்றாடை யுஞ்சாத்தி
மருமஞ் சரிசூட்ட மாதரார் வந்துநின்றார்

சிற்றிற் சிதைத்தழிக்குஞ் சிற்றடியைக் காணவென்றே
சிற்றிற் பலகோலித் தெரிவையர்கள் சூழ்ந்துநின்றார்

வேலையிட்ட கண்ணாருன் மெய்யழகைப் பார்த்துப்பூ
மாலையிட்டுநிற்கும் மணக்கோலங் காணவந்தார்

அமரரினு மாற னழகுடையா னென்றே
குமரிருந்த மாதர்மடல் கொண்டெழுதிப் பார்க்கின்றார்

உன்கணவ னோமுடவீர் உன்னிலும் பெண்மைமிக்காம்
என்கணவ னென்றே இகலிமயல் கொண்டுநின்றார்

இளவரசு தேவரீர் எங்களுக்கென் றேத்தி
வளவரசர் கப்ப மலைபோற் குவித்துநின்றார்

பெருவழுதி நாடாளும் பிள்ளையிவ னென்றே
திருவபிடே கம்புனையத் தேசிகரெல் லாம்வந்தார்

ஏதேனு மெண்ணா திருக்கின்ற தமியல்போ
நாதா வெனவுரைத்து நாட்கழிக்குங் காலத்திலே

பொருந்துஞ் சதுர்வேதப் புனிதர் வடிவாகி
திருந்தும் துவாபரத்திற் சித்திரையிற் சித்திரைநாள்

கோளூரி லுற்பவித்துக் குற்றமற்ற சிந்தையனாய்
வேளூர் கணையை விலக்கும் பொருட்டாக

கங்கா நதிப்புனலிற் கார்கால மும்படிந்து
வெங்கால் துகள்சருகு வெய்யோ னொளியருந்தி

பஞ்சாக் கினிநடுவே பலகால மும்பழகி
அஞ்சா யுதத்தோனை ஆதரிக்கு மக்காலம்

தென்பா லொருகோடிச் செங்கதிரோன் நின்றுதித்து
முன்பாகத் தோன்று முறையிறும்பூ தென்றுணர்ந்து

பின்னொருவர் காணாது பேதையேன் தண்ணருகு
மன்னுவதே தென்றே மலைத்தோ மறியாமல்

நன்றிசெயுந் தண்புனலில் நாமுழுகு நம்முகத்தைத்
தென்றிசையை நோக்கித் திருப்பிவிட்ட காரணத்தால்

மண்டலத்திற் செய்ததவம் வந்துவெளிப் பட்டதென
கண்ட கதிரோன் கதிரே வழிகாட்ட

வந்தான் பொருனை வடகரையில் வந்தேற
நந்தா வொளிப்பிழம்பாய் நாள்தோறும் தோற்றுகின்ற

செய்யோனை இன்று தெரிசிக்கப் பெற்றிலமே
அய்யோ வென்றே அளவறுக்க மாட்டாமல்

நிற்கும் பொழுதிலந்த நேமிச் சுடர்வேந்தன்
அற்குன்றுங் காந்தி அடங்கியதிவ் வூரிலென்

உள்ளத்தி லெண்ணி யுவட்டெறியுஞ் சங்கணிநீர்
வெள்ளத்தில் நீராடி மீண்ட அளவையினில்

இங்குள்ள வற்புதமே தென்றுவினா வும்பொழுதில்
அங்குள்ளா ரெங்கள் அரசன் குலக்குமரன்

வாயுந் திறவான் மலர்க்கண் ணிணைநோக்கான்
தாயைமுகம் பாரான் றந்தையுமோ வாவென்னான்

என்றுதவ முப்படித்தான் அன்றுமுத லின்றளவும்
ஒன்று மிருப்பில் ஒழியாது வீற்றிருந்தான்

சேயென்றாற் சேயோ செழுமணிதான் கொண்டநோய்
பேயென்றாற் பேயுமன்று பேசஅரி தாமென்றார்

அன்னாரை நோக்கி அருள்சுரந்த சிந்தையனாய்
நன்னாவ லன்புகுமூர் நாதன் மதுரகவி

யானறிய வேண்டுமுங்க ளிறையோன்பாற் சொல்லுமென
மான பரனொருவன் வந்தானெனப்பகர

மந்திரிமார் கேட்டு மதித்தெதிர்கொண் டங்கேகி
முந்தி வணங்கி முனிப்பெருமா னேயிந்த

மதலைமொழி பேசினால் வையகமெல் லாமுமக்கு
முதலரசு நல்கு முயற்சியிடு வோமென்றே

வார்த்தை கேட்டுப்பொறுக்க மாட்டாதார் முன்மகவைப்
பார்த்தவரின் மிக்காய்ப் படித்தவர்போல் தோன்றுதே

ஊசி நுழையாத உரோமச் சடைமுடியான்
பாசிபற்று மேனியினான் பார்க்குந் தொழிலறிய

வல்லவனோ என்றிகழ மன்னன தனைக்கேட்டு
நல்லவனங் கேக நவிலுமெனவிடுத்தார்

ஒண்டொடியார் பின்னேகும் யோகி முகநோக்கி
அண்டர்குரு வேயெங்கள் ஆவிமைந்தன் பேசினால்

யாமுமக்குத் தொண்டுசெய்வோம் என்றுரைத்த போதுதக்கோன்
கோமுதல்வ ரோடும்போய்க் கோயிற் புறமாக

நன்றா லிவன்வார்த்தை நீர்கேட்கப் பண்ணுவிப்பேன்
என்றவருங் கூற எல்லோரும் பின்னடைய

பாகார்ந்த செஞ்சொற் பராங்குச மாமுனிவன்
ஏகாந்த யோகத் திருந்த செயல்நோக்கி

இச்சோதி யோவென் னிதைய முருக்கியது
முச்சோ தியினும் முழுச்சோதி யென்றிறைஞ்சி

ஆடியா டிப்பாடி அங்கோடி இங்கோடி
நாடிநா டிப்பார்த்து நங்கை பெறும்பேறோ

வானத் தவர்பேறோ மாநிலத்துள் ளார்பேறோ
ஞானத் தவர்பேறோ நன்னாவ லர்பேறோ

என்பேறு மென்பதற்கு மேதுவுமிப் போதுளவால்
அன்பேறு மின்புருகும் ஆதரவு மிக்காகும்

அங்கம் புளகமெழ மானந்த வாரியெழுந்
துங்கமுக மலருஞ் சுந்தரத்தோள் பூரிக்குந்

சென்றாடுந் தீர்த்தமெதிர் வந்தாடப் பெற்றதே
என்றா யிரந்தரமாய் இச்சைப் படியியம்பி

பித்தேறி னர்போலப் பேதலித்து மெய்மறந்து
கொத்தேறு பூவுங் குழையும் பறித்தெறிந்து

தன்னைப் புகழ்ந்து தனைத்தானே பூசித்துப்
பின்னைத் தெளிந்து பிழைத்தோ மெனப்போற்றி

கரியதிரு மேனியெங்கே கைநான்கி லிரண்டெங்கே
பெரியதிரு வுந்திமலர் பெற்றபிர மனெங்கே

பாகத்தில் வாழும் பரசுதரித் தோனெங்கே
ஆகத்தில் வாழு மலர்மேல் மடந்தையெங்கே

அண்டமுண்ட செவ்வாய் அரவிந்தப் போதிதுவோ
பண்டகில மேழும் பரந்தளந்த தாளிதுவோ

ஆலந் தளிரில் அடங்கும் வடிவிதுவோ
சீலம் பலவுந் தெரிந்துணரக் கூடுமோ.

குன்றே மரமே குளிர்புனலே காமினெனத்
தன்றாயை நோக்குந் தனிக்கன்று போல்மகிழ்ந்து

நிலைவணங்கி மெய்யொடுக்கி நீதி நெறியாகத்
தலைவணங்கிக் கையொடுக்கித் தாழ்ந்துமுறை தப்பாமல்

வாய்புதைத்துத் தூசொதுக்கி வந்துதனை யாட்கொண்ட
சேயுகக்கு மாறு திருச்செவியி லோர்வசனம்

சித்தின் வயிற்றிற் சிறிய பொருட்கிடந்தால்
எத்தைத்தின் றெங்கே கிடக்குமென வெங்கோமான்

அத்தைத்தின் றங்கே கிடக்குமெனு மவ்வார்த்தைப்
பத்துத்திக் குங்கேட்கப் பார்த்திபர்க ளோலமிட்டு

புத்திரனைப் பேசுவித்த புண்ணியனே யென்றவர்க்கு
பத்திபத்தி யாகப் பணித்துகிலுஞ் செம்பொன்னும்

மலைபோற் குவித்துமன்னர் மண்டலீ கர்முதலோர்
கலையார்ந்த தண்புழுகு கஸ்தூரி கற்பூரம்

எண்ணைமஞ்ச ணீர்களப மேலச்செ ழும்பனிநீர்
வெண்ணைதயிர் பால்நறுநெய் வீதிதோ றும்பெருக்கி

ஆறிரண்டு நாட்களி யாட்டாடிக் களிகூர்ந்து
வேறிரண்ட கண்ணாரும் வேந்தர்வே றுள்ளாரும்

தென்பா லுதையத் தினகரனைக் கண்டோனே
அன்பாக யாங்கள் அளித்த திரவியத்தை

கைக்கொள்ளா தேவெறுத்த காரணத்தைச் சொல்லுமென
மெய்க்கொண்ட மாதவத்தை வேட்டநமக் கேனிதென்று

கூறியபின் னுங்கள் குலத்தரும மீதென்றால்
ஆறிய சீற்றத்தாய் அடியோங் குழவிதன்னை

நன்றாகப் பேசுவித்து நாட்டந் திறப்பித்துச்
சென்றாச்சி யூட்டுந் திருமுலைப்பா லுண்ணவைத்து

வாழ்வருள்வீ ரென்றுரைத்த மாற்றந் தனைக்குறித்து
தாழ்வகலத் தோற்றுஞ் சடகோப னெம்பெருமான்

பரமபத நாதன் பரஞ்சோதி மூர்த்தி
பரவாசு தேவன் பரந்தாமத் தண்ணல்

பத்துருவா யுற்பவித்தும் பாரோர் திருந்தாது
தத்துவத்தை விட்ட தவறனைத்துஞ் சிந்தைசெய்து

வேதத் தமிழை விரித்துரைக்க வேண்டுமென
போதத் தரவைப் புளிக்கா வணமாக்கி

அடியேனும் பட்டர்பிரா னாழ்வாரும் வெற்றிக்
கொடியாங் கருடனெனக் கூறும் படியாக்கி

வாரணத்தைப் பொய்கை வனசப்பி ரானாக்கித்
தாரணித் தண்டத்தைத் தமிழ்ப்பூதத் தாராக்கி

பேரா னந்தத்தைப் பேயாழ்வா ராக்குவித்து
போரா ழியைமழிசைப் புத்தேளி ராக்குவித்து

நீலக் கடலளித்த நேமிச் சுடர்மானுங்
கோலக் கவுத்துவத்தை கொல்லிக்கிறையாக்கி

ஆர்ந்தவன மாலிகையை யன்பர்தாட் டூளாக்கி
சேர்ந்த மனுவைத் திருப்பாணாழ் வாராக்கி

கூர்ங்கணையா லொன்னார் குடல்பிடுங்கி மாலையிட்ட
சார்ங்கவில் லைமங்கை ததியர்பெரு மானாக்கி

தேசத் தவரிற் சிறந்தகேற்ப யோகியுமாய்த்
தாசர்க்குத் தாசன் தனக்குத்தா னேயாகி

மகவாசை யுங்களுக்கு மாற்றவந்தா னல்லாற்
புகலேது முண்டோநீர் போமினெனச் சொன்னதற்பின்

தாழ்ந்து வணங்கித் தபோதனரே நாங்களிங்கு
வாழ்ந்தோம்வாழ்ந் தோமிந்த மண்டலத்தில் வாழ்ந்தோமே

நம்பி யுரைத்ததுவும் நாங்கள் மறந்துவிட்டோம்
எம்பெருமா னீருரைக்க வின்று தெளிந்தோமே

இப்பேறு பெற்றவர்கள் எங்களைப்போ லின்னமிந்த
மூப்பே ருலகில் மொழியவொரு வருண்டோ

எம்மிலு யர்ந்தவரா ரெம்மிலுஞ் சீரியரார்
இம்மண் டலத்தவரி லென்றே மனந்தேறி

தந்தையுந் தாயுந் தனயனென எண்ணுயல்
முந்தை முதல்வனென முக்கால் வலஞ்செய்து

சேவித்து நாமிந்தச் சென்மத்தின் மூத்தருடன்
பாவித்தோ மென்றே பலகால மும்பகர்ந்து

முன்னைப் பரம்பொருளை மூவா முதலோனைத்
தன்னைத்தா னொப்பாந் தலைமகனைத் தத்துவனை

எண்ணிரண் டாண்டாக வெறும்பீக் கடியாமற்
கண்ணின் மணியாகக் காத்திருந்தோங் காவலனை

அய்யா வுனக்கே யடைக்கலமிப் பாலனென
கையால் மதுர கவிக்குக்காட் டிக்கொடுத்து

திங்கள்மணி மாடத் திருக்குருகூர் சென்றடைந்து
திங்கடொறுந் திங்கடொறுந் தென்குருகை மாநகரில்

இந்துநுதன் மாது மிறைவர் பெருமானும்
வந்துவந்து போற்றி மதுரகவி யைப்பணிந்து

நீர்செய்த பாக்கியமிந் நீணிலத்திற் செய்தவரார்
யார்செய்த பாக்கியமாம் பாவலர்கள் கோமானை

இடைவிடா தாராதித் தேத்தினீ ரெங்களுக்கு
உடையவர்நீ ரல்லா லொருவருண்டோ வென்றுரைத்து

மீன்முத லாகமுன்னம் மேவுமவ தாரங்கள்
ஆனதெல்லாம் பாமார னன்னோர்க்குக் காண்பித்து

சேவைபிர சாதிக்கத் தெரிசித் தவரிருக்க
ஆவதொரு கோயி லமைப்போ மினியென்ன

பொற்கோயி லுண்டாக்கிப் பூசனைசெய் தொண்டருக்கு
முற்கோ விவர்களென முத்திநிலை வீடுபெற்றார்

காலங் குறித்திருக்குங் கண்ணன் பரந்தாமன்
ஞாலங் குறித்தேத்த நான்சொல்ல வேண்டுமென

மேருகிரி முகட்டின் மின்பூத்த மேகமென
வாருதியி லுற்பவித்த வாரீச மங்கையுடன்

புள்ளரசிற் றோன்றிப் பொலியமலர்க் கண்விழித்து
வள்ளல்மணி வாய்திறந்து மங்கலச்சொல் லாற்புகழ

சிலைக்கோல நெற்றித் திருமாது கேள்வர்
இலைக்கொருவ ராகி யென்னைப்பா டென்னைப்பா

டென்னைத் தமக்கேற்ற வெம்பெருமான் யாவரையும்
பன்னத் திருப்புளிக்கீழ்ப் பாடியுவப் பாக்குவித்து

அந்தாதி யாகி அதிகரிக்கும் பூதலத்தோர்
சிந்தா குலந்தவிர்க்குந் தெய்வப் பிரபந்தத்தில்

ஓராத சிந்தை யுலகத்துச் சம்பந்தஞ்
சேராமல் வேண்டுந் திருவிருத்த நூறும்

பனுவல்தெரி நீத்தார் பணியும்மா லின்குணங்கள்
அனுபவிக்கச் செய்ததிரு வாசிரிய மேழும்

அந்த அனுபவத்தால் உண்டா மவாவெல்லாம்
முந்தவுரை அந்தாதி முத்தமிழெண் பத்தேழும்

தங்கு மவாவுக்குத் தகுதியா மீச்வரனை
இங்குவந்து சேர இசைத்ததிரு வாய்மொழியில்

ஐந்தனொன் றாம்பத்தில் இசையுமிரண் டாம்பத்தில்
ஆய்ந்தடையத் தக்கோன் அருள்மாய னென்றதுவும்

திருத்தியமூன் றாம்பத்திற் செஞ்சொல்நா லாம்பத்தில்
அருத்தி யுயிர்நிலையை யாம்படியே சொல்லுவதும்

இயலுமஞ் சாம்பத்தி லிசையுமா றாம்பத்தில்
உயிரரியைச் சேர்தற் குபாய முரைத்ததுவும்

நீட்டுமே ழாம்பத்திற் சீர்திகழெட் டாம்பத்தில்
வீட்டு வழிக்கு விரோதமறக் கூறுவதும்

தக்கவொன் பதாம்பத்திற் சாற்றியபத் தாம்பத்தில்
மிக்கபல முண்டாகும் விஸ்தாரம் பேசுவதும்

பண்ணமுத மூறப் பகர்ந்தவொன் றாம்பத்திற்
கண்ணனே காவற் கடவுளென்ற கட்டுரையும்

சொல்லால் வகுத்துத் தொகுத்தஇரண் டாம்பத்தில்
எல்லார்க்கு மாலே இனியனென்ற கட்டுரையும்

நாவின்மது ரஞ்சுரக்க நாட்டியமூன் றாம்பத்தில்
ஆவிநெடு மாலை அனுபவிக்கு மென்றதுவும்

விரிதிரைநீர் மண்டலத்து வேட்டநா லாம்பத்தில்
அரிபிரிய மாக அடையுமுயி ரென்றதுவும்

போதுதொறும் தொண்டர் புகலுமஞ் சாம்பத்தில்
ஓது முபாய முயிர்க்கரியே என்றதுவும்

உய்யும் படிக்கே உரைக்குமா ரம்பத்தில்
செய்யு முபாயந் தெரியும்வகை செப்புவதும்

பெரும்புவி யோர்வாழப் பிறந்தன ளாம்பத்தில்
விரும்புவதி லுண்டாம் விரோதமிலை செப்புவதும்

சந்ததமு மன்பர் தரிக்குமெட் டாம்பத்தில்
அந்தவி ரோத மழியுமெனக் கூறுவதும்

ஓதினல் முக்தி யுதவுமொன்ப தாம்பத்தில்
ஆதியா னுடோறு மாம்பலத்தைச் சொல்லுவதும்

திவாகரனைப் போலுதையஞ் செய்தபத் தாம்பத்தில்
அவாவறுத்து வீட்டை யடைந்தமையே சொல்லுவதும்

புகழூரான் நாதமுனி பூதூர் முனிவன்
தகுமூர் நமக்கிவையே தானென்னச் சிந்துப்பான

மட்டோ விடுந்தாம மாறனருளிச்செயலை
பட்டோலை யிட்டபிரான் பட்டோலை கொண்டதெல்லாம்

நீணிலத்தி னின்றதற்பின் நேமித் திருக்காத்தான்
சேணிலத்தி னின்றுந் திரும்பி யெழுந்தருளி

முப்பத்து முக்கோடி தேவர் முனிவர்குழாம்
எப்பத்தி தோறு மிறைஞ்சஎதிர் தோன்றினன்

திருவாணை யிட்டுன் திருவாணை கண்டாய்
தருவாய் பரமபதந் தந்தொழியப் போகேல்

அமலா வெனமறிக்க அச்சுதா னந்தன்
கமலா சனனே கடல்ஞால மெல்லாம்

இன்னம்பி றந்திறந்தால் ஈடேற்ற முண்டாமோ
உன்னைன் பவற்கே யுதவும் பொருட்டாக

பொய்கைமுத லானோர் புகன்றதுவும் நீருளிச்
செய்ததுவும் பின்னோர் தெரிந்துரைக்கும் பாடல்களும்

பண்பா லுபதேசம் பண்ணுமெனப் பூமடந்தை
நண்பா அடியேற்கிந் நாடுபிடி யாதென்ன

கண்ட மதுரகவி காரிமா றுவெனையுங்
கொண்டகன்றால் நாயேன் குறைமுடியு மென்றுரைத்த

மெய்யன்ப னைநோக்கி மேதினியி லுள்ளோர்க்கு
செய்ய மறைத்தமிழைச் செப்புவதார் நீயல்லால்

அந்தரங்க ருண்டோ அகிலத்தில் வாழ்தியென
எந்தைபெரு மானே இருக்கமுடி யாதென்றார்

வாழ்வான தண்டுழாய் மாலைப்பொ லிந்துநின்றோர்
ஆழ்வார்கள் கோமானே ஆதரித்துன் பாலடைந்த

இந்த மதுரகவி யேங்கிக் கரைந்துருகி
நைந்துதடு மாறாமல் நாமுரைத்த வண்ணமே

இத்தலத்தில் வாழ்ந்தருளும் இன்றுமுத லும்முடனே
நித்தியமா கப்பொலிந்து நிற்போ மெனவாழி

நாரண னாதிப்பிரா னாட்டும் படிதிருந்தி
ஆரண முத்தமிழோர் ஆயிரமும் பாடவல்லான்

மதுர கவிசிந்தை மருளாத வாறே
சதுர முகமலர்ந்து தண்ணளியா னோக்கி

நாமுனக்குத் தஞ்சம் நமக்குநீ யேயுலகில்
ஆமுதல்வன் என்றே அபையத்தம் செய்தருளி

முன்கங்கை யின்பால் முழுச்சுடராய்க் கண்டதிலும்
பின்புபதி னாறு பிராயந் தொழுததிலும்

பேராசை மிக்காகிப் பேரா யிரமுடைய
நாரா யணனின் நமக்கிவனே தெய்வமென

மஞ்சன நீராட்டி மலரா லருச்சித்து
தஞ்சமடி யேற்குச் சரணா விந்தமென

நாவுக் கமுதூற நாலு கவிப்புலவோர்
பாவுக் கணியாகப் பாடியபத் துப்பாட்டும்

முன்னாழ்வார் நால்வர் மொழிந்த திருமொழியும்
பின்னாழ்வா ரோரைவர் பேசுந் திருமொழியும்

திருவாய் மொழியும் செகத்துள்ளோர்க் கோதி
இருநூற்று முப்பதாண் டிங்கிருந்து வாழ்ந்தருளி

உற்பவித்த சன்மத் துடலோடும் வைகுந்தப்
பொற்பதியி லெகினித்தர் புத்தே ளிரோயாகி

இருந்தருளு மாற னிவனொப்பா னென்பான்
வருந்தின மட்டாக மவுனித் திருப்பதே

சீராகு மென்றே திருப்புளிக்கீழ் வீற்றிருந்தான்
நாரா யணனாதி நாத னரவணையான்

வைகுந்த வீட்டில் வாழச்சு தானந்தன்
வைகுந்த மூரில் மறைத்தமிழ்நூல் வந்ததினால்

மண்ணினோர் தங்கள்தங்கள் வாக்கினா லுச்சரியார்
எண்ணி நினையார் நினைந்தால்யா மிறப்போமென

அத்தன்மை யாலிறந்த தாரணநா லாயிரமும்
பத்தருக்கு முன்போலப் பாலிக்க வேண்டுமென

வந்தசே னைக்கதிபர் வாசற் கரிமுகனுஞ்
சுந்தரத்தோள் மன்னனூர் தொண்டரடித் தொண்டாகி

ஞானியர்கள் தீபமென நாதமறை மேகமென
ஆனிமா தத்தில் அனுடத் திருநாளில்

மின்னவரும் பொன்மதில்சூழ் வீரநா ராயணமாம்
நன்னகரிற் ஸ்ரீரெங்க நாதனெனத் தோன்றி

அதிகமுனி நாதமுனி யாகிநெடு மாமால்
பதிகள்தொ றுஞ்சென்று பணிந்துதொழு மன்னாளில்

ஆரா வமுதுவந்த வாரா வமுதுபத்துஞ்
ஓரா யிரத்துக் குரைமோரி தென்றுணர்ந்து

மால்வடிவாய்த் தோன்றும் வயிணவர்கள் பாலோதி
நூல்வடிவாய் வேதம் நுவலுங் குருகூரன்

சன்னிதியி லேகிச் சதுரன் மதுரகவி
சொன்னபத்துப் பாட்டுமவன் தொண்டருப தேசிக்க

நூலா கியகண்ணி னுண்சிறுத்தாம் பாதியாய்
மேலாக வன்பவரை விண்ணப்பஞ் செய்து செய்து

நன்னீர்த் திருப்புளிக்கீழ் நாற்பத்து நாளிருந்து
பன்னீரா யிரமுருவாய்ப் பத்தியுட னுச்சரிக்க

மண்முன்னே செய்திருந்த மாதவத்தோன் நாதமுனி
கண்முன்னே வந்துன் கருத்தே தெனக்கேட்க

பேறளித்து நாவீறு பெற்ற மகிழ்ச்சுடரே
கூறரிய வேதக் குலத்தமிழோ ராயிரமும்

ஒன்பதின்ம ராகி யுரைத்தமூ வாயிரமும்
என்பரமே கட்டுரையு மென்றிருபா தத்திறைஞ்ச

நாலா யிரந்தமிழும் நாதமுனிக் குப்பகர்ந்து
மாலாழி சங்கெழுதி மந்திரமோ ரெட்டெழுத்தும்

சித்திரையா னுக்குபதே சித்தபடி போதித்து
முத்திரைக்கை மோன முனிவனுட் கொண்டருளி

அத்தால் வெளியிட் டருளுமிந்தப் பாடல்முற்றும்
இத்தா ரணியோ ரினியுரைக்க நேசித்தால்

தாமுள்ள நாளெல்லாந் தத்துவஞா னஞ்சிறந்து
பூமுதல்வன் றீட்டும் பொறிபழுது வாராமல்

செல்வத்தா ராகித் திருநாட் டரசாகி
நல்வரத்தை நல்குமென நங்கைகுமா ரன்கருணை
மாரிமா றுது மகிழ்ந்து வரங்கொடுக்க
வாரிமா றுதபுவி வாழ்ந்ததென வாழ்ந்தனனே.

சுவாமி நம்மாழ்வார் தாலாட்டு முற்றும்.



# நூற்றெட்டுத் திருப்பதித் தாலாட்டு.

அரங்கமுறை யூர்தஞ்சை அன்பிற் கரம்பனூர்
புரங்கட்திருப் புள்ளம் பூதங் குடிதிருப்பேர்
சிரங்கட்திரு வெள்ளறையுஞ் சிந்தையமு தூற்றிருக்க
பரங்கொள்நெடு மாமுகிலைப் பாடும்ப ராங்குசனே!

ஆதனூர் சீரா ரழுந்தூர் சிறுபுலியூர்
தாதவிழு மழுஞ்சேறை தலைச்சங்கை நாண்மதியம்
காதலருங் குடந்தை கண்டியூர் விண்ணகரம்
வேதியர்சேர் கண்ணபுரம் விரும்பியநம் மாழ்வாரோ!

வயலாலி நாகை வழுங்கூர் திருநறையூர்
வியலாறு நந்திபுர விண்ணகர மிந்தளூர்
குயிலார் திருச்சித்(தி)ர கூடஞ்சேர் காழிநகர்
புயல்போல மேனியரைப் போற்றியநம் மாழ்வாரோ!

கூடலூர் கண்ணங் குடிக்கண்ண மங்கைதிருத்
தேடுங் கவித்தலமுந் திருவெள்ளி யங்குடியும்
வாடை கமழு மணிமாடக் கோயில்முதல்
பாடவல்ல செஞ்சொற் பத்மா சனத்தானே

மாங்குயில்கள் வாழுங்கா வளம்பாடி வண்புருடை
தேங்குமிகு செம்பொன் செய்கோயிற் றிருத்தேத்தி
வேய்ங்குழலார் வைகுந்த விண்ணகர மால்விரும்ப
பாங்குடனே முத்தமிழ்ச்சொற் பாடியநம் மாழ்வாரோ!

அரிமேய விண்ணகர மைம்பொன் மணிக்கூடம்
பரன்மெய் பார்த்தன் பள்ளிதிருத் தேவனூர்
தருமேவு வெள்ளைக் குளமுட்டந் தத்துவமால்
திருவாய் மொழியுரைக்குந் தென்குருகை ஆழ்வாரோ!

சோலைமலை கோட்டியூர் தோன்றுந் திருமெய்யம்
வேலையணை புல்லாணி மேவுந் திருத்தங்கால்
கோலவயற் றென்மோகூர் கூடலணி வில்லிபுத்தூர்
மாலைச் செழுந்தமிழால் வாழ்த்தியநம் மாழ்வாரோ!

வளமார் திருக்குருகை வாய்த்ததுலை வில்லிமங்கை
கிளர்ஸ்ரீ வரமங்கை கீர்த்திபுனை தென்பேரை

அளியார்திரு வைகுந்தம் அன்பாற் புளிங்குடியுந்
துளவார் கருமுகிலைச் சொல்லும் பராங்குசனே!

வரகுண மங்கை மதிட்குழந்தை தென்குறுங்கை
அரியதிருக் கோளூ ரனந்தபுரஞ் செல்வமிகும்

திருவண் பரிசாரந் திருக்காட் கரையென்னும்
பரமிசை முத்தமிழாற் பாடியநம் மாழ்வாரோ!

செய்ய திருமூழிக் களத்தின் திருப்புலியூர்
துய்யதிருச் செங்குன்றூர் தோன்றுந் திருநாவாய்

மையுலவு வல்லைவாழ் வாய்த்ததிரு வண்வண்டூர்
கையிலங்கு மாழியரைக் கருதுங் கலைக்கடலோ!

பரட்டாறு தென்னை வளர்வித் துவக்கோடு
பாட்டா யிரந்தமிழாற் பாடியநம் மாழ்வாரோ!

தோட்டார் கமலவயற் சூழுந்திரு வாறன்விளை
கோட்டானை மூலமெனக் கூறுங் கடித்தானம்

அயிந்திரபுரங் கோயி லழகாரு மத்திகிரி
பயின்றதிரு வெஃகா பரமேஸ்வர விண்ணகரம்

அயன்பரவும் பாடகஞ்சே ரார்ந்த திருத்தங்கல்
பயன்பெறவே முத்தமிழாற் பாடியநம் மாழ்வாரோ!

நீர்கமழும் வேளுக்கை நிலாத்திங்கட் டுண்டங்
காரகங்கார் வானங் கடிநகரங் கள்வனூர்

ஊரகமே யெவ்வுளையா ரட்ட புயகரமும்
பாரகத்திற் பாடிப் பதம்பெறுநம் மாழ்வாரோ!

நின்றதிரு புட்குழியு நீடுதிரு நீர்மலையும்
மன்றல்லிவிட வெந்தைகடன் மல்லை கடிகைவரை

தென்ற லுலாவுந் திருவல்லிக் கேணியென
என்றுந் துதிக்கு மொழிற்குருகை யாழ்வாரோ!

வேங்கடஞ் சாளக் கிராமம் வியன்புரிசை
நாங்கணி நைமிசா ரண்ணிய நலந்தழைக்கும்

பூங்கமலங் கங்கை கரைகண்டம் பொன்வதரி
ஓங்குசிங்க வேழ்குன்ற மோதியநம் மாழ்வாரோ!

பரிதி யரமபதம் போமுதம் பாற்கடல்சீர்
பொருது மயோத்தி பொருந்தும் வடமதுரை

மருவுதிரு வாய்ப்பாடி வந்துவரை நூற்றெட்டும்
பரமெனவே பத்தியுடன் பாடியநம் மாழ்வாரோ!

பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
அய்யன் குலசேக ராழ்வார் பெரியாழ்வார்

துய்யதொண்டர் தாட்டுளிசொற்பாண னற்கவியன்
செய்யுந் தமிழனைத்துஞ் செப்பியநம் மாழ்வாரோ!

மதுரகவி நாதமுனி நல்லமணக் கால்நம்பி
எதிபதிதொழும் பெரியநம்பி ஏற்றியநம் மாழ்வாரோ! 35

ஆரியர் போற்றுநல் லாளவந்தார் தொண்டர்தாள்
சீர்பெருங் கச்சிநம்பி சிந்தைசெய்நம் மாழ்வாரோ!

திருமாலை யாண்டான் திருவாய் மொழித்தமிழை
திருத்தும் புவியோர்க்குத் திருத்தியநம் மாழ்வாரோ!

திருமல்லி நாடுந் திருப்பாவை முப்பதுங்
கருதுந் தமிழ்தன்னைக் காட்டியநம் மாழ்வாரோ!

எதிராசர் மனமகிழ மெல்லோரும் வாழ்ந்திருக்க
குதுகுலமுடன் கோமாறன் கொண்டதிரு வடியிதுவே

கூரத்தில் வாழுநங்கூ ரத்தாழ்வான் கொண்டதாள்
வீரத் தமிழை விரித்துரைத்தநம் மாழ்வாரோ! 40

ஸ்ரீவசன பூஷணத்தோன் சிந்தைசெய்யுந் தேவாகி
ஆவலுடன் ஆரியர்கள் அடங்கியதிவ் வூரிதுவோ!

பொருந்துமண வாளமா முனிபோற்றும் புகழிதுவோ!
திருந்துந் திருநகரி தினந்தோறும் வாழ்ந்திருக்க

மாதவஞ்சேர் விஞ்சை வரமங்கை மாமுனியும்
பாதம் பரவஅருள் பார்க்கும் பராங்குசனே

அபயநல்கு முத்திரைக்கை ஆழ்வா ரகமகிழ்ந்து
கிருபைபெருகத் தொண்டரெல்லாங் கேட்குஞ் செவிகுளிர

உபையகவி அப்பா உரைக்குமிந்தத் தாலாட்டால்
உபையலோ கத்திலுள்ளோ ருகந்தூழி வாழியவே! 45

தன்னில் மனமகிழ்ந்து தன்னிலே பூரித்து
நன்னிலைய னாகிநின்ற நாதமுனி வன்வாழி;

குருகூ ரன்வாழி கோகனகச் செவ்வாயன்
மருமலர்தூ ழாயணிபு மாலாதிநா தன்வாழி! 47

நூற்றெட்டுத் திருப்பதித் தாலாட்டு
முற்றும்.

# சிறந்த வைணவமாலைகள்.

## ஆழ்வார் திருநகரி
## திருஞான முத்திரைப் பிரசுராலய வெளியீடுகள்.



இதுவரை வெளிவராதவைகள்.

திருஞான முத்திரைக் கோவைஎண். இப்பொழுதுதான் வெளிவருவது.

| | | ரூ. அ. பை. |
|---|---|---|
| 1 | "சுவாமி நம்மாழ்வார் நூற்றெட்டுத் திருப்பதித் தாலாட்டு" உபயகவி அப்பா இயற்றியது; ஸந்நதி மார்கழி உத்ஸவத்தில் சேவிக்கப்பட்டு வருவது. | 0 4 0 |
| 2 | "ஸ்ரீ சடகோபன் சந்திரகலாமாலை" ஸ்ரீ.உ.வே. அனந்தய்யங்கார் ஸ்வாமி இயற்றியது. | 0 1 0 |
| 3 | "ஸ்ரீ சடகோப திவ்ய சரிதம்" ஸ்ரீ. உ. வே. தேவராஜபாரதிகளியற்றியது, சுதேசமித்ரன், ஹிந்து, செந்தமிழ் இவைகளாலும் அகஸ்தியதாஸன், வாணிதாஸன், முதலியவர்களாலும் மதிக்கப்பெற்றது. நம்மாழ்வார் வைபவங்களை சுமார் 1200 பாசுரங்களால் காவியநடையில் விஸ்தாரமாகக்கொண்டது. | 2 0 0 |
| 4 | பெரியவாச்சான்பிள்ளை அருளிய "ஸ்ரீ இராமாயணச் சுருக்கம்" நித்ய சேவைக்குரியது. | (அச்சில்) |
| 5 | "தொலைவில்லிமங்கலம் தேவர்பிரான்பேரில் சந்திரகலாமாலை" ஸ்ரீ. உ. வே. தேவராஜபாரதிகளால் இயற்றப்பெற்று பலவித்வான்கள் சாற்றுக்கவிகளுடன் கூடியது. | 0 1 0 |
| 5 | "நம்மாழ்வார் பிள்ளைத்தமிழ்" வாணிதாஸர் முகவுரையுடன் "மாயக்கூத்தன்" போற்றியது. | 0 4 0 |
| 7 | திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக்குறம்; மாயக்கூத்தன், செந்தமிழ் இவர்களால் மதிக்கப்பெற்றது | 0 4 0 |
| 8 | குருகூர்ப்பள்ளு (பராங்குசப்பள்ளு) திருமேனி வைத்தியநாத கவிராயரின் மாணுக்கர் சடகோபப் புலவர் இயற்றியது. தமிழ் லெக்ஸிகன் பதிப்பாசிரியர் ஸ்ரீமான் S. வையாபுரிப் பிள்ளை B.A., B.L., அவர்களால் (பார்வையிடப்பட்டு) விஸ்தாரமான முன்னுரையுடன் கூடியது. | 0 6 0 |
| 9 | (வடிவழகியநம்பிதாஸர் இயற்றிய குருபரம்பரை) ஆழ்வார்கள் வைபவங்கள். (முதலாழ்வார், பெரியாழ்வார்) | 0 6 0 |

மேற்கண்ட நூல்கள் ஷ பிரசுராலய சொந்தக்காரரும் பதிப்பாசிரியருமான ஆழ்வார்திருநகரி பெரியன் வெ. நா, ஸ்ரீநிவாஸய்யங்காரிடமும், ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ ஞான வித்தியா அச்சாபீஸிலும் பெற்றுக்கொள்ளலாம். வியாபாரிகளுக்குக் கமிஷன் கொடுக்கப்படும்,

திருஞான முத்திரைக்
கோவை 3;

ஸ்ரீராமஜயம்

ஸ்ரீ

# சடகோப திவ்ய சரித்திரம்

திருக்குருகூர் நித்தியவாசியும், தமிழாசிரியரும்
உபயகவி வித்வானுமான
ஸ்ரீ உ. வே. தேவராஜய்யங்கார் ஸ்வாமிகளென்ற
தேவராஜ (தேவேச) பாரதிகளால்
இயற்றப்பட்டது.

சுவடியாயிருந்ததை,
ஷியார் மாணாக்கரும், ஆழ்வார்திருநகரி ஸ்வாமி ஆதிநாதராழ்வார்
ஸந்நிதி ஸ்தானீகரும், ஸ்வாமி தெற்குத் திருவேங்கட
முடையான், ஸ்வாமி ஸ்ரீராமன் அழகர் சந்நிதிகளின்
சொந்தக்கார பாத்தியஸ்தர்களிலொருவருமான
பெரியன் தேசிகமய்யங்காரென்ற
பெரியன் வெங்கிட்ட நாராயணய்யங்கார்
குமாரர்

## பெரியன் வே. நா. ஸ்ரீநிவாஸனால்

எடுத்தெழுதப்பட்டு

ஸ்ரீ உ. வே. நல்லான் சக்ரவர்த்தி, எட்டயாபுரம் தமிழாசிரியர்
R. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமிகளால்
தகுந்த ஆதாரங்களுக்கிணங்க பார்வையிடப்பட்டு
படங்களுடன்
பாளையங்கோட்டை அச்சாபீசில் அச்சிட்டு
1929-ஹு டிசம்பர் மீ க்கு
1105-ஞு கார்த்திகை மீ த்தில்
வெளியிடப்பட்டது

---



ராப்பர் | காலிகோ

விலை ரூபாய் இரண்டு] | [ரூபாய் இரண்டு அணா ஆறு]

ஸ்ரீராமஜயம்
ஸ்வாமி தெற்குத் திருவேங்கடமுடையான் துணை
ஸ்ரீ சடகோபாய மங்களம்

# ஸ்ரீ சடகோப திவ்விய சரித்திரம்

## படல அட்டவணை



### ஸ்ரீசடகோப திவ்விய சரித்திரத்தில் அடங்கியுள்ள படங்கள் நான்கின் விப்ரங்கள்

1. ஸ்ரீ வானமாமலை சின்னக்கலியன் ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் 25-வது பட்டம்.
2. எதிராஜர் (உடையவர்).
3. திருக்குருகாபுரி க்ஷேத்திரமென்ற ஆழ்வார் திருநகரி, ஸ்வாமி ஆதிநாதராழ்வார் சந்நிதி, வீதி.
4. ஸ்வாமி நம்மாழ்வார் யோகாஸனத்தில் எழுந்தருளியிருந்த 16-வது திருநக்ஷத்திரத்தில், மதுரகவிகள் ஸேவித்து நிற்றல்.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய உபய வேதாந்த பிரதிஷ்டாபனு சார்யாராய் ஸ்ரீமத் ராமாநுஜாபராவதார ஸ்ரீமத் வரவர முனீந்த்ர அஷ்ட திக்கஜ ப்ரதம பரிகணிதராய் ஸ்ரீமத் ரம்யஜாமாத்ரு யதிவர க்ருபாலப்த ஸ்ரீவரமங்கை ஸமேத ஸ்ரீதேவநாயக அந்தரங்க கைங்கர்யைக துரந்தரராய் அகண்ட மஹீமண்டலாலங்கார மஹீபால கோடீர கோடீகடித மணிகிரண படல பாடலித பாதபீட பர்யந்த ஆசார்யராய் பரம புருஷார்த்த லக்ஷண விலக்ஷண மோக்ஷைக ப்ரயோஜனார்த்த பஞ்சக ஜ்ஞானைக ஸாதன ஸ்ரீமத் அஷ்டாக்ஷராதி ரஹஸ்யத்ரய ஜகதுஜ்ஜீவனுசார்யராய் ஸகல முனிஜன மானஸாரவிந்த ஸந்தோஹ ஸமுல்லாஸ ஸமுல்லஸித ஸ்ரீராஜ ஹம்ஸாவதாரராய் ஸ்ரீபகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரகாசார்ய ஸார்வபௌமராய் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்ரீவானுசல யதீந்த்ரராய் சிரீவரமங்கல நகருக்கு திலகபூதராய் எழுந்தருளியிருக்கும்

## ஸ்ரீ வானமாமலை 25-வது பட்டம்

## சின்னக் கலியன் ராமாநுஜ ஜீயர்ஸ்வாமிகள், சந்நிதியில்

## இச் "சடகோப திவ்விய சரித்திரம்"

எடுத்தெழுதிய, ஷை ஸ்வாமிகளின் திருவடித்தாமரைகளை

ஆச்ரயித்த, சிஷ்யனுன

பெரியன் வெங்கிட்டநாராயணய்யங்கார் குமாரர்

**பெரியன் வே. நா. ஸ்ரீனிவாஸனுல்,**

சமர்ப்பிக்கப்பட்டது.









ஸ்ரீ வானமாமலை சின்னக்லியன் ராமானுஜ ஜீயர் ஸ்வாமிகள்
25-வது பட்டம்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்

ஸ்வாமி தெற்குத் திருவேங்கடமுடையான் துணை



ஸ்ரீ சடகோபாய மங்களம்

# ஸ்ரீ சடகோப திவ்விய சரித்திர வரலாறு



இத் திவ்விய ஸ்தலத்தில் ஜனித்த ஸ்ரீ பூர்வசிகா ஸ்ரீ வைஷ்ணவர்களுள், எம்பெருமானுர் தாசர் வம்சாவழியில் ஒருவராக நிலைத்த அம்மாளய்யன் என்பாரின் சந்ததிகள், பெரியன், சின்னய்யன் என்னும் குடும்பஸ்தர்களாவர். இவர்களுக்கு மூல புருஷனை அம்மாளய்யன் காலமுதற்கொண்டு, சொந்த குலாராதன கோயில் கொண்டருளிய மூர்த்திகளாயும், குலதனங்களாயுமுள்ள ஸ்வாமி தெற்குத் திருவேங்கடமுடையான், ஸ்ரீஅழகர் சந்நதிகள் முறையே தெற்கு, வடக்கு, மாடவீதிகளிலுள. பெரியன் குடும்பத்தவர்களுடைய கிரக ஆராதன மூர்த்திகளாயுள்ள, ஸ்ரீராமன் முதலான எம்பெருமான்களும் [சுமார் 83 ஆண்டுகளுக்கு முன்னர்] ஷெ ஸ்ரீஅழகர் சந்நதியில், எழுந்தருளப்பண்ணுவித்து, இக் குடும்பத்தவர்களால் தனியாக ஆராதிக்கப்பட்டுவருகிறது.

இத்துடன் பெரிய ஸந்நதியான ஸ்வாமி ஆதிநாதராழ்வார் ஸந்நதி கவுரவ ஸ்தானீகர்களுள், முதன்மை ஸ்தானத்தையுடையவர் முறையே பெரியன், சின்னய்யன், குடும்பஸ்தர்களாவர். தேவஸ்தானம் தவிறவுள்ள சந்நதி சம்பந்தப்பட்ட சகல திறவுகோல்களும் இக்குடும்பஸ்தர்கள் வசம் தான் பரம்பரையாயிருந்து அவசியமான காலங்களுக்கு உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது. இம்மாதிரியான கோவில் திறவுகோல் நிர்வாகமுள்ள ஸ்தானீகர்களாய், தொன்று தொட்டு இன்றுவரை, கவுரவ கைங்கர்யஞ்செய்து, உரிய சுதந்தரமரியாதைகள் அடைந்துவருபவர்கள் பெரும்பாலான ஸ்ரீவைஷ்ணவ [திருப்பதி] திவ்வியதேசங்களில் ஸ்ரீபூர்வசிகா ஸ்ரீவைஷ்ண

வர்களே உரியவர்களாயிருப்பதுபோல, இத்திவ்விய தேசத்திலும் இப்பெரியன் சின்னய்யன் குடும்பத்தவர்களுக்கும், தொன்று தொட்டு இன்றுவரையிருந்து ஷை குலமூர்த்திகளநுக்ரகங்களால் நடந்துவருகின்றன.

இவ்வரிய பெரிய எம்பெருமான்கள் ஸேவா கைங்கரியாநுக்ரகங்களால், பெரியன் குடும்பஸ்தர்கள் ஒருவரில் 1041-ஆம் ஆண்டு பங்குனிமீ 19உ ஜனித்த எனது திருத்தகப்பனரான ஸ்ரீமான் பெரியன் தேசிகமய்யங்காரென்ற, பெரியன் வெங்கிட்டநாராயணய்யங்காரென்பாரும் ஒருவராவர்; பிறந்தவுடனே ஆறுவது நாளில் தாயைத்துறந்து, ஷை எம்பெருமான்களநுக்ரகங்களால் குறைவற வளர்ந்து, வைதீக, லௌகீக, படிப்பிணைகளிலுமுதிர்ந்து, தனது அறுவதாவது வயதான 1100-ம்ஆண்டு ஆடிமீ 1உ ஆசார்யன் திருவடிகளில் சேர்ந்தார். தமிழில் அதிகப்பிரியமுள்ளவர். பழைய தமிழ் அந்நாதிகள், மாலைகள், கம்பராமாயணம், ஆழ்வாராதிகள் பிரபந்தங்கள், இன்னுமநேகமான பழம் பெரும் நூல்களாகிய சுவடிகள் சேகரித்து, ஸ்ரீ. உ. வே. பண்டிட் P. R. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமிகளிடம் கொடுத்துதவியுள்ளார்கள். மணவாளமாமுனி மாலை, மணவாளமாமுனி நூற்றந்தாதி இவைகளும் ஷை கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமிகளைக்கொண்டு, தன் சொந்தத்தில் வெளிப்படுத்தியுள்ளார்கள். இவர்களுக்கு பதினேராவது வயதுவரை கல்வி கற்பித்துவந்தவர், அக்காலத்தில் மிகவும் பிராபல்யமான தமிழாசிரியராயும், உபயகவி வித்வானு (ஸ்ரீ பூர்வசிகா ஸ்ரீ வைஷ்ணவ சிகாமணிகளிலொருவரு)மான, ஸ்ரீ. உ. வே. தேவராஜய்யங்கார் ஸ்வாமிகளென்ற, தேவராஜ [தேவேச] பாரதிகளாவர். இவருக்கு இரு கனிஷ்ட ஸ்ஹோதரர்கள் அனந்தாசாரியார் சேஷ பாரதிகள். மூவரிலும் முதல்வரான இவரே [தேவேச பாரதிகளே] கவித்துவத்திலும் முதல்வராவர் என்பார் பெரியர். இவர் ஸ்ரீ கூரத்தாழ்வான் சந்நதி, அண்ணன் திருமாளிகை திருவாராதன கைங்கர்யங்களும், தமிழாசிரியத் தொழிலும் நடாத்தி வந்தார். இவரியற்றியுள்ள நூல்கள் எத்தனையோ? இவர் காலத்தில், நவ திருப்பதிகளிலொன்றான, "துலைவில்லி மங்கலம் தேவர்பிரான்" விஷயமாய் 'சந்திர கலா மாலை' ஒன்று இயற்றி, வெளிப்படுத்தியிருக்கிறார்கள். இது காணக் கிடைக்கவில்லை. இவரே

இச் சடகோப திவ்விய சரித்திரமுமியற்றி, அரங்கேற்றியதாக வுள்ள சுவடிப் பிரதி காணக் கிடைத்தது சுமார் 1926ல். அதற்கு முன் என் தகப்பனாரால் காகிதக் கையெழுத்துப் புத்தகத்தில் சுமார் 400. [நானூறு] திரு விருத்தங்களடங்கிய "ஸ்ரீ சடகோப திவ்விய சரித்திரமும்" துணையாய்க் கொண்டு ஷை எம்பெருமான் களநுக்ரகங்களாலும், ஆசார்யானுக்ரகத்தாலும் எடுத் தெழுதி முடிக்க நேரிட்டது. காலத்தில் ஸ்ரீ. உ. வே. நல்லான் சக்ரவர்த்தி [எட்டயாபுரம் தமிழாசிரியர்] R. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமிகள் மிகவும் கிருபைகூர்ந்து, எழுந்தருளியிருந்து பல ஆதாரப் பிரதி களுக்கிணங்க பார்வையிட்டு, அச்சுப் புரூவ்கள்வரை நேரில் பார்த் துத் திருத்திக்கொடுத்துள்ள உதவியென்றும் மறக்கற்பாலதன்று.

இவ்வபூர்வ சடகோப திவ்விய சரித்திர ஒரு சுவடிப் பிரதியைத்தவிற, எவ்வளவோ முயன்றும், ஒத்த துணைப் பிரதி கிடைக்க மார்க்கமில்லாததால், கிடைத்ததைக்கொண்டு, இந்நிலைமை யில், முற்றுப்பெற்று, வெளி வருகிறது வேறு சுவடி யிருந்து, பாடாந்தரங்கள் கிடைத்து, பெரியோர்கள் கிருபைகூர்ந்து தெரி விக்கும் விஷயத்தில், மறு பதிப்பில் சேர்த்து, வெளிப்படுத்த ஆசை யுள்ளவனாயிருக்கிறேன்.

குறிப்பிட்ட காலத்தில் சௌகர்யம்போல் திருப்திகரமாய் அச்சிட்டு புத்தக உருவாகிக்கொடுத்த பாளையங்கோட்டை அச்சா பீஸ் (புரோப்ரைட்டர்) சோந்தக்காரர் K. D. முத்தையா அவர் களுக்கும் என் நன்றி உரியதாகும்.

| | |
|---|---|
| திருஞான முத்திரைப் பிரசுராலயம்<br>ஆழ்வார்திருநகரி<br>1929ஞு டிசம்பர்மீ<br>ககOஉ-ஞு கார்த்திகைமீ | பெரியன் வே. நா. ஸ்ரீநிவாஸன் |



ஸ்ரீராமஜெயம்

# சடகோப திவ்ய சரித்திரம்

## பாயிரம்

உலக மீரேழினுள்ளவும் பரூர்வன வேயாதி
யலகிலா வுயிர்கட்கெல்லாமக மொடு புறமாய் நின்றங்
கிலனுளனெனு முரைக்கு மிசைந்து சாத்விகர்கள் போற்றும்
வலமுறு திரு வைகுந்த மாயவனுகந்து முன்னாள். (க)

அரவர சழைத்து நீ யிவ்வவனி போயிரு நூறாண்டு
பரமதக் களை கடிந்து பாடிய முரைத்து வாவென்
றுரை செயப் பெரும்பூதூர் வந்துதித்து நூற்றிருபதேழிற்
பரன் றணவாற்ற கில்லாப் பரமனோடெழுந்த வேலை. (உ)

குரகதக் கயவாய் விண்ட கோவலனெதிியை நோக்கித்
திரை கடலுலகில் முன்போற் சென்றவதரித்து நம்மை
மருவிய நிலுவை நீக்கி வாருமென் றுரைப்ப நாமம்
வர வர முனியென்றோத வைணவர் குலத்து மன்னோ. (ங)

தாதுகு நறை வண்டுண்டு ததைமலர்ப் பழனஞ் சூழுங்
கோதிலா மறையோர் வாழ் தென்குருகை வந்தவதரித்து
மாதுலர் க்ரகம் போய் வாழ்ந்து மற்று மீண்டணுகிமாற
னோது செந்தமிழ் வேதார்த்த முரைத்தரும் பொருட்டே
னுண்ணும். (ச)

காலையோர் புனிதன் ஞாதிக் காரணுண்டிறந்த வாய்மை
சீல மாதவனுக் கோதத் தீம் பயனுகருங் கன்றைக்
கோல வானினத்தினின்று கூட்டறப் பிரித்ததே போற்
சால நொந்திறந்தோர்க் காகுஞ் சடங்கினைக் கழித்த பின்னர். (ரு)

இல்லறத் தியலிலின்ன மியைந்திடிற் பாகாடேகுத்
தொல்லை மிக்குறு மென்றெண்ணித் துரியமா மனுநூலாதி
வல்லமெய்ப் புனிதனையெண் வாரணமெனவும் போதத்
தெல்லையில் குணத்தின் மிக்க வெண்மரோடியையுங் காலை. (சு)

ஸ்ரீ

# சடகோப திவ்ய சரித்திரம்

## ஆசாரியாள் வணக்கம்

### வழிபடு தெய்வ வணக்கம் (எதிராஜன்)

நீர்மைகொண் மெய்யடியர் பரவடியுஞ் செய்ய
நிறங்கொடு பொற்றிருவரையினிலவிந்தூசும்,
மார்பிலகு மணிவடமுந் திகழ்முநூலும்
மரைமலர்ச் செங்கரத்தினிடை வளர்முக்கோலுஞ்,
சீர்கெழுபாடிய முரைத்த பவளவாயுஞ்
சேதனர் பாலருளொழுகு திருக்கணோக்கும்,
ஏர்கொடிரு முகத்தொளியு மிலங்கநின்ற
வெதிராசன் விரைமலர்த்தாளிறைஞ்சியுய்வாம். (க)

### ஸ்ரீமந்நாராயணன்

மதுரவின் சுவையின் மேலாய் மறைத்திமிழுரைத்தஞான,
அதுலன்றன் சரிதைகூற அருந்துணையாகும் வாசப்,
பதுமமேலயற்கு மேனாட் பாலனத்துருவமாகிச்,
சதுமறை நவின்ற மாயோன் ருட்டுணைக் கமலப்போதே. (உ)

### ஸ்ரீதேவி (பெரியபிராட்டியார்)

மணிகொணெடுந் திரையாழிப் புடவிமாது
மதிமுகவொண்டிலத மெனவயங்குமாடத்,
தணிதிகழ் தென்குருகை யினுவீற மாற
னருண்மாரிவைபவமெம்மறிவாற் சொல்லத்,
துணிகுவமின்னமுதி லெழுதிருவே பிம்பந்
துவரிதட்செந்தாமரைமேற்றுலங்குமானே.
பணிமொழிமென்குமிழ் மறிந்து குழைபாய்வை வேற்
படை மதர்க்கட்கடையருணீ பாலிப்பாயே. (ங)

## சேனை முதலியார்

தேனுகும் பொழிற் றென்குருகாபுரி,
ஞான தேசிகனன் புகழோத மீ
வானநாடுறை மாமகிழ் காற்றுணைச்
சேனை நாதன் றிருவடி யுன்னுவாம். (௪)

## நம்மாழ்வார்

அற்றவ னுருவமாகி யனேக நூலுலகுக் கீந்து,
மற்றடங் கிரடோள் வேந்தாய் வனம் புகுந்தரக்க ரீட்டஞ்
செற்ற பினைவர் கட்டாயச் சிறியதூ தெழுந்து பின்னர்ச்
சிற்றிலைப் புளிக்குள் வந்த செல்வனை மனத்துட் கொள்வாம். (௫)

## பன்னிரண்டாழ்வார்

சீராரும் பொய்கையர் பூதத்தார் பேயார்
திருமழிசைப்பரன் வகுளச் செல்வன் கோளூர்
ஏராரும் மதுரகவி முனிவன் சேரர்க்
கிறைவனருட் பாகவத ரிருதாட்டுளி,
பாராரும் வழுதியர் முன் கிழியறுத்த
பட்டர் பிரான் கோதை யருட் பாணன் கையிற்,
கூராரும் வேற் கலியனின்னோர் செய்ய
குரைகழலெம் முடிக் கணியாய்க் கூட்டுவாமால். (௬)

## மதுரகவி, நாதமுனி, உய்யக்கொண்டார் மணக்கால்நம்பி ஆளவந்தார்

கண்ணினுண் சிறுத்தாம்போதிக் காரிசேயருள் பெற்றுய்ந்த
அண்ணன் மெய்ப் போத நாதமுனி திருவடியுஞ்ஞானம்,
நண்ணிய வுய்யக்கொண்டார் நலந்திகழ் மணக்கால்நம்பி,
தண்ணிய வாளவந்தார் தாளிணை மலருங் கொள்வாம். (௭)

## எம்பெருமானார்

நறைத்துள வலங்கன் மார்பன் நாண்மல ரடியினுன்கு
மறைத்தமி ழுதவுஞான வகுளபூ டணனை வாழ்த்தக்
கறைத்தலைப் பணிமன்னேயிக் காசினியதனின் முக்கோல்
இறைத்தவ னாகிவந்த வெதிபதி கழலுட் கொள்வாம். (௮)

## கூரத்தாழ்வான்

எண்டிசையோரும் புகழப்பணிமன்னே யிங்
கெதிபதியாய்ப் பரசமயத் திருளை வென்று
புண்டரத்தை நிலைநிறுத்தக் கிரிமிகண்ட
பூபதியும் சிவமலதோர் பொருளிலென்று
மண்டலத்துள் ளோர்களிடத் தொப்பம் வாங்கி
மாமுனிவன் பாலனுப்ப மகிழ்ந்து நோக்கிக்
கொண்டல் வண்ணனே பரமாய்க் குறித்தனுப்பும்
கூரத்தாழ் வானடியே கூடுவாமே. (கூ)

## பிள்ளைலோகாசாரியன்

வாரிதிகலையிற் சூழிம்மானில மீந்தருள்ளக்
காரிருட் பிழம்புதுஞ் சக்கதிர் பதினெட்டு நேரச்
சீர்கொளட் டாதசத்துள் சிறப்புறு ரக்சிய மோதெம்
மாரியன் பிள்ளைலோகா சாரிய னருட்பெற் றுய்வாம். (ய)

## தேசிகர்

வண்டின முரன்றிந்தள விசையயிலு
மருமலர்த்துளவினன் மதக்கூழ்த்
தெண்டிரை கொழிக்குங் கருங்கடற் புவியாஞ்
செறுவிடைப் பரமதக் களையைக்
கண்டறக்களைந்தின்னருட்புனல் விடுத்துக்
கனைந்தளர்வடைவுறுவளர்ப்பான்,
தண்டலையுடுக்குந்தூப்பில் வந்துதிவே
தாந்த தேசிகனடி காழ்வாம். (யக)

## மணவாளமாமுனி

தேனினமுரன்றுபாடும் மகிழ்மலர்த்தெரியல்வேய்ந்த,
ஞானதேசிகனுரைத்த நான்மறைத் தமிழ்ச்சுடர்க்கு,
மேனிலைத்தகழியாக்கி மெய்யறிவிடுநெய்யாக்கி,
மானிலம்விளங்கச்செய்த வரவரமுனிதாட்கொள்வாம் (யஉ)

ஆசார்யர்கள் துதி முற்றும்.

# சடகோப திவ்ய சரித்திரம்

## அவையடக்கம்

நந்தணிமகரயாழ்க்கை நங்கையார் குழவிசீர்த்தி,
செந்தமிழதனினாயேன் செப்புவானெடுத்துக்கொண்ட
தந்தகன் ககனமீனை யய்யமற்றெண்ணுவேனென்ன,
வந்தவாறமையுமுன்னீர் வையக மதினின்மாதோ. (௰௩)

நூற்றிதழ்க் கமலத்தோனு நுவலுதற் கரியதான,
மாற்றருந் தகை கொண்டோங்கு மாறன்றன் சரிதை தன்னைத்,
தேற்றமின் மனத்து நாயேன் செப்புவான் றொடங்கலீங்கோர்
ஆற்றினுண் மணலையோர்சேயளப்பதற்க் கெழுதலைய்க்கும். (௰௪)

விண்ணவர்க் கரிய மாறன் மேம்படு புகழைப் பாரில்,
நுண்ணியல் புடைய நாயேனு வலுவானெடுத்துக் கொண்ட
தெண்ணியார் கலி நீர் முற்று மேந்திளங் குழவி யொன்று
அண்ணி நுண் மூழை தன்னா லளப்பதை நிகர்க்கு மாதோ. (௰௫)

கரும்பினுரு வங்கோணி லதினுள் ளாருங்
கனிந்த சுவையினை யறிந்தோர் களைவார் கொல்லோ,
விரும்பிய கண்டுருக் கற்கு முரடதென்று,
விலக்குவரோ வறிவுடையோ ரவைகள் போல,
விரும்புவி யிற்றமியே னுலுரைக்கும் பாக்க
ளிழிவெனினு மகிழுறைந்த வேதிலாவண்,
பெரும் புகழ் நஞ் சடகோபன் காதை கண்டு
பேணுவரே புலமை கொணற் பெருமையோரே. (௰௬)

அவையடக்கம் முற்றும்.

---

# பாண்டி நாட்டு திருப்பதிப் படலம்

## நூல்

சீர்வளரெதிராசன் பொற்றிருவடிக்கமலம் போற்றிக்
கார்வளர்மேனியெம்மான் கண்ணையுற்றுயிர்களுய்ய
ஏர்வளர்மாறனாகவெழுந்தவதாரஞ் செய்யும்
பார்வளரிசைகொள் செல்வப்பாண்டி நாட்டணி விரிப்பாம். (க)

உலகெலாந் தனிபுரக்குமுயர் மழைமுகிற் குழாங்கள்
அலைவிலாதரியதீம் பயோததியென்னவானுர்ந்து
பலவளம்பெருகு தெண்ணீர்ப்பரவை நீர்பருகிச் சூலாய்
நிலவியதாளமீனுமீனிறக் கடல்போன்மீண்ட. (உ)

திருமகிழலங்கன்மார்பன் றிருவடித்துணைக் காட்செய்வான்
கருமிடற்றரனுர் வாழ்வெண்கையிலையென் கிரியெழுந்து
வருவபோன்முகிற் குழாங்கள்வானிடை யடர்ந்துவாரிப்
பொருதிரையருந்தி நீலப்பொருப்பென மீண்டவம்மா. (ஙு)

அலம்புவண்டிருந்ததார் நம்மரிந்தமனலரேயங்கைத்
தலமமர் திகிரிமானத் தடித்தியங் கவன்றனும
வலம்புரித்தொனியே யென்னவாணிடை யதிர்ந்திளங்காற்
சிலம்பிடை யவன்றன் சாபமுமிழ் கணைத்திரள்பேர்ற்பெய்த. (ச)

மந்தர கிரியை வென்று மல்லீடர்த் துயர்ந்து நீண்ட,
சுந்தரத் திருத்தோளண்ணல் சுடுசரந் துரந்து மேனுட்,
கந்தர வடிவரக்கர் கனைகளைக் களையக் கண்டே,
யந்தரத் திமையோர் தூற்று மலர் மழை யெனவான் பெய்த. (ரு)

விரிதரு முகட்டின் மீது விடாதுறப் பொழியுந் தாரை
அரிய விண்ணுலகத்தான வமரரிவ் விளங் கானச்சி
யுரிய தன்னகர்க்குச் சேர வுயரு மிம் மலையைக் கொள்வான்
சொரிதரு வடங்கள் போலத் துலங்கினதுதைந்து மாதோ. (சு)

துவளிலாடக முகட்டிற் ஞேன்று பல்லருவி யீட்டங்
கவளமும் மதப்புழைக்கைக் கரிகட மருப்பு குக்குத்
தவள வொண்டரள மீர்த்துச் சங்கையி றநக்கள் சாடிக்
குவலயத் திளஞரோகை கொள்ள வந்திழிந்த வம்மா. (எ)

மண்ணிடை யிழிந்த தோயம் வாரணத்தினமு மானு
மெண்ணிடற் கரியதாய விடபத்தின் குழுவு மீர்த்துப்
புண்ணியம் புரிவார் நெஞ்சம் போலெங்கு நிரவி வந்து
தண்ணிய திரைகண் மோதுந் தாம்பர வன்னி சேர்ந்த. (அ)

தடந்திரைக் கரத்தின் வாரித் தரளமா மணிகள் வீசி
யடர்ந்த வன்னீத்தத் தூடே யமிழ்ந் தெழு மரத்தின் ஞேற்றம்
மிடைந்த வைம் படைகளேந்தும் விமலன் பாற் கடலே வேண்டிக்
கடைந்திடுங் காலத்துற்ற கற்பகத் தருவைப் போன்ற. (கூ)

வேறு

கோடி ஞேடக் கிகிரியுங் கொண்டுமால்
ஈடி ரூமரைக் கண்ணிடை யிற்பசு
மாடு மேவி மறிகழுற் சேர்தலால்
ஓடுமப் புனல் நாரண ஞெக்கு மால். (ய)

மலே களேந்திடை மாதரைச் சேர்ந்துமீ
துலேகுருந்த மொசித்து மருதிற் போய்
விலேயுயர்ந்திடு மான்பின மேவலால்
அலே கொளப்புனல் கண்ணனையன்னதே. (யக)

ஆன வெள்ள மரி புலி வேங்கை மான்
ரூனவாரணஞ் சம்பு எண் கேனமே
ஏனல் சந்தகி லின்வகுளஞ் செருக்
கூனமில் பல வோங்கும் வளே புனே. (யஉ)

குங்குமம் சண்பகம் பனே கோங்கில
வங்க மேலம் வசம் பொடு சாதி மா
பங்கம மற்றிடு பற்பல பாதவ
முங்கணிப்பில் விலங்குகளுங் கொடு. (யங)

ஏக்க மொடு மெய்யின ரெயிற்றியர்
தாக்கருந் துயர் தன்னிலழுங்கிட
வாக்கு செந்தினை யாரிடி தன்னொடுந்
தேக்கிலைக் குடில் சேரவரன்றியே. (௰௪)

செறிந்து பற்பல நல்வளஞ் சேர் தரும்
குறிஞ்சி விட்டுக் கொடுங்க ணரவமும்
நெறிக்கிரிந்திட நின்றெரி வீசியுள்
வறண்ட பாலையில் வந்து கலந்ததே (௰௫)

அன்னிலத்தைக் குறிஞ்சிய தாக்கியே
மன்னு மாங்குள யாவும் வரன்றியே
துன்னு முல்லை நிலத்திடைச் சூழ்ந்தாற்
தன்னிகர்த்திடுந் தாம்பிர வன்னியே (௰௬)

அண்டர்வெள்ள மலமர வன்னவர்
மண்டுபொடிவயின்புகுந் தாங்குள
தண்டெளித்தயிர்த்தாழியளை நெய்பால்
கொண்டு வெண்ணதிக்கோலந்திகழ்ந்ததே (௰௭)

மல்லலான் விடை மற்றிளங் கன்றுடன்
முல்லையங்குழலாயர் முகிழ்முலை
வல்லிமார்கள் வளையும் பணிதுகில்
மெல்லமெல்ல வுண்மேவி வரன்றியே. (௰௮)

மற்றுமுள்ள வளங்களை வாரியே
கொற்றவெண்குடைக் கோமகன் சூரிதன்
நற்றவத்துதி நந்தன் புகழெனு.
வெற்றநீர் மருதத்திடை யேய்ந்ததே. (௰௯)

(வேறு)

மருப்பொடிக் கமழுஞ்சோலை வான்றருக் குலங்கள் சாடிச்
சுருப்பொடு மயில்களாங்குச் சூழ்தரும் பறவை பாய
விருப்பொடு காக்கு மள்ளர் வெள்ளங்கள் வெருக்கொண் டோடக்
கருப்பொடித் தயல்சூழ்வாளை கப்புளாரங் களீர்த்து. (௨௰)

மள்ளர் தம் சேரி யன்னோர் வளர்த்திடு மெகினங் கோழி
புள்ளின மிடப மேடம் பூங்கிடிக் குருளையோடு
வில்லுமுக் கனிகளிர்ந்து வேரி மூண்டகக் காடுற்
றுள்ளிதழ்த் தேனினோடு மொன்றிச் செங்கிறத்ததாகி (உக)

கொங்க விழி ரதத்தேனைக் கொள்ளை கொண்டளிகள் பாடும்
பங்கய வாவி தோறும் பரந்து நித்திலங்க ளீனுஞ்
சங்குலாம் பணை கடோறுந் நடையறப் படிந்து நீலத்
துங்க வெண்டிரைகண் மோதுந் தூயநீர்க் கடலுட் சேர்ந்த. (உஉ)

தேர்ந் துணர்ந்தோர்த நெஞ்சிற் றெளிவுறந் நீத்த நீடு
வார்ந்தலை யகடு கீண்டு வகிர்கர வொதுக்கல், வெட்போர்
ஆர்ந்த தோள வுணன்றன்னை யரியுருவாகி யெம்மான்
ஈர்ந்தணி பூண்ட மாலை யெழிலினைப் பொருவு மாதோ. (உ௩)

நாடுகடோறும் பாய்ந்த நறும்புன றடையாயுள்ள
கோடுக ளனைத்துஞ் சாடிக் குமுறிடு மொலியுஞ் செந்தேன்
ஓடி தண்டலைகள் யாவு மொண்சிறை யறுகாற் றும்பி
பாடு மத்தொலியு மாகுப் பரந்தன வெங்கு மாதோ. (உ௪)

கட்கடை குழையைத் தாவுங் கடைசியர் குழுவினோடும்
உட்களி தூங்க மள்ள ருள்ளுதற் கமைத்த வூனை
மட்கலத் தெடுத்து மீது வைத்தல ரணையின் மேய
புட்குல மிரிய வந்து புகுந்தன ரனந்தர் மாதோ. (உ௫)

வெட்டுவர் சுமப்பர் வாரி வீசுவர் வரம்பை நேராய்க்
கட்டுவர் மிதிப்பர் கோட்டுக் கருநிறப் பகட்டினத்தை
மட்டறப் பூட்டிச் சாறு வார்கரும பொடித் தனேகர்
எட்டு மாதிரமுமஞ்ச வேரடித் துழுவர் மாதோ. (உ௬)

முருகவிழ் கமலப்போதின் முத்தினம் வளைகளீனக்
குருகுதன் கருவாமென்றே குறித்து வெண் சிறகான் மூடி
அருகிருந் தடைகிடக்கு மகன் பணைத் தலத்து வானொற்
பெருகவென் றகத்தினுள்ளிப் பெய்குவ ரெங்கும் வித்தே. (உ௭)

பருமருங் குலைநற் பாகற் பழங் கனிந்திழிந்த தேனும்
மரு.மலர் விரியுஞ் சூத வார்கனித் தேனு மீத
விருமரம்பையின் பலங்கள் வீழ்ந்திழி தேனும் பாயத்
திருமகிழுலங்கள் பார்பன் சிந்தைபோல் வளருஞ்செந்நெல். (உ௮)

இற்றொடி நுழை நுசுப்பு மிரணியத்துகளை நேர்தே
மற்றொடு தனப் பொருப்பும் வாள் பொரு விழியும் பெற்ற
பொற்றொடிக் கடைசி மார்கள் பூந்துகிற் கொடிமென் பூவி
வற்றொடு களைகள் யாவும் வரைந்து பின் குரவை செய்வார். (௨௯)

வரி வளை யலறி யீன்ற மணிதிகழ் கழனி தோறும்
விரிகளை கடியு மாதர் விளங்கு நன் முகத்தை நோக்கி
உரியமா மதியமென்ன வுண்ணெகிழ்ந்தலரு மாம்ப
றரியல னெழுந்தானென்னத் தாமரை மலர் வாய் மூடும். (௩௰)

அந்தரத் தடார்ந்த வாச வைந்தரு நீழல் வைகுஞ்
சந்த வானினங் கறிக்கச் சலிப்புறு தோங்கித் திண்டோள்
மைந்தரைக் கண்டகற்பு மகளிர்தங் குழுக்கணிக்
கந்தரஞ் சாய்ப்பதே போற் கவிழ்ந்தன சாலியெங்கும் (௩௧)

அகட்டிரசித மீன்றுவ வரிந்தரி யனைத்தும் வாரிச்
சகட்டினு மெருத்தின்மீதுந் தலையினுங் கொடுபோ யண்ட
முகட்டினிற் படியப் பல்போர் மூட்டியே பிணையனீலப்
பகட்டின மனந்தம் பூட்டிப் பற்பலர் தெழிப்பர் மாதோ. (௩௨)

உளங்களி தூங்கவாரு மொண்டொடித் திரளினோடுந்
தளந்தளமாக வெங்குஞ் சார்ந்தநெற்பொலியை வாரிக்
களங்களைப் புதுக்கித் தூய காற்றினிற் றூற்றிப் பின்ன
ரளந்தளந் தவர்கடங்க ளகத்தினிற் கொணர்வர் தாமே. (௩௩)

காவியும் கிடையு நேமிக் ககமுமென் கமலப்போதுந்
தாவிடுஞ் சினைவராலுஞ் சைவலத் துணருஞண்டுந்
தூவியவனமு மீனுந்தூய தெண் டிரையுங் காட்டி
வாவிக ளனைத்து மாதர் வடிவெனப் பொலியுமாதோ. (௩௪)

தாதினி னிறையு மம்பொற் றடத்தினிற் றிகழ்வெண்கஞ்சப்
போதினி லினிதமர்ந்து பொலிவுறு மனத்தின் றேற்ற
நீதியின் றுயர்ந்தமாற னிகழ்த்துமத் தமிழை யோர்வான்
மேதினிதன்னில்வாணி மெய்த்தவம் புரிதலொக்கும். (௩௫)

வெடித்திடுஞ் சினைவரால் போய் வெண்மதிச் சசத்தைக் கீறி
வடித்திடு மமுதத்தோடும் வாரணிந் தடர்ந்த கொங்கைத்
தொடிக்கைய ரிருண்ட கூந்தற் சொரிந்திடு நறவுமொன்றி
மடித்தலை யெறிந்தனேக மாநதிக்கிளையா யோடும். (௩௬)

கயமெலாம் பறவை கூடுங் காவெலா மயில்களாடும்
வயலெலாங் கரும்பு நீடும் வரம்பெலாந் தேன்களோடும்
வியன்றருக் குலங்களெல்லாம் விளரி வண்டினங்கள் பாடும்
அயலறப்பெருகி நாடு மரும்புனல் குவடுசாடும். [௩௭]

கணையினுங் கொடியதாகுங் காவியங் கருங்கட் செவ்வாய்த்
துணையிள முலைக்கரும்பொற் றொடியுழத் தியரின் வெள்ளம்
பணையிடத் தடர்ந்துசெய்யும் பணையிகழ் குரவையோடு
கிணைதட் வொலிகளெங்குங் கெழுமியார் கலிபோ லார்க்கும். [௩௮]

வாளைவிண் முகடுதாவு மாமரங்கனிக நேவும்
வேளை மாங்குயில்கள் கூவும் வெள்ளனம் வயல்கடாவு
நீளரிமலர்த் தேனுண்ணு நீர்முகில் பொழின் மேனண்ணும்
பாளைகள் மிகவுமொன்றும் பனிவளர் கமுகின் கண்ணும். [௩௯]

தாமரைத் தடங்கடோறுந் தடமுலை மடவாரீட்டம்
பூமலர்க் கழனிதோறும் பூங்கரு வண்டுப் பாட்டம்
தேமருபொழில்கடோறுஞ் செழிப்புறு மயில்களாட்டம்
தோமறநோக்கும் பக்கந் தோறும்பன் மலர்சேர் தோட்டம். [௪0]

வேறு

குடங்கையினகன்ற கொலைத் தொழில் புரியுங்
கூற்றிணைப் பழித்த வெவ்விழிகொண்
மடந்தையரிருண்ட குழற்றிரட் கருத்து
மணந்திகழகிற்புகை ககனத்
தடர்ந்தன விமையா தவர்கள்கண் ணெச்சின்றூட்டணி
யழித்திடா நீலப்
படந்தனை விரித்து மறைத்தன கடுப்பப்
படர்ந்தன விண்ணிடமெல்லாம். [௪௧]

வண்டடைம்பிடு பூந்தண்டலை யுகுதேன்
வழிந்து பாய்வுற வளர்கன்னல்
அண்டர்தம்பதியிலடைய வாங்குலவு
மானினங் கறித்திடச் சிதறி

எண்டிசை யிடங்கண் முழுவது மறைய
வெழின்மணி யினங்கள்வீழ் தோற்றம்
விண்டலத் திரவி தனக்குடைந் துடுக்கள்
வெடித்துவீழ்ந் திடுநிலைப் பொருவும். [௪௨]

போதலர்ந்திரத நறவிழிந்தொழுகு
புனிதமா முல்லைய நிலத்தில்
யாதவரியற்றுங் குழலிசை யினைக்கேட்
டைம்பொறி வழியுளஞ் செலுத்தா
மேதகு தவரு மெய்யறிவிழந்து
மேனாளி ருந்தமை கருதி
மாதவ னெழுந்தா னெனவவன் றனையே
மருவியின் புறவமேன் றெழுவார். [௪௩]

எழிலிகண்படுக்குந் தண்டலை யரங்கி
லிவர்முருக் கலரொளி விளக்கவ்
வுழிவிளங் கிடவொண் சிறையறு பதங்க
ளுறுமளிக் குலங்கள்பண் ணியற்ற
பழியிலன் புறமேன்மையமரென விருந்தொண்
பறவைகண் மகிழ்வுற விமையா
விழிகொளுஞ்சிகிகள் பயிலின மடவார்
விழைவொடு நடிப்பன நடிக்கும். [௪௪]

அஞ்சனமணிந்து விடத்தினிற் கருத்தை
யரிபரந் தகன்றகண் மடவார்
மஞ்சனம் புரிநீ ருருவிபாய்ந் திடநெல்
வளர்வன வகன்பணை முழுதும்
பைஞ்சிறைக் கிளியும் பூவையுமிருந்து
பாடுவ சோலைகடோறும்
கஞ்சகன் மலருங் காவியுந் திகழ்வ
கயந்தொறும் வழுதிநாட் டகத்தே. [௪௫]

காவினிற் றிகழும் பலவினற் கனியைக்
கறித்தொரு பாகமாய்க் குரங்கொன்
றுவவிற் புசித்து விட்டிட வதனை
யுவந்தொழுந் தொழுகரு முகமும்

வாவிமுன்கறித்த விடத்தினைப் பிடித்து
வாயை வைத் தருந்துதல் கதிர்கா
ரேவிருட் பகையைக் கரும்பை யிராகு
சினங்கொடு தீண்டுதல் கடுக்கும். [சசு]

அற்புதமிகுந்த விருநிதி யுறலா
லம்புயத் திருமகிழ் வுறலால்
பற்பல வண்ட ருகப்புடன் மிடைந்து
பரிந்துலவ பான்மையான் மின்னர்
கற்பகமருவுந் தன்மையா லெவருங்
கணிப்பரு முயர்ச்சியினுலும்
பொற்பினின் மிகுந்த பொன்னகர்க் கிணையாய்ப்
பொலிதரும் பாண்டிநன்னடு. [சஎ]

உந்திமே லொருநான் முகனை முன் படைத்தன்
னேன்றனைக்கொண்டுவெண்ணீற்ற
னிந்திரன் முதலாந் தேவரை யுலகத்
தெண்ணருஞ் சராசரத் தொகையைத்
தந்திடப் புரிந்தங்கவைதோறு நிறைந்து
சாக்ஷியாயிருந்தருள் பெருமான்
வந்துதித்தருளும் பாண்டி நாடதனுள்
வளத்தினை யுரைத்திடற் பாற்றே. [சஅ]

---

ந-வது பாண்டியநாட்டுத் திருப்பதிப் படல முற்றும்



திருக்குருகாபுரி க்ஷேத்திரமேன்ற ஆழ்வார்திருநகரி, ஸ்வாமி ஆதிநாதராழ்வார் சந்நிதி வீதி.



திருக்குருகாபுரி க்ஷேத்திரமென்ற ஆழ்வார்திருநகரி. ஸ்வாமி ஆதிநாதாழ்வார் சந்நிதி வீதி.

# திருநகரப் படலம்

## வழிபடு தெய்வ வணக்கம்

தண்டலை சூழ்ந்தில குறுசாளக்கிராமஞ்
சார்ந்துழியோர் பதினாறு சயினர் வந்தாங்
கண்டியெம்மோ டடல்வாதம் புரிவீரென்ன
வன்னவர்க்கா யிரம்பணங்கொ ளரவாய்நின்று
புண்டரிகத்தாளவனைப் பரமதாக்கி
போதவலர் தன்னடிக்கட் பொருத்து ஞானத்
திண்டிறல் கொளெதிராஜன் கழலைவாழ்த்தித்
திருநகரப்படல மதைத் தெரிவிப்பாமால். [க]

சங்கமீனுந்தரள நிலவுல
கெங்கு மாரகழின்புடை யேய்பொலன்
றுங்க நீளெயில்சூழ் குருகாபுரி
பொங்கு வாசவன் பொன்னக ரொக்குமால். [உ]

வச்சிரத்தி னிடைக்கிடை மாடுபெய்
மச்சிவர்ந்தொழிர் மாளிகையும் பளிக்
குச்சிமேயவுயர் மணிமேடையும்
பச்சையாமறையும் மடைப்பள்ளியும் [௩]

பம்பரத்தை நிகர்த்த பயோதரக்
கொம்பனார்கந்து கம்பயில் கூடமும்
வம்புலாந்துணர் மஞ்சமு மாமணித்
தம்பநாட்டுஞ் சயனத் தலங்களும் [௪]

பீதகத்திற் சமைத்தொளிர் பித்தியுங்
கோதறும் வயிடூரிய கும்பமுற்
றுதவன் றெட்டவிர்ந்த சிகரியும்
மேதகத்தின் விமானமுங் கோயிலும். [௫]

கள்ளலம்பு கருங்குழல் வாணுதல்
அள்ள யிற்க ணடார்ந்தெழு மாமுலை
கிள்ளையின் சொற்கிளவிநன்மாதர்க
டுள்ளியாடிடு தோரண வாயிலும். [௬]

வானிருவு கயற்கொடி வைகிய
பானிலாமணி மேடையின் பந்தியுந்
தூனிறத்தண்மதி முகத்தோகைமார்
கானிசைக்குங் கருமணிச் சாலையும். [எ]

பன்னிறக் கதிர்வீசும் பரப்பினாற்
றன்னிராவும் பகலும் துலங்கிடா
நன்னகர்த் தெருவீதி நலத்தையா
மின்னதென்றிங் கெடுத்துரைப்பாமரோ. [அ]

விந்தையிற் சிறுவோர் விளையாடிடத்
தந்தவாழி சமைத்துறு தேரினிற்
பந்தனஞ்செய் பரியின் விலாழிநீர்
சிந்தவீதியிற் சேறுறு மாதரோ. [கூ]

சீதவாரந் திமிர்ந்த சிமிழ்முலை
மாதர்வீணை மலர்க் கைப்பிடித்து நற்
கீதமோ தொலியுங் கிளர் மாதவர்
வேதகோடமு மேயதவ் வீதியே. [௰]

நூலையுற்று நுடங்கிடை மாதரை
வேலையுற்று மிளிர்ந்தகை வீரர்கண்
மாலையிட்டு மணம்புரி பல்லிய
மோலையுற்ற கடலொலி யொக்குமே. [௰க]

கெண்டையொண் கட்கிளி மொழிமாதரின்
கொண்டை கொண்டவிர் கோதை நறவுக
வண்டலிட்டு மறுகு வழுக்கமே
வொண்டொடித் திரள்யாஞ் சொலவொண்ணுமோ. [௰உ]

நீனிறக்கற் சிகர நிறைத்தெழு
மேனிலைக்கண் மிளிர்கயற்கேதனந்
தேனினின் சொற்றெரிவையர் கட்கிணை
தானிருக்கத் தவஞ்செயன் மானுமே. [௰ங]

ஒள்ளிருஞ்சுதை மாடத்தினுற்றவிழ்
கள்ளிருட் குழனங்கை முகத்தொளி
வெள்ளி வெற்புயர் வெண்மதி மாமுகிற்
குள்ளிருந்து வெளிப்பட லொக்குமோ [௰ச]

பூவணத்தராளத்திற் பொலிந்தடர்
காவணத்தின் கவின்றிகழ் பற்பல
வாவணத்துளமைந்த சிறப்பையிப்
பாவணத்திற் பகர்ந்திடற் பாலதோ. [௰௫]

ஆரநானமலர்ந்த நறைகொள்கர்ப்
பூரநீள்விலைப் பொற்றுகி ருவுழைக்
கோரமா னிடபங் கலை கோரதம்
வாரணங்கண் மலிந்தது கூலமே. [௰௬]

சிந்தியாது பொய் செப்புதலில்லரிச்
சந்திரன் றனிற்றூழ் குனரின் மதி
மந்தராய்த் திரிவாரிற்சுரகுரு
வந்தணன் றனிற்றூழ் குனரற்றதே. [௰எ]

இன்னலுற் றிரப் போர்க்கிறை யீவிலாப்
பொன்னைவைத்துப் புகல் சொல்லும் புல்லரி
லன்ன முற்றுறங்கும் பணையங்கர்கோன்
கன்னனுக்குக் கடையின ரில்லையால் [௰அ]

விட்பாந்த புகழ்ப்பெரு மேன்மையர்
திட்புயச் சிறுவோர் சிலர் சேவலுள்
முட்பொரும் படைகட்டி முயலொலி
மட்கலைக் கெதிர் மாறுகொ ளோலமே [௰௯]

மின்னி னுண்ணிடை மெல்லியலார்கடம்
மன்னனோடு மகிழ்ந்து புணர்ந்திட
வன்னை யில்விட் டவரவ ரிற் புகல்
பொன்னினுள்வந்து புக்கது போன்றதே. [௨௰]

காதலன் பொற்கலையை நெகிழ்த்தமெல்
லோதிநாணி விளக்கை யொளிக்கவம்
மாதுபூணு மணியொளி வீசிடப்
போதவெட்கிக் கரங்கண் புதைக்குமால். [௨௧]

மானறுங்குழல் மங்கைய ரன்பரோ
டானவின்ப மனைத்து மிகுளையர்
பானவில்கப்பசியுறு மிற்புலி
மோனமோடுண் முழுமையும் நோக்குமே. [௨௨]

காவி நோக்கியர் காதல ருடலின்
மேவுமாமணி மேனை மொளித்திட
வாவலோ டெழுந்தாட வரன்னரென்
றேவியக்தொழ வுன்னி நகைப்பரால் [௨௩]

வற்றனைத்து மடந்தையர் மாடமு
மேற்றுநாளு முடிபதி தான்செலப்
பெற்றதாலவட் பெய்விளக் காவியாற்
கற்றமெய்யைக் களங்க மென்பார்களே [௨௪]

கோலமாடக் குழக்குண் மடந்தையர்
சாலவாயற் றிறந்து தனித்தனி
வேலினேர் விழிநோக்கொளி வீதிவாய்
நீலமாமலர்த் தோரண நேர்ந்தவால். [௨௫]

அஞ்சிறைம் புனுகு மணிந்துவா
சஞ்சிறந்த குழலியர்தத்தை பாற்
செஞ்சொனும் பயிற்றச் செலற்கது
பஞ்சரத்துட் பதுங்கு மணத்தினால். [௨௬]

தென்றமிழ் வடநூலெறி வோர்கடம்
முன்றிறன்னிற் புராண முதுப்பொருள்
பொன்றிலாது புகன்றிட மாந்தர்கள்
சென்றுகேட்டுத் தினமு மகிழ்வரால். [௨௭]

மானநீர்ப் பொருனைநதியின் வடக்
கானினேறரன் கோயிலமைந்ததான்
மேனிலைத் தென்விரசைக் கவாசியா
ஞானநாடெனலா மிந்நகரையே. [௨௮]

வேறு

ஏறுமிவ் வளங்கொள்குரு காபுரியி னூடே
யீறிலொளிவீசு பொனியற்றெழு நிரைத்த
வீறணியு மண்டபமுண் மேவியருள்காரி
மாறனரி யாதன மகிழ்ந்தினி திருந்தான். [௨௯]

வாமரைநிகர்த்தவ்ழி மங்கைய ரனேகர்
சாமரையிரட்ட வெகுதாதியர்களின்று
தாமரையலர்க்கு நிகர்தாளிணை பெயர்ப்பத்
தாமறைநல் வேதியர்க ளோதுதிர மியமப [௩௰]

வைரமுடி சூடினிது மன்னவர் கடங்கள்
செயிரினை யெடுத்தினிது செப்பிட மருங்கே
யுயிரனைய மந்திரிக ளுற்றவை யுரைப்ப
மயினிகர் கருங்குழல்கொண் மங்கையர்கள் பாட [௩௧]

வலங்கொள் தட மார்பினிடை வண்டிமிரு நிம்ப
வலங்கலொடு வெண்டரள வாரமு மிலங்க
விலங்கரிக ளொண்புய மிடைந்த வலயங்கள்
இலங்குறவெண் மண்ணுத விருந்தொளி தயங்க : [௩௨]

அளக்கரு மளக்கரி னதிர்முரசொலிப்ப
விளக்கொளி யயிற்படை விரற்பதுமமின்ன
தளத்துள வலங்கலணிதாயமுகிலே வந்
துளத்தினிதுறக் குழைகளொண் சுடரெறிப்ப. [௩௩]

கொந்தலரு மோதியர்கள் கும்பமொடு தீபம்
வந்தினிதெடுப்ப மதிவாணில வெறிக்கும்
சுந்தரமணிக்கவிகை சூழவதனீழல்
இந்திரனெனப் பெரிதிருந்தனன் மகிழ்ந்தே ; [௩௪]

வாசமலர் கொண்டடரு மங்குலினிருண்ட
கேசமடமங்கையர் கிளர்ந்தொளிருமம்பொற்
றாசுடனெய் வாசமணி சுண்ணமு மெடுத்தே.
வீசவடன் மைந்தர்பலர் மெல்லடியில் வீழ. [௩௫]

பட்டமறு வற்றருள் பரந்தெழு நிலாவின்
வட்டமதி யொத்தொளிசெய் வத்திர மிலங்க
மட்டுறுமலர்க்கமல மானவிரு கண்ணின்
றெட்டிசை தழைத்திட் வருட்டிரை யெறிப்ப. [௩௬]

இவ்வண மகிழ்ந்தினி திருநகருள் சுரந்து
நவ்விநயனத்துடைய நங்கையொடுநீலப்
பவ்வவலை சூழ்புவி பரித்து முறை செங்கோற்
செவ்விதினியற்றுபொழு தற்றதுரை செய்வாம். [௩௭]

---

சு-வது திருநகரப்படல முற்றும்.

# திருக்குறுங்குடிப் படலம்

## வழிபடு தெய்வ வணக்கம்

வெண்டிரை கறங்குங் கடனிலவரைப்பின்
மிடைந் துயிர்ப்பயிர் கொடுங் கலியாம்
அண்டுவெங் கதிரான் மிக்குடல்வெ தும்பி
யழிதரா தல்கலின்ஞான
மண்டுவிண் மாரி பெய்தருளியரா
மானுசன் றாட்டுணை வணங்கி
கொண்டல்கண்படுக்கும் தண்டலை யுடுத்த
குறுங்குடிப் படலமின் றுரைப்பாம். [க]

பொங்குநீ டிரைகொ ளுவரியந்தானைப்
பூவைமெய் வழியிலோர் குடைக்கீழ்த்
தங்கவைத் தனேக நாளர சியற்றித்
தனையனில்லாமையின் மெலிந்து
கங்குலிற் கரிய கூந்தலந் துவர்வாய்க்
கயற்கணங் கற்புறு நங்கை
பங்கய மலரின் முகமதி நோக்கிப் பார்த்திபன்
மொழிசில பகர்வான். [உ]

இழையிடை புகுதற்கிட மிலாதடர்ந்த
விளமுலை துடியினே ரிடைநால்
புழைநெடுங் கரமென் பிடிநடைத் திருவே
பொற்கலத் தடிசிலிற் சிறுகை
தழைவுற வளைந்தங் கிளநகை புரிந்து
தவழ்நடை பயிற்றிடு மழகார்
மழவிளஞ் சேய்க டமைப்பெ றாதுற்ற
வாழ்வினுந் தென்பய னென்றான். [ங]

சிற்றெறும் பணியி னடப்பன கடுப்பச்
சிறுமயி ரொழுங்குமே கலைசூழ்
புற்றரவல்குற் றமனியக் கொடியே
பொன்னக ரமிழ்தினு மினிமை

யுற்றமென் குதலைச் சிறுவர்கண் மிழற்று
மொருசொலிச் செவிப்புலத் தேர்க்கப்
பெற்றில ரன்றோ மகரயாழ் குழலைப்பேசு
வரினிதெனப் பிறர்க்கே. [ச]

துப்பித டளவின் முகையணி முறுவற்
றோகைநன் னெறியிலோர் மகவைக்
கைப்பெறி னேழு பிறப்பினு மியற்றுங்
கடும்பவந் தொலைத்துமா விரசைக்
கப்புற மிருத்து மெனிற்புவி துறந்தா
ரணியமுற் றைம்பொறி யடக்கித்
தப்பில துடலங் கருகவைந் தழலுட்
டவஞ்செய றரும்பய னெவனோ. [ரு]

ஐங்கணைக் குறிசில் வசந்த மண்டபமுற்
றணிசெயு மரம்பையங் குறங்கும்
பங்கய மலரின் மிதிக்குமுன் சிவக்கும்
பதமுநின் றுளிகொள் பெண் மயிலே
செங்கர மதனு லயனருள் கொடுநஞ்
சென்னியிற் பொறித்திடும் பொழுது
சங்கநன் னிதியுந் தரணியும் பெறுவீர்
தனைய ரில்லென வெழுதினனே. [சு]

இந்திர தனுவை நிம்பபத் திரத்தை
யிகல்செயும் புருவநற் கமுகின்
கந்தரம் வருக்கைக் கனிமொழித் திருவிக்
காசினி யதனுணம் மரபில்
வந்ததிண் டிரடோள் மன்னரி லெவரு
மகவின்நல் வாழ்வுற நமக்குச்
சந்ததி யிதுநாள் வரையிலா ததற்கென்
றூழ்வினைப் புரிந்தன மென்றான். [எ]

வண்டினம் பெடைக ளுடனிருந் தமுதுண்
மருமலர்த் தொடையணி குழலாய்
கண்டினு மினிய மழலைமென் மொழிகொள்
கான்முளைப் பொருளினு நாளுங்

கொண்டிலா துணவு முறக்கமும் பெரிதாய்க்
குவிமுலைப் போகமே நுகர்ந்து
தெண்டிரைக் கடல்சூழ் புவியுநன் னிதியுந்
திறமென வாழ்ந்தன மென்றான்; [அ]

இவ்வணமெலிந்து பகையின ருகிர
மிருஞ்சிறைப் புள்ளினுக் கிரையாய்
வவ்வுமொள் ளயில்வேற் படையுறு மங்கை
மன்னவனுரைத்தசொல் வினவி
நவ்வியி னயனச் சுணங்கணிந் தடர்பொன்
னகமெனத் திமிர்முலை வனசச்
செவ்விகொள் பதனவனநடைத்தெரிவை
செப்புவள் சில மொழியன்றே; [கூ]

இன்னல ரெனுமும் மதமுகும் புழைக்கை
யிபமெனுங் குழுவினுக்கரியாம்
மன்னவெவ் வுல்கு மகவிலார் தமக்கு
வலிகொள்புத் தெனுநர கென்று
நன்னெறி யுணரு மறிஞர் நின்னவையி
னவில்வதைக் கேட்டு நாமிதுநா
ளுன்னின மிலையப் பொருளிலா தெவ்வாழ்
வொன்றினும் பயனில்லை யென்றாள். [ம]

என்று மன்னவனு மங்கையுஞ் சிலநா
ளிரங்கியிந்நாள் வரை யினுநாஞ்
சென்றமுப் பொழுது மிடைவிடா திறைஞ்சுஞ்
செழுங்கரு முகிலெனப் பொலிந்து
நின்றநம் பெருமான் றனதடிபரவி
நிகழ்த்துவ மின்றவ னமக்கு
மன்றலங்குழலி யஞ்சலென் றருளி
மகவரு மளித்தருள் குவனெல், [மக]

வந்தரசியற்றி வாழ்குவ மாங்கம்
மகவரு மளித்திடா னெனினுஞ்
சுந்தரவதனத் தெரிவை யங்நெறியே
சூழிருஞ் சடைமுடி தாங்கிச்

செந்த ழலிடைநின் றருந்தவம் புரிவோர்
  செறியுமக் கான மேகுவமென்
றந்தமன் னவர்கோன் மங்கைபா லுறுதி
  யறைந்தவ ருடன்றளிக் கெழுந்தான். [மஉ]

கஞ்சநன்மலரை யனைய வானனத்துக்
  கன்னிய ரிருவர்முன் னெதிர
மஞ்சினு மிரட்டி யதிர்குரன் முரசும்
  வலம்புரிச் சங்கமு மொலிப்ப
வெஞ்சலி னிறைநீர்த் தசும்புடன்மலரு
  மினியநற் கனிகளும் வரமுன்
அஞ்சுக மொழியின் னணங்குமன் னவனு
  மறிந்தறிந் தகமகிழ்ந்தனரால். [மரு]

பன்னகமிசை நின்றெழுந்து மேனிவந்த
  பருமணிப் புரிசையும் பரந்த
மின்னொளி விரிக்குமாட மண்டபங்கண்
  மிடைந்தபன் மறுகையுங் கடந்து
கன்னலி னமிழ்திற் கனிந்தமென் றீஞ்சொற்
  கரும்புய னிகருமொண் கூந்த
லன்னமென் னடையி னணங்கு மன்னவனு
  மன்பினத் தளிவலம் வந்தார். [மச]

செய்யவொண் கமல மலர்த்தவி சுகந்த
  திசைமுகத் தயனுறு மிடர்தீர்ந்
துய்யவின் னமரர் மஞ்சனமுதலா
  வுள்ளன வெடுத்தினி தளிப்ப,
மெய்யவன் பொடுமா ராதன மியற்ற
  விண்டொட ராசையங் கிரியோர்
துய்யவண் டினங்க ளிசைசெய்பைந்துளவத்
  தொடையல்கொண் டடியிணை பணிய. [மரு]

ஒன்னலரெனும்வெந் திரைக்கட லினையுண்
  டொளிருமொண் டிகிரிமுன் னடையின்.
இன்னொளி மழுங்கிப் பரிபவ முறுவ
  மென்றுருமாறிவந் தருக்கர்

பன்னிரு வருமுள் ளுவந்திறைஞ்சியடர்
பவரையோ லக்கமா யிருமின்
என்னவொ ரிருகை குவித்து வேகுபராக்
கென்றவர் கட்டியம் மியம்ப [௬௬]

புகரில் யாழெடுத்து மாடக முருக்கிப்
புரிகரம பிசைத்திசை நிறுவிப்
பகரெழு வகையி னிசைகளை முறையிற்
பாணியிற் சுதையினு மினிதாய்
அகமகிழ் வொடுமெக் கின்னர ரியற்ற
வவிர்ந்த செஞ் சடைமுடி தரிக்கு
நிகரிலாப் பருகுமார்க்கண்டரு மருங்கி
னெடியமா மறையினிற் புகழ. [௬௭]

முருகு கொப்பளிக்க நறவுகுந் துளவ
முடியினிற் புடைபரந் தளிக
டுருவிமுன் னடிக்கு மரம்பையர் தமக்குச்
சுருதியி னின்னிசை பயில
விருவிசும் பகட்டே ரிருளினிற் கிளர்வுற்
றெழுந்தவெண் பிறை திகழ் மறுவின்
றிருநுதற் றலத்துட் செழுமணங் கமழுந்
தென்கலைப் புண்டர மொளிர. [௬௮]

செவ்வரியோடிப் புடைபரந் தெழுந்து
செவியொடும் பொருதிக் காண்பவர் கண்
வவ்வுறு நீரதாகி நீண்டகன்று
மானிலத் துறு முயிர்ப் பயிர்கள்
வெவ்வினை யொழியத் தண்ணளி கொழித்து
விளங்கிருங் கண்ணிணை விமலன்
பவ்வவார் கலியுட் கிளர்ந் தெழுந்தகையோ
பங்கயமோ வெனத்திகழ. [௬௯]

வாட்டடம் பொருந்து மதிமுக மதனுண்
மலர்ந்தசெங் கமலமோ வதனுட்
கீட்டிடும் பவளக் கடிகையோ வெனக்கண்
கவர்ந்திடு வாயித ழிலைக்குக்

கோட்டிரு மலையிற் சினந்தெதிர் பொருதக்
கொழுஞ்சுட ரருக்கரோ ரிருவர்
ஈட்டு வெவ்வினையி னெழுந்தனர் கடுப்ப
விலங்கிட மகரகுண்டலமே ; [உ0]

பொங்கலைப் புணரி நிலந்தனைக் கவர்வான்
பொதிந்தெழுங்காலையிற் கிளரும்
வெங்கனல் கடுப்பத் திகிரியு மொளிர்வெண்
விதுவெனச் சங்கமும் விளங்கக்
கங்குலிற்கரிய மலையெனப் பரந்து
கவினுறுமார்பிடைச் செழுநீன்.
மங்குலிற்றிகழு மின்னெனத்துவளும்
வயங்கு முப்புரியிழை யிலங்க. [உக]

துங்கமுற்றமர்ந்த குடக்கெனுந் திசையிற்
றோன்றியம் புயலின்கீழ் திக்குஞ்
செங்கணிற்றுலங்குஞ் செக்கரினரையிற்
செழும்பொற் பீதாம்பர மிலங்க
விங்கருமுகிலினிவ்வணம் பொலிந்து
நின்றமெய்ப் பரன்றிரு முன்னர்
அங்கடற் றழைத்த வருள்கொண் மன்னவனு
மரிவையோ டினிதுவந் தடைந்தான். [உஉ]

அண்டமா யண்டத்துட் பொருளாகி
யரியநான் மறைக்கு மெட்டாத
புண்டரீ கங்கொ ணயனவெம் பெருமான்
பொலிந்துநின் றருள்பிரான் றிருத்தாள்
கண்டவர் தாளுந் தடக்கையுங் கூப்பிக்
கவினொளி விரித்திடும் பல்பூண்
மண்டல மாது புனைதர வீழ்ந்து
வணங்குபு நின்றன ரன்றே. [உ௩]

கருந்தட மலையிற் பொலிந்து நின்றருளுங்
கருணையங் கடலினை நோக்கிப்
பொருந்தல ருரத்தி னுதிரமுண் டொளிரும்
பொருவயிற் [illegible]கொண் மன்னவனு

மருந்தினு மினிய மொழிநெடுங் கருங்கண்
மங்கையு மிருகணீர் பொழிய
வருந்திநின் றிரங்கி யிருகைமேற் குவித்து
வழுத்துவர் விழுத்தகு மொழியே. [உச]

(வேறு)

அண்டமு மீரேழுலகும் படைத்த னளி
லதிர்சனு யிப்பதியு ளமர்ந்தாய் பின்பு
முண்டகத்தி னன்முகனைப் படைத்தன்னோனை
முன்படைத்த வுலகளிக்க முதல்வனுக்கத்
திண்டிறமில் லாதவனுன் னடியையுள்ளித்
திருவட்டாக் கரப்பொருளைச் சிந்தை செய்ய
வண்டிமிருந் துளவலங்கன் மார்பிலங்க
மாமகள்பூ நீளையுடன் வந்த கோவே. [உரு]

வெந்தறுக ணல்வாய்மும் மதப்புழைக்கை
வேழதகை விற்படைக்கை வேடன் சீறி
வந்தடரக் கடமகன்று நெடுந்தூரங்கொள்
வழிதுரத்தி யிப்பதிக்கண்வர வன்னோனைத்
தந்தமதனூடுறுத்த வவனுங்குத்தத்
தந்தியுமக் குறவனுமித் தலத்தின் மாள
விந்திர னந்தகன்றூதர்க்கிலையென்றுந்த
னிணையடிக்காட் செய்துகந்த வெழிலிவண்ணு. [உசு]

வேதங்க ளீரிரண்டுஞ் சிச்சர்கட்கோர்
விப்பிரர்பன் னுள்வரையும் விளம்பிப் பின்னும்
போதமிலா னதிலொருவ னிருக்கை நோக்கிப்
புங்கவனும் புன்பிறப்பிற் போவாய் நீ யென்
றோதவவ னூரினம்விட் டயலூர்க்கேகி
யுன்றளி சூழ்புறம் பிடுங்கி யுடலம்பேணப்
பேதமிலா தெனதடிய னவனென்றுன்னிப்
பின்பிறப்பில் வீடளித்த பெருமையோனே. [உஎ]

வானவருந் தவளமத வாரணங்கொள்
வாசவனும் புயவலிபோய் வதியுநாட்டைத்
தானவர்முன் பறிகொடுத்தங் கமலயோனி
தனைத்தொழவங் கவனவர்க டம்மை நோக்கி

மாநிலத்திற் றிரைகொள் பொருனைக்கவாசி
வனமதில் நம்மா னுகந்து வளர்கின்றானீர்
தேனின்மலர் கொடுதொழுமென் றுரைக்க வந்து
தேவர்தொழ வவர்க்கருளுஞ் செவ்வியோனே. [உஅ]

சங்கனெனு மறையோன்றே விருவரோடுன்
றனைச்சரியென் றெணியாசை தன்னைக்காக்கப்
பொங்குதவஞ் செய்திட நாரதனுழன்று
போந்தவனை வாரணமாய்ப் போவாயென்ன
வங்கவனம் முனிவனை யேத்திட மெஞ்ஞான
வறிவுணர்வாய் நீ யென்ன வவனும் பின்போய்
வங்கமலி யார்கலியுட் சங்கமாயுன்
மலரடி வந்தேத்தவருண் மனத்தினும்மை. [உகூ]

அண்டமுமவ்வண்டத்து ளுலவுந்தீயு
மலைகடலுமனிலமுமோ ரணுவின்மான
வுண்டுவந்தோ ராலடையிற் பாலனாகி
யோகசயனந்துயில வுந்திதோன்று
முண்டக மென்மலரதி னுன்முகத்தோன் றன்னை
முன்படைத்தாங் கவற்குனையே மூல மென்னும்
பண்டை யிருக்காதிய நான்மறையனைத்தும்
பானிறங் கொளாதிமமாய்ப் பகர்ந்த கோவே. [ஙய]

பன்றியுருக்கொண்டு திரைக்கடல் சேர் மண்ணோர்
பருமருப்பிற்றுகளினைப்போற் பரித்து வந்தாய்
வென்றிகொளும் வழுதிவள நாடன்றுய்ய
மெய்மையறந்தாங்கி சக்ர பாணியாருள்
துன்றொளிர்வேலச்சுதர் தாமரைக்கண்ணர் பொற்
செங்கணர்பொற் காரிகையா ரெந்தை முன்னோர்
குன்றலிலா வழிவழி சந்ததிகளன்பிற்
கொடுத்தடிமைகொண்ட பெருங்குணக் குன்றேயே[ஙக]

பொங்கலை நீராழியினைப் புடையுடுக்கும்
புவிமகளைக் குடைநிழலிற் புரக்குங் கோவும்,
புங்கவிழித் தெரிவையு மிர்துதி மொழிந்து
புத்தெனு மக்கொடு நரகப் புவியிலெம்மைத்

தங்கவிடா தீட்டேற்றிக் கதியளிக்குந்
தனையரெமக் கருளென வஞ்சன வெற்பூடே
செங்கமலக் காடுடனோர் மதியுங்கூடிச்
செறிந்ததென நின்றவன்முன் செப்பினாரே. [௩உ]

நன்னெறிவா யுலகமெலா மோச்சுஞ் செங்கோல்
நலமுறுவேந் தினையமொழி நவிலப்போதின்
மின்னுறையு மார்பணணி யாழிசங்கு
வில்கதை நாந்தகப் படைகொள் விமலன் கொண்மூ
வன்னவருள் சுரந்து பொலிந்தோங்கி நின்ற
வாதிமா லதிரிச வாக்காகச் செம்பொன்
மன்னுமணி மாடத்தென் குறுங்கை செல்வீர்
மகவளிப்போமென வொருசொல் வழங்கினானே. [௩௩]

(வேறு)

என்னவெழு மம்மொழி கேட்டிரு புயமு மிருவரையை
மன்னநெடி தோங்கியிவண் மனமகிழ்வுற் றிறைஞ்சினனாய்
கொன்னவிலு மயிற்படையைக் கொடுமடையா ரிகலடக்கும்
மின்னவிரு மணிமுடியான் மின்னினை நேரிடையினொடு. [௩௪]

அருமறையு மளவிடுதற் கரியவொரு தனிப்பொருளாய்க்
கருமுகிற்போற் பொலிந்துநின்ற கருணையமுதினை வலமாய்
மருமலரு நிம்பமணி மதர்நெடுந்தோண் மன்னன்மனத்
தெருமா லற்றெழில் விரச சினகரமுன் றிலி லணைந்தான். [௩௫]

உலகமெலாம் பொதுநீக்கி யொருதனி நாயகம் புரக்கு
மிலகுமணிப் பூண்டிகழு மெழில்கனகத் தடவரைக்கா
வலனமுறை யிற்கடிது வருதிரெனச் சாற்றிடலு
மலகிலற நெறியமைச்ச ரனைவரும் வந்தடைந்தனரால் [௩௬]

வந்தடைந்த வணமைச்சரனை வருமரசர் கோனெலிக்குஞ்
சந்தமுற மொண்கழல்க டயங்குமலர்த் தாடொழுது
சிந்தையுவந் துடையொடுக்கித் திகழ்கரத்தின் வாய்புதைத்து
முந்துநிற்ப மன்னனவர் முகநோக்கி விளம்பலுற்றான். [௩௭]

வண்டினங்க ளிசைபாட மஞ்ஞையெலாங் கண்ணுளர்போற்
றண்டலைவாய் நடனமிடுந் தண்குறுங்கை மாநகரு
ளெண்டிசையும் போற்றிசெயு மெம்பெரு மானெந்தமையாட்
கொண்டுவழி வழியருளுங் கோதிலாச் சுடர்மூர்த்தி. [௩௮]

அண்டமெலா மளித்தருளின் னருளாழி யண்ணறனைக்
கண்டுதெரி சித்திருகண் களிப்புறயாஞ் செல்வதினான்
மண்டுதிரைக் கடலனைய வரும் படைகளைக் கடிது
கொண்டு வருகுதிரென்னக் கோமானு முரைத்தனனால். [௩௯]

ஒன்னலர்தம் மணிமுடிக ளுரஞ்சுதா ளரசர்பிரான்
சொன்னவுரை கேட்டிருதாட் டுணையுமுடியிற் புனைந்து
நன்னெறியிற் றிகழமைச்சர் நவையிலா விரைவினொடு
மின்னவிரச் சினகரத்தைவிட் டினிதுசென் றனரால். [௪௰]

கூம்போடி வான்முகடு கூடுநெடுந் தேர்முதலா
யாம்பேர் படைக்கலங்கொண் டரசர்பிரான் திருமுன்னர்த்
தாம்போய் வணங்கி நன்குசாற்ற வவர்முக நோக்கித்
தேம்பாடு வண்டிணை தார்த் திருமார்பன் செப்பலுற்றான். [௪௧]

இப்பெருநம் படையொடுமுன் னேகுதிரென் றவர்க்கருளி
ஒப்பில்லாப் பரிபூட்டி யுயர்மணித்தேர் கொணர்திரெனச்
செப்பிடச் சாரதி கொடியிற் சென்றிறைவர் கோனுரைத்த
வப்படியம் பொற்றேர்கொண் டரசர்பிரா னடிதொழுதான். [௪௨]

மஞ்செனவள் வார்முரசம் வால்வளையு நின்றதிரத்
தஞ்சமென வந்தடைந்தார் தமக்கருளுங் கருணைவள்ளல்
பஞ்சினைநே ரடித்துவர்வாய்ப் பணிமொழி யன்னளினொடு
விஞ்சொளிருந் தேரேறி விரைந்து பெரும்படை கலந்தான். [௪௩]

வேறு

மின்னொளி ததும்பியணி கொண்டவிர தந்தனை விரைந்துகொடுபோ
மன்னவ னரும்படையி றன்னவிருபங்கிலும் வளைந்துவருமால் (ய்
சொன்னபணி செய்யுமதி மந்திரிய முந்திய துரங்கக் கணமு
முன்னதமி குருதபுய மைந்தர்களுடைவுந் திகிரியும் பலவரோ.' [௪௪]

சுந்தரரதந்தனை விரைந்தரசியங்க வயறன்னி மயில்போற்
கந்தர நறுங்குழல் மடந்தைய ரடர்ந்தரிய கவரிவிசிற
வந்தவ னுகந்தபணிதந் தடிபணிந்துவரு மைந்தர்பலர்சூழ்ந்
தந்தர மெழுந்தணி புரந்தரன் வருங்கவி னடைந்தனனரோ. [சரு]

முத்தின நிறைத்தொளிர் மணிக்குவை யமுத்திவெளி முற்றுமொளி
சத்திர மெடுப்பவர்கள் சுற்றினு நிழற்றவய றத்ததிமென (ரும்
மத்தள மடிக்கவின் மொழிச்சியர்நடிக்க விதழ்வைத்து வெகுபேர்
நத்தினமுழக்க வமுதத்தினி தொலிக்குமுயர் நாகசுரமே. [சசு]

(சிறைகொளும்
வெண்டரள மண்டியணி கொண்டொளிரு தண்டிகையுண் மென்
வண்டர்நற வுண்டுகுதி கொண்டுலவு தண்டெரியல் மந்திரிகள் சூழ்ந்
தண்டைதவின் மிண்டவுயர் புண்டர மணிந்திலகு மந்தணர்குழாங்
கொண்டனிற வெந்தறுகண் தந்திமிசை யுந்திவரல் கோடியுளவே.
[சஎ]

குந்தமொடு சூலமயி றண்டுசிலை வாளிகதை கொண்டெறிதிரைச்
சிந்துவென லாகவெழ கம்பலைகொள் சேனைபல சென்றடருமா
லிந்துமுறி வானுதன் மடந்தையர் விலோசன மிருந்தொளிசெய
வந்துலவுமீனென விருங்கயல்கொள் கேதன மலிந்தனவரோ. [சஅ]

சித்திரமிழைத்த கனகப்படமுகக் கரி கதித்ததிரளி
றத்திவருமொப்பில வெணற்ற தவளத்துரகதத் தொகுதிகள்
அத்திரவிழிப்புவி மகட்குடை யெனப்பொலியு மற்புதமிகு
நத்தின மிகச்செறியு மத்தியிடை யெற்றலையிணைப்பொருவுமால். சகூ

சந்திரவிருங்கவிகை யின்னிழலிறங்குறு மதன்றனணியார்
தந்தமடமங்கையருடன் கரியினந்தர மிசைந்து வருவோர்
சுந்தரமிகுஞ் சசிமடந்தையருடன் கரியதன்னியெழுசூழ்
கந்தர மமர்ந்துவரு மிந்திர ரனந்தரி னிகர்ந்திடுவரால். [ருய]

முத்தினமிகுத்திடு கடற்புவியினைப்பொதுவின் முற்றுமளிகோன்
சுத்தமரையைப் பொருமடித்துணையினைத்தொழுது சுற்றிவருமின்
பத்தியி னயிற்படையினைக்கரமதிற்கொணிரு பத்திறலினோ
ரத்தமு னிரத்தினமிழைத்த சிவிகைக்குழு வெணற்றவையரோ.
[ருக]

சுத்தவமுதத்தினு மினித்தமொழிவைத்த பலசொற்கவிகளால்
வித்தகமிகுத்திடு குணத்தரசனைத் துதிசெய் விற்பனர்களைக்
கைத்துணை குவித்தவனெழுச்சியை யுரைத்துவரு கட்டியர்களை
யித்தனை யெனத்தெரித லுற்றினி துரைக்கும தெமக்கரிதரோ. ௫௨

எண்டிசையு மண்டிவருகின்ற விவரும்படை யெழுந்துகளெலாம்
விண்டல மடர்ந்திட மிருங்கதிர் மறைந்திட விரிந்தொளிசெயும்
வெண்டரள மென்னகை மடந்தையர் கலன்களு மிடைந்திருமணி
கொண்டவிரதங்களு மனந்தமரி யின்னொளிமிகுந் திடுமரோ. [௫௩]

பங்கய வரும்பினொ டெதிர்ந்தடி பரந்தணிசெய் பம்பரநிகர்
கொங்கையர் கருங்குழலிழிந்த மகரந்த மிருகும்ப மிசையார்
துங்கமுறு தந்திகள் பொழிந்திடு மதங்களொடு துன்றிவிரவி
யெங்குமிகுபங்கமிடு மென்னிலவை யின்கண மியம்பவெளிதோ.
[௫௪]

தண்டிரைகொ ளங்கடலை யன்னவிரு பங்கில் வருதண்டுகளுநீர்க்
கொண்டலி னிருண்டுவரு தந்தமுறு தந்தியின்மி குந்தகுழுவும்
விண்டொடர் பொலன்குவடை யன்னவிரதங்களு மிசைந்துவரவி
வண்டமுழு துந்துதிகுறுங்கைநகரந்தனை யடைந்தனனரோ. [௫௫]

வேறு

நனைவிண்ட நறுங்கமலப் பிரசஞ்
சினைகொண்ட செழுங்கய லுண்டுகளுங்
கனைகொண்ட கருங்கடனேரகழைப்
புனைகின்ற பொலன்மதில் வானுறுமே. [௫௬]

புயலுற்ற பொலன்மணி மாளிகைகள்
கயலுற்ற கருங்கணுடங் கிடையார்
மயலுற்ற மதன்சமர் வென்றுமகிழ்
செயிரற்றொளிர் மேனிலை சேணுறுமே. [௫௭]

பண்ணுற்ற மொழிச்சியர் பற்பலர்க
ணண்ணிக்கின நற்கழல் பந்துபயில்
விண்ணுற்று மிளிர்ந்தடர் கூடமிகுந்
தெண்ணற்ற திருந்தணிசெய் திடுமால். [௫௮]

வாளுடுகிழிக்கு மதர்முலேமின்
ஞராடிடு நாடக சாலைகளுங்
காரான கருங்குழலார்களிசை
யாராயு மரண்மனையும் பலவே. [௫௯]

அமிழ்தத்துமினித்த வருஞ்சுவைமுத்
தமிழ்கற்றிடு சாலையுமால்புகழோ
துமறத்தினுருக்கிளர் தூய்மறைநான்
குமுணர்த்திடு கூடமுமாயிரமே. [௬0]

மணிவார் கொடிறுக்கிய மாமுரசைக்
குணிலர்லே துவைத்திடு கோடணையு
மணியாழிசை யார்வமு மார்ந்திலகுந்
துணிவீசிய தோரணவாயிலெலாம். [௬௧]

கஞ்சப் பெணுளங் களிசெய் கணவன்
விஞ்சக்கதிர்வீசுபொ னிஞ்சியுபவெம்
நஞ்சத்தனரன் முடிகாணரிதாய்
விஞ்சித்திகழ் கோபுரமேலுறுமே. [௬௨]

மீனத்தவழ் மாடமிசைத்திமிர்பாற்
றானன்கொடியாடுத றென்னகர்வாழ்
மானின்மகவாமென வெண்கையினல்
வாவென்றுவர் கூவுதல்மானுமரோ. [௬௩]

வேறு

முருகூரு நிம்பமல ரணியா னெழுந்தருளன்
முனமே யறிந்திநகர்வாழ்
இருநாக மன்னவிரு தனபார மங்கையரு
மிகலாரு மைந்தர்குழுவுந்
திருமாதுறுந்தவள மணிமாட மண்டியணி
செயும் வீதியெங்கு நடுவார்
மருவேரி யம்மடல் கமொடுபூக முங்கழையு
மதியேற ரம்பைகளுமே. [௬௪]

கருமா முகிற்படியு மிருவானகட்டுற மகர
தோரணங்க ளிடுவார்
பருவா னிறத்தரள மணிவா யமைத்தொளிகள்
பரிகாவணங்க ளிடுவார்
அருமா டகத்தகழி யிடையா நெயிட்டு வெயி
லளிதீப மெங்கு மிடுவார்
விரிவா னகர்க்குமிடர் தருவீதி முற்றவுமி
விதமா யியற்று பொழுதில் [௪௫]

உலகேழுமுற்ற முடிவுறு நாளினிற் கிளரு
மூவாழிகட் கிணையெனப்
பலமாரு மப்படைக ளிருநா றிசைக்கண்வரை
பரவா வரச்சுடர் கொளுஞ்
சலமா றையிற்படைகொள் வயவார்முதற் றலைவர்
தமை யீடழித்திடு புர
வலனீ டிரத்னமணி யதனு லிழைத்த நகர்
மதில் வாயினிற் குறுகினன். [௪௬]

இனனீதியுற்ற வறுதொழிலோ ரிருக்கொலியொ
டெதிர்காண் வரக்கரிய சூற்
கனமீதினிற் படியு மணிமாட மட்டில்பல
கவின்வீதி பிற்படவொளிர்
முனமேயுரைத்த நெடுமதி லாலயத்தினகன்
முது வாயிலிற் சிகரவொண்
டனம்மருவைப் பழிசெயணிதேர் நடத்தியட
றளம்மாடு முற்றனனரோ. [௪௭]

அடலாழியுற்றகர னடியா ரடிக்கமல
மகலா மனத்தி னிறையோன்
கடனீ டிரட்டியக லிகருனை கட்கவணி
கவின்வாயி னிற்பவருளி
விடுதேர்நிறுத்தி நிலவுமிழ் மாமதிக்கு நிகர்
விரியான னத்தினணியார்
மடமாது பிற்செலமி ஞெளிவீசுமத்தளியை
வலமாக வுற்றனனரோ. [௪௮]

மரையா தனத்திலுறை யொருநான் முகத்தவனு
மறையோதி நிற்பவடல்கொ
ளுரையோதி மத்தினைவிலெனவே பரித்தவர
னுறுகாதன் மக்களுடனே
விரையாரலர்த்துளவ முடியாயெமக்கருடி
வினையே மடைக்கலமெனத்
தரைமீதினிற் றொழுது பலவாய நற்றுதிக
கடகையோ டியற்றிமகிழ. [௬௯]

அகல்வா னகத்துறையு மிமையோர்கணத்தினொடு
மயிராவதத்தின் மிசையூர்
இகன்மா மலைச்சிறைகடுணிதூ றையிற்குலிச
மெழிலார் கரத்தி நிகழ
மகவானடுத்தினிய நறையோடு கற்பகமென்
மலரா லருச்சனைசெயத்
தகவாத ரத்தினொடு விரிசாம நற்சுருதி
தனையோதிடத்தவர்களே. [௭௰]

(வேறு)

மருவார் கமலங்கள் மலர்ந்தநெடுங்
கருமாமுகின்மீது கவின்றிகழ
வொருகோடி யருக்க ருதித்தனெரன்
திருமா முடியொன்று திகழ்ந்திடவே. [௭௧]

வருசூரிய மண்டல மத்தியனென்
றருமாமறையான தறைந்தவெனப்
பெரியோர்க ளுரைத்திடு பெற்றியையா
முருவாக முனந்தெரி வுற்றனமால். [௭௨]

செடியாதுமிலாது செழித்த நுதற்
கொடி நான முறுந்தில கந்தினொடுங்
விடுதண்சுடர் வெண்பிறை யொன்றுளதேல்
வடிவேற்றனை மானுமெனத் திகழ. [௭௩]

மாசற்றருண் மேனி மலர்ந்தவிருந்
தேசுற்றணிகொண்ட செழும் முகமெம்
மீசற்கிணையுண்டெனி லென்றனைநேர்
பேசத் தகுமென்று பிறங்கிடவே [௭௪]

மரைமா மலரென்ன மலர்ந்தவிர்செவ்
வரிமீது பரந்த வருட்கணிணை
தரைவாழு முயிர்ப்பயிர் தான்வளரப்
புரைதீ ரருண்மாரி பொழிந்திடவே. [௭௫]

நகுவொண்கதிரம் பொனின்மாமணியால்
வகுவங்கத மிட்டுயர் மாநகருட்
டகுவைந்தருவின் றிகழ்சாகை நிரை
நிகரென்னமிவ நாற்புய நின்றொளிர. [௭௬]

வாடாதமரைத்திரு மாமலரை
சாடா விலகங்கை கடம்பிலக
லாடாழியொ டொண் கதையந்தனுவா
ணீடாய வலம்புரி நின்றொளிர. [௭௭]

சிறையோதிமமேல் வருதேவனெடுங்
கறையாய களத்தரனே முதலோர்
அறியாது விளங்கு மடித்துணையா
நெறியாக நிகழ்த்துவ தெவ்வினையே. [௭௮]

அந்தப்படிகத் தமையத்தளியுள்
ளிந்தப்படி யேய்ந்திடு நம்பிமுனந்
சிந்தப்படி கண்ணொடு தெவ்வரெலா
மந்தப்படி யாளிறைற் வந்தனனால். [௭௯]

காசத்த மனத்தரி காணமுன
மாசத்த மனத்தி சூழ் மாநிலமு
ணேசத்த மனத்திறை நேரவுமெற்
றேசத்த மனத்தி றிகழ்ந்ததுவே. [௮௰]

ஓலைப்புனல் சூழ் புவியோம்பிடு செங்
கோலைத் தரிகோன் பவனிக் கெழுமக்
காலைக்குழுமேன குறு கட்டியரின்
மாலைப்பொழு தெற்குமுன் வந்ததுவே. [௮௧]

கூவற்ற குயின்னடை மற்றமயில்
வாவற்றிர ளுண்ணிரை வைகுமிட
மேவச்செல்லுற்றன மென் கவிக
டாவற்ற தடம்பொழி றன்னிலரோ. [அஉ]

வீசக்கரவாக விருப்பிய‌ணை
நேசப்பெடை நீங்கின மென்குமுத
மாசைத் தனி யன்பர்வரக் களிகொள்
வாசக் குழலாரின் மலர்ந்தனவே. [அ௩]

பரிவிற் புணர்பான்மைய வன்பர்தமைப்
பிரிவுற்றவர் பேதுற வெங்குளரென்
றரிபற்று மலர்க்கணை யைந்துகொடு
திரிவுற்றனன் சித்தச னெங்குமரோ. [அ௪]

இவ்வாறு தூலங்குறு மெல்லிலடற்
றெவ்வான்வர் சிந்தை கலங்க வொளிர்
வெவ்வாழி விளங்குகை நம்பியம
ரவ்வாயி னிகழ்ந்த தறைந்திடுவாம். [அ௫]

திருக்குறுங்குடிப் படலம் முற்றும்.

---

# வரம் வேண்டுகோட் படலம்

## வழிபடு தெய்வ வணக்கம்

தேனுகு பூம்பொழி லிடைமாடங் களாருந்
திருநாராயணபுரத்திற் சிச்சர்கூடி
ஞானமுனி நின்னுருப் போலர்ச்சை யொன்று
நாங்களியற்றியதினடி நாளுந் தாழ்ந்தெம்
மூனமறவேண்டுமெனப் பணியச் செய்வித்
துடையவரோ மென்றதைமாற் றுரைக்கச் செய்ரா
மானுசன்றாளிணை மலர்நஞ்செ ன்னிசூடி
வரம்வேண்டுகோட் படலம் வருவிப்பாமல். [க]

(வேறு)

கொந்துற்ற குழற்கொடி நேரிடையு
வந்துற் றமரு மரைமாமலரின்
பந்திச் செழு மாமுகில் பார்த்தனரால்
வந்திக்கு மறைப்பொரு டன்னைமுனே. [உ]

வெண்ணித்தில வொண்வட மேமுதலா
மண்ணிற்பட வீழ்ந்து வணங்கியிரு
கண்ணிற் புனலோடு கனிந்துருகி
நண்ணிப் பரவிப்பை நவின்றிடுவார். [௩]

அற்புக்கொரு வாரியினுன வளாய்ப்
பற்பத் தளிமேவிய பாலின்மொழி
கற்புத் திருமங்கை கவின்றிகழ
விற்பத்தொடு மெய்மணிமார் புடையாய். [௪]

மஞ்சிற் கரிவாவென வந்தருள்வான்,
கஞ்சத் தடமேவிய வெங்கரவைத்
துஞ்சக்கனனின் றெரி தூய்மையுறும்
அஞ்சக்கரம் வீசி யறுந்தவனே. [௫]

அரிதாய பலாயிர வண்டமெலாம்
விரிவாக விடுத்தி டுனக் கடியேந்
தரிகான்முளை தன்னை யெமக்கருளல்
பெரிதோ விதுவென்று பிறழ்ந்தனனே [சா]

வேறு

இன்னவாறுள மின்புற் றிறையுமா
றன்னை வாழ்த்தித் தளிவலமாய்முகின்
மின்னையே யிடை மெல்லியலோடுதான்
மன்னிசேதனம் வந்தணைந் தானரோ. [எ]

மாலதிக்கிணை யாகிய வாலனம்
பால சர்க்கரை நெய்யொடு பாகமாய்
வேலைமாய னமுதுசெய் மிச்சிலை
கோலமோடுண் டருந்துயில் கொண்டனன். [அ]

அனனடைப் பொன்னணங்குறு நம்பியவ்
வினனிடங் கனவிலுனக் கஞ்சவா
கனனரும் பொருடந்தவன் காதலார்
தனைய னற்பொருடந்தில னென்றனன் [கூ]

சொன்னவாய்மை துளைச்செவி யேறுமுன்
மன்ன னுள்ளமலங்கி மதிநுதற்
பொன்னினோடு புலரி நீராடிமால்
சந்நிதிக்குட் புகுந்தினல் சாற்றுமால் [ய]

மெச்சயன் மதமேவ மறையை நின்
னிச்சையா லசுரர் சென்றெடுத் தெழற்
கச்சமுற்ற வவன் றுயராற்றுவான்
மச்சரூப மெடுத்தருள் மாயனே. [யக]

இமையவர் திரண்டின்புற வின்சுவை
யமுதபெய்மொக் கண்ணலெனச் சொலச்
சிமையவெற்நுறச் சேர்த்திட வாரியுட்
கமடமாகிய கார்முகில் வண்ணனே. [யஉ]

இரணியாக்க னுயிர்க்கிடர் செய்குவான்
தரணியைக் கொடுபாதலந்தான் செல
வரணியாவென மன்பர்க்கருள் செய
முரணியங்கிடியாய் வருமூர்த்தியே. [௰௩]

பாரினுட் பரகாமலதில்லை யென்
றாருயிர் முன்னறைந் துரையீரெனுங்
கூரயிற் கனகன் னுயிர்கோறவே
நாரசிங்கம தாய்வரு நம்பியே. [௰௪]

திறமிலா மையிற்றேவ ருலகையும்
மறமுறும் புயமாவலிகைக் கொளத்
தறையும்வானு நின்றாளிணையே தொழக்
குறளுருக் கொண்டருளிய கொண்டலே (௰௫)

அத்திசூழு மிலங்கை யரசனுன்
மெத்தவாற்றன் மெலிந்துள சந்துமா
கத்துளோருன் கழறொழவன்றுகா
குத்தனாய் வந்தருளிய கொண்டலே. [௰௬]

மண்ணகப்பெண் வருந்தி நினைத்தொழு
தண்ணலென் பொறையாற்றுவை யென்றலும்
முண்ணெகிழ்ந்தங் குகந்தெழிலான் மிகுங்
கண்ணனாகி யருளிய கர்த்தனே. [௰௭]

பாருளோர் வெம்பவத்தளை பூண்டுனைச்
சேர்கிலாது புன்றீய மதாந்தராய்
நீர்மைகுன்றிட நீயவர்க் கின்னருள்
கூரவே கற்கியாய்வரு கொண்டலே. [௰௮]

பழுதி லெண்டிசையோர் புகழ் பண்பரு
வழுதி மன்னர் மரபினுதித்தயான்
எழுதலை முறையாயுனையே தொழூஉ
மழலைநன்மக வில்லெனன் மாட்சியோ [௰௯]

ஊழ்வினைப் பயனோ வலதும்பர் பாற்
றாழ்வு செய்தனனோ பற்றனிலனாம்
வாழ்வகற்றி வதிந்தனனோவல
தேழைமாந்தர்க்கிட ரிழைத்தனனோ. [௨௰]

பொம்மனுண்ணக் கலத்துறு பூசுரர்
தம்மையேகக் கடிந்தனனோ தமிழ்ச்
செம்மலார்ந்த கொழுநனைச் சேர்தரு
மைம் முகிற்குழல் வாழ்வறுத்தேனரோ [உக]

மண்டலத் துண்மகவுறு மாந்தரைக்
கண்டு நெட்டுயிர்ப் புற்றனனோகாங்
கொண்டு பாலிறையேனுங் குழவிகட்
குண்டுகக்க வுதவின னில்லையோ. [உஉ]

வேதியர் பெரியோர்கள் வியந்ததங்
காதலாரைக் கருதினனோ வயல்
மாதரோடு மருவிக் கருவையுந்
தீதெணாது செகுத்தனனோ கொலோ. [உங]

ஊதியத்திலவாவி யுலகமொவ்
வாத பொய்மை வழங்கினனோபலி
யாதுலர் முன்னளிக்குவ னென்றலைத்
தேதுமில்லுமக்கேகுமினென்றெனோ. [உச]

கொஞ்சமேனு மிரக்கங் கொளாதுயி
ரஞ்சவீண்கொலை யாற்றினனோ வெனைத்
தஞ்சமாகுந் தமர்க்கருள் செய்வபோல்
வஞ்சமே செய்மனத்தினனே கொலோ. [உரு]

பெற்றவின்பயம் பேரிளங் கன்றுணைச்
சற்றுமின்றித் தகைந்து கறந்துவாக்
குற்றசங்க மொழித்து மதுவினைக்
கற்றிலாரிற் கருதியுண்டேன் கொலோ. [உசா]

மெய்வருந்த விழைத்திடு வேலையர்க்
கெய்துகூலி கொடுத்தன னில்லையோ
செய்யெனுமுனஞ் செய்தவர் நன்றியுண்
மையதாக மறந்தனனே கொலோ. [உஎ]

ஆறிலொன்று கொளாதுறத் தாசையால்
ஊறு செய்துல கோம்பினனோதவத்
தேறுபோல்வர்க ளெய்திடில் யான்கொடுஞ்
சேறு சேரவெறா திருந்தேன்கொலோ. [உஅ]

முன்னியற்றுந் தவமுடிவில்லையோ
பின்னிழைத்திடும் பேறுங் குறைந்ததோ
வின்னிலத்திலி யாங்கள் மலடராய்
மன்னவென்று வரங்கொணர்ந் தேமரோ. [உகூ]

அன்றுவேழ மழைக்கு முனுவலாய்ச்
சென்றுற்றாஉகண் செகுத்துத் துரோபதைக்
கொன்றவாடை வுதவிய நின்னரு
ளின் றெமக்கிலதாயதெ னேந்தலே. [௩௰]

(வேறு)

இப்படிக் குரிசி லுள்ளத்திருந்த வெந் துயரமெல்லாம்
மைப்புயலுரு வோனக்கன் மலமறக் குருதீ யீந்த
நப்பினையணங்குகேள்வ னம்பி கூற்றுணையில் வீழ்ந்து
செப்பினனழுங்கிப்பல்காற்றிருக்கு நீர்கலுழமாதோ. [௩௧]

மண்ணினன் கலைகணீயென் றலமரு மாண்பு நோக்கிப்
புண்ணியவெதிவேந் தன்பிற் பொறிக்கும் புண்டரமிலங்கத்
தண்ணளிக்கடலா னம்பிதனுதுள் மகிழ்ந்திவ் வேந்தின்
கண்ணினுக் கணியனுய்நின் றினியசொற் கழறுவானுல். [௩௨]

மானிலத் துறவிலார்தம் மண்டமர்கடந்த வெள்வேல்
மீனவன் மரபுட்டோன்றும் வேந்துனக்குரிய சேயாய்
நானடைகுவனின் சோக நவையற மகிழ்ந்தெல்லிருந்
தேனின முரலுஞ் சோலைக்குருகை சென்றிடுமினென்றே [௩௩]

மாயவனுரைத்த மாற்றம் வள்ளறன் செவியுறுமுன்
வேயுறழ் புயமிரண்டு மேருவினிமிரச்செய்யாள்
நேயனேவன்மீ னட்ட நேமியா யுலகமுண்ட
தூயகந்தரத்தாயென்றே துதிபல வியம்பிநின்றான். [௩௪]

பாடினு னுடினுன் செம்பதமலரணி முடிக்கட்
சூடினு னழியானின் சுதனெனுங் கருணையே கொண்
டாடினுனணியனு மவ்வாண்டகை வடிவு நோக்கங்
கூடினன் றெழுதா வின்பக் குளிர்கடல் முழுகி நின்றான் [௩௫]

விஞ்சையரியக்கர் விண்ணோர் விரைகொளேந் தருவின் பூவான்
மஞ்சன மாரிபெய்ய மண்ணுளோரிறைஞ்சி யேத்த
கஞ்சமின்னிலகுந் திண்டோட் காரியார்க் கருளீந்தன்று
குஞ்சரத்து றுகணித்த கோவலன் கோயில் புக்கான். [௩௬]

மாமனங் கதர்சனக மறைந்தபின் குருகிதோய்ந்த
நாம வேலிறையுங் காதனங்கையு மிக மகிழ்ந்து
தேமலர்த் துளவினன்றன் சினகரம் வலமதாய்த்தன்
றூமமுற்றடிசி லுற்றுத் தளத்துடனிருந்த பின்னர். [௩௭]

பிழையறப் புவிபுரக்கும் பேரருட் குரிசினீதி
யுழையரை விளித்து யூகமொலி கடற்றிரளே யின்பந்
தழைவுறச்செய்து பிற்றைப் புலரியிற்றருதிர் நீவிர்
குழைபொருகயற்கண்ணார் வாழ்குருகையா மடைதற்கென்றான் [௩௮]

ஆங்கரசியம்பா முன்னரறிவின்மிக் கமைச்சரெல்லாம்
பாங்குறு மிரதமியானை பாய்பரிபடைக்குழாங்க
ளீங்குவந்திடைந்த தெந்தாயினி யருளென்னேயென்று
வீங்கிய குவவுத்திண்டோள் வேந்தனுக் கறிக்கைசெய்தார் [௩௯]

மந்திர மறையோர் வாழ்த்த மங்கள வியங்களார்ப்ப
பந்தையொத் தெழுந்த கொங்கைப் பரத்தையர் நடிப்ப மன்னன்
பைந்துள வலங்க னம்பி பங்கயப் பதமுட்கொண்டு
வந்தனைபுரிந்து பொற்றேர் மங்கையோ டேறினனல் (௪0)

வாளரி மதர்க்க னல்லார் வயங்கு சாமரமிரட்ட
காளமும் முரசு சங்குங் கறங்க வானிலவு காலுங்
கோளகை கவிகை யேந்திப் படைகளின் குழு முன்செல்ல
வாளிமொய்ம்பினனும் பொற்றே ரணிகொள் வாம்பரிகடாத்தி. (௪௧)

குருதி தோய்ந்தொளிரும் வெற்றிக்கோற்றவேற் கலியனன்பர்க்
கருணிதியமருமவ்வூர்க் கண்மறுகதனைத்தாண்டி
இருவிசும்பணவு செம்பொனெயிலகழியையு நீங்கித்
திருமகிழ்ந்துறையு மார்பன் செழும்பணைத்தலமடைந்தான் [௪௨]

வேறு

தூயதாமரைத் தடத்தையு மத்தடந்தோயு
மர்யந்தன்னையு மணிமலர்க் காவையு மயலி
னேய தண்பனை களையுமற் றுளவளமெல்லாம்
ஏயவேந்தயி னனங்கினுக்கிறையவன் காட்டும் [௪௩]

அங்கயத் தடைந் தரிவையர் நேர்நிமிர்ந் தாடச்
செங்கயத்தடி முகத்தொருதனமு மேற்றெறிதல்
வெங்கயத்தடர் முலையினு யாங்கதில் விளங்கும்
பங்கயத்தடமலர் முகைபோன்றன பாராய் [௪௪]

வடுவகிர்க்கிணையாயகண் ணணங்குசின் மடவார்
இடுபுனற் குடைந்தேந்து பின்குழலில் வைத்திடுதேன்
விடுவெண் டாமரைப் போது சூற்கொண்முகின்மீதில்
படுமுடுக்கணம் போன்றினி திலங்குவ பாராய் [௪௫]

மாங்குயிற் சொலி னன்னவர் குடைந்தெழ மறைக்குந்
தேங்குழற்றிர ளொதுக்கிடத் தெரியும் வத்திரந்தான்
ஈங்கெழிற் கொடியிடையினுய் மேற்படரெழிலி
நீங்கவுட் டெரிவெண்மதி நிகர்த்தன பாராய் (௪௬)

அனிச்சப்போது மெனஞ்சத்தின் றாவியுமழுத்தி
நனிச்சிவப்புறும் மடியினுய் நாரந் தோய்வான்செல்
கனிச்செவ்வாயினர் சிலம்பொலி கேட்டனக் கணங்கள்
பணிச்சையோடுதம் மினமெனத் தொடர்வனபாராய் (௪௭)

கருமுகிற்குழலாயொருகன்னி செங்கமல
மருவையோருவாஞசி வைத்திடமுகமதியென்
றருகு கூம்புமம் மலரினைக் காணி லதன்றோ
திருமுகத்தினுக் கடையு நாணென்னலாந் தெரிவாய் (௪௮)

கோங்குகொங்கைகள் காட்டநன்முருக் கிதழ்காட்ட
மாங்குயின் மொழிகாட்ட மாவடுவிழிகாட்டத்
தேங்குழைத்தளிர் திருவுருக் காட்டிடச் சிறந்து
பாங்கரும் பொழின் மடந்தையர் போன்றன பாராய் (௪௯)

விரியறத்தின ருரும்பொருளடையுமவ்வேலை
யரியதாயதம் முறவினைத் தழுவுத லனையக்
கரியவாயசந் தானுறும் பிரையினைக்கண்டே
யுரியதன்கிளை கூவுவ காண்டியொண்டொடியே (௫௰)

தேகி யென்றவர்க் கிம்மியு மளித்திடாச் சிறிய
ராகி நின்றவ ரரும்பொருளாக்கிக் காப்பதுபோல்
கோகிலத்தினன் மொழிமினுய்தேன்கணங் கொழுந்தே
னேகி யெங்கனு மீட்டிவைத் திருப்பன பாராய் (ருக)

வயற்றலங் தொறுமடர்ந்தபைங்களேகளே மாய்க்கும்
புயற்றருங்குழலுழத்தியர் கண்ணெழிற் பொலிய;
வயிற்றிரிந்திடும்புட் குலமவாவொடு மடைந்து
கயற்றிரள்களென் றேங்கியங் கிருப்பன காண்டி (ருஉ)

வேறு

இன்னதன்மைய வளனெலா மெடுத்தெடுத் தொளிரும்
பொன்னின்மாமௌலி மன்னவன் புயற்கருங்குழற்பைங்
கன்னனன்மொழிக் கனியிசழ்க் குரைத்துரைக்துகந்து
செந்நெனன் மன்னிய பணைபொழிற்பின்னிடச் சென்றான் (ருங)

பெருகு மார்கலிக்கிணையெனப் பெருத்தவப் படைகள்
வருகநாற்றிசைப் புறத்தினு நண்ணிவெண்மருப்பார்
பொருகை மாமதக்குஞ்சரம் புரைபவனுயர்ந்து
குருகைமாநகரந்தனைக் குறுகினனன்றே (ருச)

ஆதிநான்மறை யந்தண ரோதிடமடவார்
வீதியெங்கணு மயினிநீர் சுழற்றிடவினிதன்
மாதினோடு பன்மாமணிமறுகெலாங் கடந்து
கோதிலாத தன்கோயிலைக் குறுகினன் கோமான் (ருரு)

இருந்ததானைகட் கொருவிடைகொடுத்தினிதிறையோன்
பொருந்துநீண்முகிற் பொலிந்துநின்றருளிய பெருமான்
றிருந்துசேவடி யனுதினந் தொழுதுமண் சிறிதும்
வருந்துறாதுளமகிழ்ந்தரசியற்றியே வந்தான் (ருசா)

கந்தமாலுகக் கண்ணிகொள் காவலனினிதின்
இந்தவா றரசியற்றி நண்ணிடையிற விணைந்த
சந்தவார்முலைத் தையலோடினிது வாழ்வுறுநாள்
வந்தவாறெடுத் தியம்பிடலுற்றனன்மன்னோ (ருஎ)

(வரம் வேண்டுகோட் படலம் முற்றும்)

---

# திருவவதாரப் படலம்

## வழிபடு தெய்வ வணக்கம்

வாதினுன் மிகுவாதியர் தங்களை
நீதிநூல் கொடுவென்று நினைப்பருஞ்
சேதி நீளெந்திரத்தினி லிட்டநங்
கோதில் ராமானுசன் பதங்கொள்ளுவாம் (க)

ஆரஞ் செய்ய வலரணமோடுச
கோரஞ் செய்மன் குருகையுண் மாறனுய்
நீரஞ் சேயவ ணேய னடைந்தவ
தாரஞ்செய்படலந்தனைச் சாற்றுவாம் (உ)

வையமோர்குடை நீழலிற் வைத்தெழிற்
றையலோடு தருக்குற வாழுநாட்
பொய்யிலாதவப் பூவை வயிற்றிடை
துய்யசூற்குறு தோன்றியதற்பமே (ங)

மங்கலஞ்செய மாமல ரன்னவே
பொங்கருட் பொலிவுற்ற பொலன்முக
மெங்கும்வெள்ளியவாகி யிலங்குமொண்
திங்களென்னத் திகழ்ந்ததுமாதரோ (ச)

மட்டுவாரு மரையின் முகையெனப்
பட்ட வார்கொ டணிந்த பயோதரங்
கட்டவிழ்ந்தவக் காளின் மலரென
வட்டமிட்டு மணிக்கண் கறுத்ததே (ரு)

துங்க வேலைச் சுடுசரந் தன்னையொண்
கொங்கவிழ்ந்த குவளையம் போதைவெல்
லுங்கருங்கண் குழைந்துடல்சோபமெய்
அங்கமெங்கு மழகிற்பொடித்ததே (சு)

ஓது மோகை யடக்க வடங்கலி
லாதுமேற்கசிவார்ந்தது போலவே
கோதினீலக்குழற் கொடி நேரிடை
மாதின்மேனி வெளிர்ப்பு மலிந்ததே (எ)

தொன்மரத்தி னிலையிற்றலங்குறு
நன்மைப் பண்டிநலத்திற் கனத்ததவ்
வின்மலிந்தநுதற் கொடிமின்னெனுந்
தன்மையான விடையுந்தடித்ததே (அ)

தண்ணிலாவின் தரளமணியென
வண்ணியெங்கும் சுவேத மரும்பிய
துண்ணிவந்த நரம்புடம்பெங்கிலும்
மண்ணுவப்ப மலிந்து பசுத்தவே (கூ)

நலந்தருங்கொடி நைந்தவிடைச்சிதன்
புலங்கொண்மேனியிற் போர்த்த பசுநரம்
பிலங்குபொற்றிருப் பாவையிடையிடை
துலங்கிழைத்த மரகதந்தோன்றுமால் (ம)

செயிரறும் பலதேசிக நற்கலன்
பயில்வுறுந்தன பார வரைமிசை
யயர்விலேற வமைத்த படியெனும்
வயிறணிந்த மடிப்பு மறைந்தவே (மக)

அண்டமு மதனுட் பொருளியாவையும்
உண்டகட்டிலடக்கு மொருவனே
கொண்டன் மைக்குழற் கோற்றொடி மாதுதன்
பண்டிவந்து படிந்தன னென்பரால் [மஉ]

தேங்கொள் செங்கம லாதனன் றேடரும்
பூங்கழற்றனிப் போற்றிருந்தான்றனை
பாங்குபெற்ற பசுங்கொடி மாதுதான்
றாங்கிநிற்கத் தவமென்செய்தாளரோ [மங]

கன்னிபண்டியைக் கான்வடமாகவே
முன்னரே யுவமிப்பார் முறைமையால்
பொன்னுடைப்பரன் போந்தனன் வைகலா
லன்னதேதிரமாக வமைந்ததே [மச]

வேதமோதிய வேதியருந்தவப்
போதஞானப் புனிதரும் போந்து போந்
தோது மன்னவர்க்குற்ற சடங்கெல .
மாதந்தோறு மடவரற் காற்றினர் [மரு]

குமுதவாய்க் கொடிக் குற்றிடைப் பாங்கிமா
ரமுதினுமினிதாக வமைபல்வி
தமுதிருண்டிடதர வெறுத்தும்முனை
துமுதகங் கணந்தோறு மருந்தியே [மசு]

மாத மைந்திரே டைந்து மலிந்தபின்
றீதமைந்தித் திரைகெடு மண்ணெலாம்
பேதமைய்யிற் பிழைப்பரிதாமெனப்
போதமைந்த னுருக்கொடு போந்தரோ [மஎ]

பேதியாது பிறங்குமெய்ஞ் ஞானத்தைப்
போதியா நற்பதந்தனிற் போக்குவா
ளோதிருக்கு மறத்தெரிந்தோர்கிலா
வாதியான பரஞ்சுடரண்ணலே [மஅ]

சந்த நீண்முடி மன்னன் றவத்தினல்
இந்தமாதி னெழில்மிகு பண்டியில்
வந்தடங்கி யிருக்கு மகிமையாம்
விந்தைதன்னை வியப்பொடு நோக்குவான் [மகூ]

கந்தரத்திற் றிலங்கு களத்தனெ
டுந்திமா மலரோனை முதலவா
னந்தரத்திறை யோனெ டமரரும்
வந்துநாளும் வணங்கித் துதிப்பரால் [உம]

வேறு

வானக முகட்டின்மீது வயங்குபொன் முடிகளோங்கத்
தேனகமலர்த்தாட்சேடன் செகத்துறப் பொலிந்துநின்ற
நீனக முலையிம் மாதின் நெருங்குறு வயிற்றிற்போந்த
தீனரைக் கவைாச்சோதி யெவ்வனமுரைத்தி யென்பார் [உக]

அண்டமு மதனுள்ளான வலைபுனற்ககனநேமி
மண்டெரி யனிலமற்று மனிதர்புள்விலங்கியாவும்
உண்டகட்டிடையே வைத்தவொருவனே மடமினுடன்
பண்டியுளடங்கி நிற்கும் பரிசெவன் பகராயென்பார் [உஉ]

தொலைவறுநிலையதாகத் துலங்குறுந்தமைந்து
நிலைதிரிந்திருக்கு மூழி நெருங்கிய வேலைதன்னில்
உலைவுருவனைத்தும் பண்டியுள்ளுற வடக்கியாலி
லிலையதன்மீ வளர்ந்தார்க் கீதென வரிதோவென்பார் [உங]

திங்களின் மரபிற் றோன்றித் திரைநெடு நேமியாண்ட
பொங்குவேல் வழுதிமன்னர் புரிந்தமெய்த்தவமோ வென்பார்
இங்கணிவ்விறையோன் செய்தவெழிற்றவப்பேரே யென்பார்
மங்குனேர்குழலாள் பெற்றமகிமையே மகிமையென்பார் [உச]

எம்மை யாளுடையவீச னிங்குவந் துதித்தலாலே
விம்மூநீர்ப்பொருனை யேயவ் விரசையா மென்பாரீங்கே
இம்மியுமகலா வாழ்வுற்றிருந்திடுமவரே நித்யர்
பொம்மலிநகரேயந்தப் புனித வைகுந்தமென்பார் [உரு]

கோதகமுடையராகிக் கொடுந்தொழில் கொலைகளாதி
பாதகம் புரிந்துநாளும் பழிப்புறு நிலையரேனுந்
தீதகற்றிடு மித்தூய திருநகரடையிலன்னோர்
மாதகவுடையராகி வாழ்வர் விண்ணாட்டி லென்பார் [உசா]

மண்ணிழை தவமோ மற்றுமானிடர் தவமோமீதின்
விண்ணவர் தவமோ வேள்விவேதியர்தவமோ தென்பால்
நண்ணினர்தவமோ விந்த நகரிழை தவமோயாரும்
எண்ணரிதாய சோதி யிங்குவந் துதிப்பவென்பார் [உஎ]

இவ்வணமடைந்துநாளுமிமையவர் வணங்கியேகப்
பவ்வமைக்கடனே ரங்கட்பனிமொழிக் கரியகூந்தற்
கொவ்வைவாய்த் தெரிவையாகங்குழையெனக் குழைந்துவாடி
வவ்விநேர்விழிகொள் பாங்கிமா ரிருபுறமுந்தாங்க [உஅ]

மெலமெலநடப்பாளொல்கி மீளவுமடைந்துசோர்வாள்
அலைணயொண் கூந்தல்சோர வலமரலடைவாள் யாருஞ்
சலம்வர் முனிவா ளன்னாள் சார்துய ருரைக்கலாமோ
தலமிசை யிருந்திவ்வாறு தளர்வொடுவருந்துமெல்லை [உகூ]

விண்டல வெளியி னின்று விளம்பிய வமர ரெல்லாங்
கண்டரு மறைக ளின்றுங் கருதுதற் கரியசோதி
மண்டலத் துதிக்கும் வேலை வந்ததின் றெனவுள் ளோகை
கொண்டுநம் வினைக ளெல்லாங் குடியொடுந் தொலைந்ததென்னு [௩௰]

அடக்கருமுவகை வெள்ளத் தாழ்ந்தன ராகிப் பாவத்
தொடக்கறத் துய்ந்தோமென்னத் துணைக்கர முடியிற்கூப்பி
யிடக்கறத் தொழுவ ரோரா யிரமறை நவிலுநாமம்
விடக்கருத் திலர்களாகி விளம்புவர் குணங்களெல்லாம் [௩௧]

ஆடுவர் கள்ளுண்டாரின் மெய்மறந் தறிவுசோர்ந்து
பாடுவர் மறைகளுன்கும் பற்பல தரமானந்தத்
தோடுகட்புனலில் மூழ்கி யுருகுவ ரினிதி னுள்ளம்
பீடுற விமையா நாட்டம் பெற்றமை பலித்த வென்பார் [௩௨]

இருவிசும் பகட்டுள்வானோ ரிவ்வண்ண மாடிப் பாடி
மருவிரி தருமந்தார மலர்கொடு சொரியச்சோதித்
திருமுகத்தரம்பை மாதர்செருக்குடனடிப்பயாரு
முருகயா மெடுத்தியக்க ருகந்தன ரிசைகள்பாட [௩௩]

அடல்கெழு வாணனோரோ ராயிரங் கரங்களாலுந்
திடமுட னடிப்ப வார்க்கு மொலியெனத் தெருவிலூடே
குடமுழாத் தொனிமுழங்கக் கொடும்பவத் தொடரறுத்துக்
கடம்படுமுனிவோ ருள்ளக் கவலையற் றுவந்துவாழ்த்த [௩௪]

நவமணிக் காளஞ் சின்னு நவையிலா முரசத்தோடும்
தவளவொணிலவு காலுஞ் சங்கமு முகிலினூர்ப்பப்
பவளவாய்க் கரிய கூந்தற் பைந்தொடி சுதையி னின்சொற்
குவளையொண்கண்ணு ருள்ளங் குளிர்ந்து மங்கலங்கள்பாட [௩௫]

வழக்கிடப் பலனு லாய்ந்தும் வாய்மைகொ ணிலையைத்தேறுச்
சழக்குறுபுலவோ ருள்ளந் தன்னின் மெய்யறிவுதோன்ற
இழக்கவெவ் வினைகளெல்லா மெய்திற முடையாரேனுந்
தொழுக்கருத் துடையராகுந் துணிவுரு டேவையாகி [௩௬]

வேறு

நண்ணிய கலியி னூற்பத்து மூன்று நாளென
நவில்பிர மாதிப்
புண்ணிய வாண்டிற் புனிதவைகாசிப் பூரணை
வெள்ளியுங்கலந்த
வெண்ணியதிருவிசாக நன்னாளி லெறிதிரை
யறிதுயின் மாலே
விண்ணோருமுதைய விரவிபோன் றுலகில் விளங்கினுழ
வயிற்றினின் றுதித்தான் [ருஎ]

பொங்குவெண் டிரைகொ ளிருநில வரைப்பிற் போற்றுறு
மடியவர்முகமாம்
பங்கயமலர்கள்விகசித மடையப் பரமத
விருளின மிரிய
விங்குழலுயிர்கள் பவப்புனல் சுவற வெண்ணரு
மளிமுரன் திருந்தேன்
சங்குறும் வகுளபூடண பாஸ்கரோதய
மாயது பாரீர் [ருஅ]

கணிப்பெரு நிலைய வாரண நான்குங் கருதினின்
றளவிடற்கரிய
திணிப்பெருந்திரம்டாடிருமுத றலைவன்
செழியனன்னுதற் சிறுமகவாய்ப்
பணிப்பெருஞ் சுடிகை மிசையுறக் கிடந்த
பாரிடத் துதித்தன னென்றான்
மணிப்பெருமுடிய மன்னர்கோ னிழைத்த
மாதவ மியம்பிட லெளிதோ [ருகூ]

மதித்திட வெவரு முதித்தவக் கணமே வருசட
வாயுவைத் தடுத்துக்
கதித்தமெய்ஞ் ஞானக் கடலிடை மூழ்கிக்
கண்ணிணை யுறவிழி யாதுஞ்
சதிர்த்திருப் பவளவாய் திறவாதுந் தரையிடை
யசைவறக் கிடந்த
வெதிர்த்தசெஞ் சுடரின் றேசுறங் குழவிக்
கிகுளைய ரிணையன புரிவார் [சுய]

இளநிலவெறிக்கும் பிறையினைப் பழித்தங்
கிலங்குறு நுதற்றலந் திருத்தித்
தளதளப் புடனுட் டிரண்டழ கொழுகித் தயங்கிடு
நாசியை யுறுவி
வளமைநற் கரமு மணிமுழந் தாளும் வகையுறக்
கைகொடு முறுக்கிக்
கிளர்தரு மம்பொற் கோடிகத் தேந்திக்கெழீஇ இயபொற்
சுண்ணநீ ராட்டி [சக]

நறியபொற் கலையின் மெய்யுது துடைத்து நாபிகற்
றலமுற நோக்கிச்
செறிமயிர் மணியுச்சியினையும் பொத்தித்
திகைத்தயர் வதிகரித்திருந்த
மறிமரு ளுேக்கின் மடவர றன்பால் மைந்தனை
மலர்க்கரத் தேந்தி
வெறிமலர்க் கூந்தற் குவளையொண் கண்ணார்
விழைவொடு மளித்தனரன்றே [சஉ]

வாங்கியவளவிற் படுதுய ரனைத்து மாளமென்
மேலறப் பெருகித்
தேங்கிய வுவகைக்கடலிடை யாழ்ந்து செழியதன்
மடித்தலத்திருத்திப்
பூங்கரும் பனுக்கு மொழிச்சிறு விடைவிற் புருவமெல்
லியலுறுமணங்கு
கோங்கரும் பனைய விளமுலை பிடித்தக் குழவிதன்
வாயிடைவைத்தாள் [சங]

வைத்தவார் தனத்துக் கலசம தருந்தா வரவாப்
பருமிதமடைய
வித்தகைக் குழவி யிருநிலவரைப்பி லிருப்பது
முளது கொல் லென்னப்
புத்தகமனைய புறவடித்துவர்வாய்ப் பூவையுண்
மழுங்கியிங் கிருப்ப
மத்தகக் களிற்ற மன்னர்கோ னுணர்ந்த வண்ணமு
மிழைத்தது முரைப்பாம் [சச]

அடன்மிகுந்திகலு மவுணரை யடர்த்த வைம்படை
தாங்கிய பெம்மான்
மடலுறுங் கமல மலரடியகலா மனத்திறை
யவனிடம் பகர்வான்
நடமுலைவரையின் வடமணிந்திலகு தையலா
ளிருளையர் விரைந்தே
திடமிகுந்தொளிரும் புயவலி யரசர் திரண்டுகு
ழுவையிடை யடைந்தார் [சரு]

கொண்டலுந் தருவு நாணநன் னிதி கைக் கொண்டுகந்
திரவலர்க் களிக்கும்
வண்டின நெருங்கி யின்னிசை முரல மதுவிழி
நிம்பநற் றூரான்
புண்ட ரீகங்கொள் ளடியிணை போற்றிப் பொற்புறுஞ்
சுணங்கவிர் நகில
மிண்டைகொண் டிலகுங் கருங்குழல்மடவா
ரெதிர்வியந் தினிது நின்றனரால் [சசு]

வந்து தன் கமலமலரடி வணங்கி வணக்கமோ
டெதிருறு மடவார்
இந்துநன் முகங்கண் டிங்கெழுந் தடைந்த தென்னகொல்
விளம்புதிரென்ன
விந்தையி னிலகு மணிமுடி வழுதி வேந்தர்கோன்
வினவுதன்முன்னர்
அந்த மன்னனுக் கவ்விடைக் கருங்கூந்த
லணங்கினர் விளம்பலுற்றனரால் [சஎ]

வெஞ்சமத் திகலு மடையல ராவி வேலினிற்
பறித்திடு மிறையோய்
மஞ்செனக்கரிய மலர்க்குழன் மடந்தை
மணிவயிற்றிடையி னின்றின்றே
செஞ்சுடர் விரித்து வான்முகட்டொளிருந்
தினகரர்கோடியென் றுரைப்ப
அஞ்சுடர்விரிக்கு மாண்மகவாகி யகலிடத்
தினிதுதித்த தம்மா [சஅ]

கண்ணிணை சிறிதும் விழித்திலை வாயங்
காந்தினி தரற்றவுமில்லை
யண்ண லஞ்சுடரி னணிதிருமேனி யசைத்திலை
யஞ்சனின் மகவு
முண்ணிகழ்ந் தொளிரு மாவியினேடு
முற்றுறைகின்றது வென்று
வெண்ணிகர் குமிழ்மூக் கன்னிய ருரைத்தாங்
கேகின ரிறைவனைத் தொழுதே [சகூ]

கொடியென நுடங்கு மிடைக்கனித் துவர்வாய்க்
கோதைய ராண்மகவெனுமுன்
படியொடு கனகமணியிழை வலயம்பரித்தெழு
வெனத் திரள்புயங்கள்
வடிவுமிக்குயர்ந்த மேருவென்றுரைசெய்வரையென
மிக்கினிதுயரக்
கடியயிற் படைகொ ளிறையவ னைகைக்
கடலிடையாழ்ந் தனனுகி [ருய]

காதல னில்லாத் தன்மையிற் றுயரக் கடலிடை
யாழ்ந்துளம் வருந்தி
யீதள வாகக் காலம தகற்றி யிருந்துமிக்
குழலுறு மெம்பாற்
போதவு மொளிரு மாண்மக வீந்த புனிதமைம்
முகினிறத் தாதி
நாதனிங் கதற்குண்டாயசெய்கைகளு
நல்கிலா திருப்பவனல்லன் [ருக]

அன்றிநந் தமக்கோரருங் கொடுந்துயர்க
ளடைந்திடி லன்னவ னல்லால்
சென்றினி தொழுக்குந் தன்மைய ருளரோ
செறிதிரைப் பரவை சூழுலகில்
என்றெளிவிரிக்கு மயிற்படை தரித்த
வெழின்முடி மன்னவர் வணங்கக்
குன்றெனப் பணைத்த புயவலி படைத்த
கோமகன் றிருவுளத் தெண்ணு [ருஉ]

அருமறைக்குரிய வேள்வி யந்தணர்களாசிகள்
    பற்பல நவிலத்
திருமுடி தரிக்கு மன்னவர் தாழ்ந்து திரண்டு
    நான்மருங்கினு மேக
மருமலர்க் கூந்தற்குவளை யொண்கண்ணார்
    வானிறக் கவரிகா லசைப்ப
வுருமெனத்தவள வலம்புரிக்குலமு முயர்
    முரசினங்களுங் கறங்க    [ருங]

மிடைந்தொளிர் தரளமணி யெடுத்தெறியும்
    வெண்டிரைத் தாம்பரவன்னி
யடைந்தரும் புனலி லாடியுள் ளுவந்து
    தென்கலைப் புண்டரமணிந்து
குடைந்து வண்டிமிரு மருமலர்த் தொடையல்
    கொண்டகன் றுளிருமார் பிறையோ
னடைந்தனன் விரைவில்லுதையனைப் பொருந்த
    னையனற்றிருமுகங் காண்பான்    [ருச]

செப்பெனப் பரந்து மார்பிடம் கவர்ந்து
    திரண்முலை மடமினா ருகந்தங்
கொப்பருங் குழவிதனையெடுத் தளிக்க
    வொன்னல ருடறடி யிறையோ
னப்பரன் றனது திருவுருவனைத்து மன்பொடு
    கண்டு கண்டுருகித்
துப்புறுஞ் சுடர்கொளுதையனைக் கண்ட
    தூயசெங்கமல மொத்தனனால்    [ருரு]

உருமினு மிரட்டி மும்முரசினமு முயரிய
    சங்கமும் பிளிற
அருமறைக்கிழவர வாவின தளவா யகத்திடைப்
    பெருங்களிதுளும்பப்
பொருவிலுன் கனகப் பொருப்பெனக் குவித்து
    வித்தினற்றனமும் மிமிரு
மிருநிதிக்குவையு மொண்ணிலா நிரையுமிசைபெறப்
    புனலொடு மளித்தா    [ருசா]

மெய்வகையுணரு முழையரைக் கூவி
　　விளங்கு நம்மரபினுக்குரிய
தெய்வமா மாதி நாயகனமரூந் திருத்தளியேமுத
　　லாய
பொய் வகையொழி நன்னாட்டினிற் சிறந்து
　　பொலியுமால் சன்னதி தோறும்
மெய்வகை திருத்தி யாடைஞ் ணிதிய மிகுநில
　　முதற்சிறப் பளிமின் [௫௭]

ஆனினமுதல பற்பல வுயிர்க ளருந்திமெய்
　　விடாயது தணிப்பா
னீனிறக் கடலினிரட்டிய தடமும் நிகமநற்
　　சாலையுஞ் சிகரம்
போனிகழ் தருமாலயங்களு மெவரும் புகழ்தரு
　　மன்னசத்திரமும்
மானயிவ வகையி னுயபோ லினும்ப லாயிர
　　வறத்துறை யிழைமின் [௫௮]

சிறையது விடுமின் சிறைக்கள மெடுமின்
　　றிகழ்முடி மன்னவரளக்கும்
இறைவிடு மீரேழாண்டயனிதிய மீட்டு
　　மாயத்துறை விடுமின்
குறைவிலா நிதியவரையது திறந்து கோதறப்
　　பலவரு மெழுநா
ணிறைதருமளவும் வெறுத்திட வகத்துணோர்ந்தவை
　　யெடுத்யெடுத் தளிமின் [௫௯]

நண்ணிய தடந்தோட் கொற்றவ ரிழைத்த நவையெலாம்
　　பொறுத்துறப் பிணித்த
திண்ணியகழல்யாப் பறவிடுத் தவர்தந்
　　திருநக ரடைதரச் செலுத்திப்
பண்ணியற்றமிழின் வகைநல முணரும்
　　பான்மைநம் பேரவைப் புலவோர்
உண்ணனி மகிழுந் தன்னெனக் கலைபு
　　முறையுடன் பணிகளு மளிமின் [௬௰]

வெண்டிரை கொழிக்குங் கருங்கட லுடுத்த
மேதினியதனிடைச் சிறந்த
திண்டிறற் புயத்த மன்னவருணர்வான்
றிருமுகங் கடிதினி லனுப்பிக்
கொண்டல்கண் படுக்கு மாடமா நகரங்
கோதற வலங்கரித்திடுவான்
அண்டுறமாந்த ரறிதரமுரச மறைதரச்
செய்மினென் றுரைத்தான் [௬௧]

இடியெனக் கறங்கு மணிமுரசோதை
யெழினகர் மாந்தர்தஞ் செவியிற்
கடிதினிற் படுமு னளவிலா வோகைக் கடலிடை
யாழ்ந்தன ராகி
வடிவுறுமயில்வே லனையகண் மடவார் மை
ந்தரோ டிணைந்திர வகற்றும்
படிமருந் தொடையும் பாயொளி விரிக்கும்
பற்பல வணிகளுமகற்றி. [௬௨]

மங்கையர் நகிலப் பொருப்பினுக்கணிந்த
வாசநற் கலவையின் றுகளும்
கங்குலிற் கரிய கூந்தனின் றிழிந்த கான்மக
ரந்தமு மடங்க
வங்கமுன்றி றொறுங் குங்குமச் செழுஞ்சே
றதுகொடு வழுக்குறத் தெளிப்பார்
பொங்கிய சுடர்வே லிறைமகன்றன்பாற்
புதல்வன்வந் துதித்திடு மகிழ்வால் [௬௩]

பத்தி யினிவந்து விசும்பக டுரிஞ்சும்பரூஉ
மணிமாட பந்தியினற்
பித்தியின் புறத்து மகத்திலும் புதுவெண்
மெய்யொளிச் சுதைகள் தீற்றிடுவார்
நித்திலமுறுவற் கமலைவா முகல நிருமலன்
றிரு வவதாரச்
சித்திரவகையே முற்றிலு முவந்து தீட்டு
வர் கவின்பெறமாந்தர். [௬௪]

வெண்ணில வெறிக்குங் கையிலையின்
கிரியின் மிசைப்பலகதிரெழுவனபோல்
திண்ணிய மாடமுகட்டிடையனந்தஞ்
செறிசுடர்த் தூபிக ணிரைப்பார்
நண்ணியகுலிசத் துவசமு முழுவை நாடிய
கொடிகளு நடுவார்
தண்ணியவிதை வித்தரிய பாலிகைகள்
சதிருற வயின்வயி னிறைப்பார் [சுரு]

மங்கல மகலாமறுகிட மெங்கு மணிநடைக்
காவண மிடுவார்
துங்கமென்பாளைக் கமுகொடு சுவைகொள்
கன்னலுமினிமையிற் கனிந்த
செங்கனித்தாறு படுவிரிதலையுஞ் சேட்பட
வெழுத் தொறுமமைப்பார்
சங்கையின் மகரதோரண நிரைப்பார்
தமனியப் பாவைகள் தொடுப்பார் [சுசு]

தேன்ினமுரன்றிந்தள விசை பயில செழுமணித்
தாம நாற்றிடுவார்
வானில வெறிக்குமார வாரமுமொண் மரகதக்
கோவையுந் தொடுப்பார்
ஆனிழு துறப்பெய் தருஞ் சுடர்தருமொ ணஞ்சர
விளக்கினமிடுவார்
கானிடுமலருந்தண்பனி நீருங் கலவையுங்
குழம்பொடு மிறைப்பார் [சுஎ]

வேறு

கரியகுன்முகி லனையமும் மதம்பொழி கரிகட்
குரியவோடையு மேற்றவிசையு முறவமைப்பார்
விரியும் வான்முக டிடிதரத் தாவியு மீளும்.
பரிகள் பல்லணங் கால்கழுத்தணிகளும் படுப்பார் [சுஅ]

திவிய மாமணி யணிபெறக் குயிற்றிய திகழும்
சவிகொண் மாவிரதங்க ளெண்ணில நிரைதயங்க
விவுளிசேர்த்திருமருங்கிடை நிரைப்பரா லிரும்பொன்
அவிரு மேருபல் லொருவழிச் சேர்ந்தன வனைய [சுசு]

தவள வானில வுமிழ் மணிமாட மேற்றுவத்
துவளிலாநறு மகிற்புகை வயின்வயின் றெருகுப்பார்
பவளவாய்க்கொடி நுண்ணிடைப் பனிமொழிக் கரிய
குவளையொண்கணர் குரவையாட் டயருவர்கூடி [எ0]

முருகுசேரு மாலதிக்கலிகைக் கிணைமூரல்
குருகுசேருமால் வரையெனப் பொலிதரக் குவிப்பார்
கருணையோடுமற் றரியநற் கனிவருக்கமுநேர்
அருகுதோறுஞ் சிற்குன்றென வமைப்பர்களன்றே [எக]

இனியவாய முக்கனிகளு மிடையிடை நிறைப்பார்
புனிதவாதர நிறைந்த வுள்ளத்தினர் பொருந்தி
தனிவிருந்தினர்க் கெதிர்கொடு சென்று நற்றகையாய்
மனி யுமக்கெமக் கென்றுந மகங்கொடு வருவார் [எஉ]

சேயதேறலி னறுநெய்பால் தயிருடன் சேர்ந்து
தூயமாமறுகெங்கணுந் தொனியுறத் துதைந்து
பாயவென்னறு மாகனகக் கலம்பரப்பி
யேயகாரண னீடியருக் கின்னமு திடுவார் [எங]

தழனிறத்தநற் றிகிரியு மிவுளியுந்தான
மழவிருங்கரிகளு முகைத் தவரவர் வருவார்
பழமை யாயபொற் கலன்களை வெறுத்தலேம் பாலார்
அழகினீடிய கலன்களைப் புனைகுவரன்றே [எச]

ஊறு தேன்பொழி மாலிருஞ் சோலைவெற் புயிர்த்த
நாறுசந்தன வரியமென றேய்வையின் றீய
சேறுநூலிடை தேம்புறப் பணைத்தருஞ் சிகர
வீறுவாய்ந்திணைந் தடர்தரு முலைமுகட் டணிவார் [எரு]

ஓங்குமாமதி வடந்தனைப் புனைகுவ ரொழுகுந்
தேங்கொள் வண்டின மலைதர வோச்சிநீர் செழுஞ்சு
ருங்குமால்குழல் திருத்தியத் தலைப்பணி சாத்தி
பூங்கொண் மாலதி செவந்திநற் பிச்சியும் பொறுப்பர் [எசு]

ஏரவாணுதற் சுந்தரத் திலகம திடுவார்
போரவானில வெறியுநித் திலச்சுட்டி புனைவார்
சூரவேனிக ரமபகத் தஞ்சனந் தோய்ப்பார்
ஆரவாரவம் புதிக்கிரு வாய்பிட லனைய [எஎ]

பொய்யமைந்த நுண்ணிடைக் கணிமேகலை புனைவார்
துய்யநற்பசுங் கழையெனத் திரளுறுந் தோளிற்
செய்யமாமணி குயிற்றிய வொண்கலன் றிருத்திப்
பெய்யும்பொனிற் றொடிபல முன்கையிற் பெய்வார் [எஅ]

கடிதினிற்றழ னிறத்தநற் றளிர்நிறங் கவற்று
மடிமிசைச் செழுஞ்செய்ய பஞ்சின் குழம்பணிவார்
வெடிகொளம்புய மிசையனஞ்சிலம்புவ வனைய
படிவுறுஞ் சிலம்பொலிதரப் பதமிசை யணிவார் [எகூ]

மாடகத்த நன்மகரயா ழெடுத்திசை வகுப்பார்
பாடகத்தொடும் பரிபுரத் தொலியெழப் பதம்பேர்த்
தாடகக்குழை யலைதரத் தனித்தனி யரிய
நாடகத்தொழில் நலந்தெரி மடந்தையர் நடிப்பார் [அ0]

அந்த மாடவின் னெழினகர் மாந்தரு மடர்ந்த
சந்த வார்முலை மாதரு மகங்களி ததும்ப
இந்த வாறியற்றியபின்ன ரக்கொடி யிடையார்
விந்தையோடு பொற்சுண்ண நீராடுற விழைவார் [அக]

வேறு சாடிகொப்பரி சாருங் குழிசியிப்
பீடியற்கலம் பெய்திடி லற்பமே
நாடுமென்ன நளியும் பொழிபுனல்
ஓடிடாம லொருங்குறத் தேங்கவே [அஉ]

பண்ணுலாவிய பாவினு மின்மொழி
விண்ணுலாவிய மின்னிடை மாதரார்
எண்ணிலாதவரோர் மறுகெங்கணும்
வண்ணநீடு வரம்புகள் கட்டினர் [அங]

தமனியத்திற் சமைத்த தளங்களாற்
கமவசந்தக் கலவைக் குழம்பினோ
டிம நறும்புன னெய்நல்லெண்ணெ சுணம்
அமரு மத்தர் புனுகு மென்னுனமே [அச]

வண்ணமுற்ற பொற்சுண்ண வனநறுந்
தண்ணநீரிற் றகையன பட்டிலா
விண்ணின்மா நகரெங்கும் விடுத்தன
டண்ணினின் சொற்டனிக் குபுன்பாதரே [அரு]

சத்தவார்கட றூமொருங் குற்றபோற்
சுத்தவீதிகடோறு நன்மஞ்சனம்
பத்தியோடு பொழிந்தபின் பான்மொழிக்
கொத்தலர்க் குழற்கோதையர் கூடியே [அசு]

இழையினுண்ணிடை நீவியிறுக்கிமென்
றழைசுணங்கின் றனங்கள் குலுங்குறுப்
பிழையில் வம்பு பிணித்து மழைக்கருங்
குழறிருத்திசற் கொண்டை யணிந்தரோ [அஎ]

தந்ததாரைக் குழலுந் தமனிய
விந்தை தேர்கட் சிவிறியு மின்னபோ
லந்தமில் புனலாடுங் கருவியோ
டிந்துவின்னுத லேழையர் தோன்றினர் [அஅ]

இடக்கை பேரிகை யேய்ந்திடு திண்டிம
முடக்கை பம்பையுறுமி முரசொடுந்
தடக்கு தோறவில் தமரவலம்புரி
திடத்திருச்சினந் தேசிகக்காளமே [அசு]

கூறிவாச்சியங் கொண்டு குணில்களா
லேறுசூன் முகிறன்னி லிரட்டியே
நாறிசைக்கணு நண்ணிமுழக்கிடச்
சாறினேழியர்தாம் புனலாடுவார் [௯0]

கள்ளலம்புங் கருங்குழன் மாதரார்
உள்ளலம்பிய வோகை கிளர்ந்தெழ
வெள்ளிடற்கிடனின்றி மறுகடர்ந்
தள்ளியள்ளியவர் புனலாடுவார் [௯க]

கூந்தல்சோரக் கொடியிடை சோர்தரக்
காந்தனென்னக் கரஞ்சிவப் பேறவே
சாந்தணிந்த தனங்கள் குலுங்குற
வாந்துருத்தி கொண்டாடுவர் நீரரோ [௯உ]

கலைநெகிழ்ந்தது காண்கிலர் கச்சுமென்
முலைநெகிழ்ந்தது மோர்கிலர் மொய்யொளி
யலையு மார மகன்ற துணர்கிலார்
தலைமை சேர்புன லாடுந் தருக்கினால் [௯௩]

அத்தர் பன்னீர் புனுகினோ டாரகெய்
யொத்துவாரி யொருவ ரொருவர்மேல்
லத்த நற்குழ லாலினி தாடுவார்
புத்தகத்தின் புறவடி மாதரே [கூச]

அருத்தி யோடொ ரரிவைநன் னெய்யைமா
ரொருத்தி வாயி லொழுக்க வுமிழ்ந்திட
திருத்தன் வாயெனுஞ் செவ்வித ழாம்பல்பெய்
மருத்தண் டேற றனைநிகர் மானுமால் [கூரு]

கூந்தன்மீதிற் குழல்கொடு பீச்சுநீ
ரேந்தி ளந்தனந் தன்னி லிழிதரல்
சேர்ந்த மேருத் திகிரியின் மீமிசை
போர்த்துமேகம் பொழிதலை மானுமால் [கூசு]

மாதர்பல்லோர் மடந்தையின் வீரன்முக
மீதருங்குழல் கொண்டு விடும்புன
லோது வானெழு மொண்மதி வீசிய
சீத வெண்கதி ரென்னத் திகழுமால் [கூஎ]

விடவெண் பால்கொடோர் மின்னிடை மாதினை மேல்
லுடல்வெழுப்பினை யுற்றுடன் றீர்தலாற
புடவி யிற்பசும் பொன்னினற் பாவையைப்
படம்படுத்து பறிப்பதை யொக்குமால் [கூஅ]

நெஞ்சினிற் பொழி நீரிரு கொங்கைமே
லெஞ்சலானதற் றேயிழிந் தோடுறல்
விஞ்சடர்ந்தெழு விண்டுவின் மேல்வழி
யுஞ்சிறுதண் ணருவியை யொக்குமால் [கூகூ]

படைக்கண்மங்கை பனிமுகம் வீசுநீர்
தடுப்பவங்கைத் தலம்பொதி தன்மரை
யிடக்குள்வீழ வெமைவருத் தேன்மதி
யடைக்கலம்மென் றடைதலை மானுமால் [ா]

சோதிமாமணி மாடங்க டுன்றிய
வீதிதோறும் விழைவி னடர்ந்துமுப்
போதுமீறு வைகல் புனலிடை
மாதராடி யனங்களி யுற்றபின் [ாக]

வண்ணமாமறு கெங்கும் வதிந்தபொற்
சுண்ணநீர் தலைப்பெய்து துவன்றியே
தண்ணரும் பொருணதி சார்ந்திரும்
பண்ணைவாயிட மெங்கும் பரந்துபோய் [௱உ]

கலிகொள் வெண்டிரை கண்ணி யதினுள
புலவுநீக்கிப் புதுமண மீந்தவன்
சுலவு மிப்பி சுரிமுக முண்ணச்செய்
உலவுமார முயிர்த்திடச் செய்யுமால் [௱௩]

திருவவதாரப்படல முற்றும்.

---

# நாமதேயப் படலம்

## வழிபடுதெய்வ வணக்கம்

கற்றவ னீராடவெழ முதலியாண்டான்
கையும்பின் வடுகநம்பி கரமென்போதும்
பற்றியெழற் காண்டானுள் வெதும்ப வத்தைப்
பரிகரிக்க வவர்க்கிருதாம் பரச்செம் பீந்தாங்
கற்றநதிப்புனல் கொணர்வித் தலைதா னம்பி
யாந்தரிகப் பத்திவெளி யறியச் செய்த
நற்றவனெம் மெதிராச னடியை வாழ்த்தி
நாமதேயப்படல நல்குவாமால். (க)

(வேறு) மீனவன்குல வேந்தன் வியந்துபலெ
ழனமந்தணர் தாமுகக்கக்கொடுத்
தானபின் பேரவை யெழுந்தாங்கொளிர்
வானரியணை மன்னினன் மாதரோ. (உ)

ஆரியர்களி ளறிஞர் கணிதநூ
லோருவோர் மெய்யுறுதிகொ ளாரணஞ்
சோர்விலா துணர் தூய்மறை யாளர் மற்
றோரருதொளி ரேந்தலுழையரே. (௩)

மற்ற நுட்ப மதியின ராணிறை
வுற்ற சங்கத் துறவிலர் மௌலிதோய்
பொற்றிருக்கழற் பூப னுவகையாற்
சொற்றிடுஞ்சில தூய்மொழி யன்றரோ. (ச)

மன்றுளோரெம் மனமறை யின்முகை
யின்றலர்ந் தொளி யெய்திட வெல்லிளங்
கன்றை நேர்வருகான் முளைக்கியாதுநா
மின்று நாம மிடுத லியம்புவீர். (ரு)

கொக்குமீதுறு கோகிலவின் சொலார்
செக்கர்மாடத் திருக்குருகாபுரி
புக்க நும்மைப் புரக்கும் புயலுக்கு
மிக்க வாதிப்பிரான் றளிமேவியே. (சா)

பரவை சூழுல கோரடி பற்றிடக்
கரவினுலளந் தின்பருள் கான்மலர்
சிரமணிந்தவன் சீரருட் பெற்றுடன்
மரபினுமம் வழங்குதன் மாண்பரோ. (எ)

பாதுகாத்துயிர்ப் பாலருள் கூர்ந்துநன்
னீதியாலுலகோச்சு நிருபனின்
றீதிலாத திருவுரை யுட்கொடீ
தோதினே மற்றுளப்படி செய்குதி. (அ)

(வேறு)

இவ்வண மன்றுளார்சொல் லியல்பினை யிறைவ னுள்ளிச்
செவ்விபி னமைத்து நந்தஞ்செய்தவத் துதித்த சேய்க்குக்
கொவ்வையின் கனிவா யின்சொற்கோங்கரும் பனைய கொங்கை
நவ்விநேர் விழியாய் யாது சாற்றலா நாமமென்றான். (கூ)

நம்மகவெனவுமன்ன னவின்றிடப் பெற்றேமென்று
செம்மலங் கடலுளாழ்ந்து திரு முகமலர்ந்து நீருண்
மைம்முகிற் குழலி வேந்தன் மலரடி பரவி யின்பம்
விம்மியாழ் குழலே யின்சொல் விளம்புவள் சிலநு மன்னே (ய)

புத்தெனுங் கொடிய சேறிற் புகுந்துழன் றழலுகின்ற
தத்தினை யறுத்து நம்பாற் றனய சம்பத் தையீந்த
வித்தகன் பொலிந்து நின்ற மெய்ப்பர னமரரஞ்ச
நத்தினை முழக்கு மாதி நாதர் சன்னதி முன் சென்றே [௱௧]

வஞ்ச மற்றுளத்தை யைவர் வழி செலுத்தாது வாழ்த்து
நெஞ்சினர் நாற்பொருட் குணினைத்த தங்குவந் தளிக்கும்
கஞ்சனன் மலர்த் தாட்கீழ்க் கான்முளை வணங்கச் செய்து
விஞ்சுநம் மரபினுமம் விளம்பலே விதி யென்றாளே [௱௨]

கொங்கலர்க் கருத்து மைம்பாற் குவளை வாண் மதரரிக்கண்
நங்கையா ருரைத்த வாய்மை நங்கருத்தியைந்த தென்றப்
புங்கவ னமைச்சர்க் கூவிப் பொரு கடற் றானைசூழ
விங்கடைந் திடுவீர் சேமா திறைவனைத் தொழச் செலற்கே [௱௩]

ஆண்டகை யியம்பாமுன்ன மரும்பொருண் முகத்தி னோக்காற்
காண்டக விரைவிற் செய்யுங் கருணை கூருழையர் சேனை
யீண்டவந் தறிக்கை செய்தவ் வின்னடி பரவ வண்டு
பாண்டருந் துளவிஞ்ஞனைப் பணிந்திடற் கெழுச்சி யானுன் [௱௪]

தண்ணுமை படகம் பீலி தக்கை திண்டிமந் தடாரி
மண்ணமை முழவு கேட்போர் வள்ளின முவந்து கீதக்
கண்ணுகர்ந் திடுபன் னகைசுரமோ டெக்காளஞ் சின்ன
மெண்ணில் பல்லி யங்களெங்கு மெறி திரைக் கடலினார்ப்ப [௱௫]

கருவிளை குமிழி னெண்பூக் கயிரவ மலர்களுட் கொண்
மருமலர்க் கமலமோர் பொன் கொடி மிசை மலர்ந்த தன்ன
திருமுகத் தரிவை மார்வெண் கவரியின் சிறு கால் வீசக்
குருமணி நிலவு காலுங் குழூஉக் கொள் வெண்குடை நிழற்ற [௱௬]

மட்டவிழ் குமுத வேந்துள் வதியிரு முயனீத் தூர்வான்
விட்டதி வெளிவந்தாக மீதிரு கயல் கடாங்கி
யிட்டமோடுல வலன்ன வெழின்முக மடவாரால
வட்டமீயோட்டிகொண் டுண்மகிழ்ந்தருகசைப்பர் மன்னோ [௱௭]

மாசுறாங் கலியின் றீயவலிகெடு மெனவே வெள்ளை
வீசுதலனைய வான்மீவெண்டுகிற் கொடிகளாட
வேசிவிண்ண ரம்பை மாதர்க்கின்புறு பரதங்காட்டுந்
தாசியரிசையினேர்ப் பச்சதியிடையடிகள் பேர்ப்ப. [௱௮]

தேங்கமழ் கமலப் புத்தேள் சேணிறை கலச யோனி
யாங்கவிர் வேத நாவரரசர் மூத்தமிழ் தேர் வாணர்
பாங்குட னருகிலாரப் பரவு பொற் சிவிகை பம்ப
வீங்குதிண் குவவுத் தோளார் கட்டிய மியம்ப மன்னே [௰௯]

கங்குல வயிற்கை யொன்னார் கணங்களின் வலி மலைக்குத்
தங்கிய குலிசத்திண்டோட் டானைமுன் மிடைந்து செல்லப்
பொங்கு செந்துக ளிவர்ந்து புயலெனப் படரத் தீய்க்கும்
வெங்கதிரவிந்து வானஞ் செக்கரில் விளங்கித் தோன்ற [௨௰]

தூயதீப் புடத்திற் பல்காற் சுட்டசெம் பொன்னி லும்பர்
மேயயாணரினாற் செய்ய வில்லுமிழ் மணியிடைக் கண்
ணேயவிட் டமைத்த தொட்டிலேற்றி யக்குழவி சூழ்ந்தாங்
காய மிண்டேகலென்மு னம்புலிக் கணநேராமால் [௨௧]

கோதில்பூந் தொட்டி லூடு குயிற்று செம் மணிவிற் றோற்றம்
மாதவ னரசன் சேயா வந்தவா றறிந்து போற்றப்
பாதலத் தனந்தன் றன்மெய்ப்படிவத்தை மறைந்தீண் டேகச்
சோதி கொள் சுடிகைநாறு மாமணிச் சுடரி னேர்த்த [௨௨]

இன்னணங் குழவி தன்னே டிறைவனு மெழுந்து செங்காற்
பொன்னனந் துயிலுஞ் சேக்கைப் பூம்பணைக் குருகை மேவிக்
கொன்னவில் படைகளுர்தங் குழற்கிடு புகையின் வாச
மன்னிய மறுகி னூடுண் மகிழ்தர வலம் வந்தானல் [௨௩]

கூன்சுரி முகங்க ளினுங் கோதினித்திலங்க ளூற்றித்
தேன்பயி லலரி னூற்றுஞ் செழிய காவண முகப்பில்
வான்றட வரம்பை நாட்டும் வாயினின் றயினிநீரைக்
கான்படு மழலைத் தீஞ்சொற் கன்னியர் சுழற்றினரால். [௨௪]

கருமணி குயிற்று செம்பொற் றகட்டுறழ் கடிகொண் மாத
ரிருவரோ ரிருவராய்த் தம்மின் முனைந்திக் காப்பிட்டுப்
பருகவின் னமுதிற் சேயின் படிவத்தி னெழிலைக் காற்பின்
றிருமினர் சிலர் கர்ப்பூர வாரத்தி தெரியச் செய்தார் [௨௫]

ஆரண மொருநான் கோது மயனன வறிஞரெல்லாம்
காரணனும நாவி னவின்றிரு கரத்திற் செம்பொற்
பூரண கும்பங் கொண்டிப் பூதலத் துயிருயசசெய்
காரணன மகவிற் றோன்றப் பெற்ற காவலனைக் கண்டார் [௨௬]

மட்டவிழ் நறவமாந்தி வண்டிமிர்க் தடரு மைம்பாற்
கட்டழ கரம்பை மாதர் கடிப்பவரடிகள் போர்ப்பக்
கொட்ட மிட்டமர ரீட்டங் குலவவென் றமுதைத் தால
வட்டம் வைத்திடு புட்டோன்றல் வாகனன்றளிக்குட் சென் [உஎ]
(றான்

வேறு

அத்தினா புரத்து வாழருச்சுனற் கறத்தினால்
தத்துவத் தரும்பொருள் ரதத்தினிற் றெரித்தவன்
மெத்தவூட் புறத்துறிக்கிடைச்சி வைத்த வெண்ணெ பா
னத்தி யுண்ட பூரணத் தேச லோக நாதனே [உஅ]

எருதோ ரேழடர்த்து மாதொருத்தி பாலிணங்கினாய்
மருதினூடு போய்றுத்து மாயமாய் வருந்தினாய்
குருதி தோயப் பதிககிழ்ந்த தூது கூறினாய்
கருதி நின் குணந்தை யார் கணிக்க வல்ல வல்லரே [உகூ]

தாலமீது நாக கேதனன் முனந்தளர்ந்த பாஞ்
சாலி நாணழிந்திடாது தானைமுன் னளித்தனை
சில வேத வாணனெஞ்சு தேற வாக மோடவன்
பாலனீ நிறைது தன்மை பார் மதிக்க வல்லதோ [கூ0]

இச்சையா லுளங்கனிந் தெழுந்த வன்பினோடு நீ
மெச்சவே சுவைத்திடுங் கனிக்குளின்பு விஞ்சினா
லச்சுதற் கெனப்புறத் தமைத்த சௌரி யங்கனை
யெச்சிலுண்டு வானளித் தெழுந்த புண்டரீகனே [கூக]

இன்னணம் பொலிந்து நின்ற வெம்பிரா னிணைப்பதஞ்
சென்னியிற் புனைந்து பின் றுதித்துளஞ் சிறப்புறத்
தன்னருங் குலப்பெருஞ் சுடர்ச்சுதன் றனைப்புவி
மன்னனுண் மகிழ்ந்தவன் பொலன்கிழல் வணக்கியே [கூஉ]

புத்தெனுங் கராலயைப் புடைத்தெமைப் புறந்த வேய்
முத்தனோ டயன் பராவு மூர்த்தி யாதி மூலமென்
றத்தனைப் பழிச்சி மன்னவன் றிருவருட் கொடுண்
ணத்தியே மகற் குகந்து நாம மோத லாயினான் [கூகூ]

தங்குலப் புரோகிதன் றனைக் கோடேத மின்றியா
றங்கமைந்து வேள்வி நான் மறைக்குடே ரகங்கொணாற்
புங்க வேத வாணர்கூய்ப் பொலிந்தபின் விதிப்படி
மங்களத்தி யங்கறங்க மாதவர்க் களிப்பனால் [கூச]

செம்பொனே ரிலங்கு பூணிவர்ந்து விண் செறிந்தவிற்
பம்பு மாட கூட மாளிகைச் செநெற் பணைத்தல
மம்பரஞ் சுவைப்பயஞ் செழித்தவா னிதிக்குவை
இம்பரைந் தருக்கு நேர பீட்ட தான மீந்தனன் [௩௫]

பொங்குவெண் முனூலிலங்கு பூசுரர்க்களித்த போழ்
தங்கை விட்ட நீருகுந் துலாயியாறு பாய்ந்தவண்
எங்கணும் பரந்து தாம்பரவன்னி யாயிழிந்ததே
லங்கவன் செய்தான நேரிதாகு மென்ன லாகுமே [௩௬]

எண்ணிருன மாதவர்க் களித்து லோப மொன்றிலா
துண்ணெகிழ்ந்து நீதி நூலிலோது நேம கப்படி
நண்ணியே சடங்கினை நடத்தியன்பின் வந்தெழூந்
தண்ணளிக் கடற்கு வள்ளல் சாத கர்ம மாற்றியே [௩௭]

ஏறெருத்த மீதுரீச னுக்கய னிழைத்ததத்
தூறரித்த மால் பதத்தி லொண்டமிழ்ப் புனைந்து நா
வீறனுகு மெய்ப்பரன் றனக்கவன் குலப்பெயர்
மாறனென்று நாமமன் வரோதயன் வழங்கினான் [௩௮]

அந்தரத்தி னன்பனுகி யம்புயத் தவன் மறை
யெந்தை தானுறற் கொணும லின்னு மேத்த நின்றவன்
றந்தையாகி மன்னவன் றனக்கு நாம முந்நரில்
விந்தை சேரவன் புகழ் விளம்ப யாவர் வல்லரே [௩௯]

இன்னண நராதிபன் பொலிந்து நின்ற வெம்பிரான்
றன்னருட் கொடேதமார் சடத்தினைச் சினந்ததீவ
கன்னலின் சொனங்கை கான்முளைக் கநாம மோது நாள்
பொன்னகர்க்கு ளோருகந்து பூவின் மாரி பெய்தனர் [௪0]

மண்டலேசுரன் கனிந்து மாறனைத்த மீஇபெணி
லண்ட முண்டு மிழ்ந்த மாயனம் புயப் பதம்பராய்
விண்டடைந்த மாடமார்த மாளிகைக்குண் மேவியே
கெண்டை யொண் கண் மாதிேனுடு கேண்மையுற் றுறைந்தனன் [௪௧]

நாமதேயப் படல முற்றும்.

# ஆதிமால் தரிசனப் படலம்

## வழிபடு தெய்வ வணக்கம்

பொன்பதி யெனவாழ் கோட்டிப் புங்கவ நம்பி பாலீ
ரொன்பது தடவைக் கப்பா லோதியந் நூலையார்க்கு
மின்புற வளித்து நாம மெம்பெருமானு ரானேன்
றன்பத மலரைச் சூடித் தரிசனப் படலஞ் சொல்வாம் [க]

இன்னண மூவகை மீதூ ரேந்தறம் சேமக் கோயின்
மன்னியந் தமரிநேடு மறுவிலா தறுசுவைக்க
ணன்னய மூரலுண் டனந்தர முடைய நங்கை
தன்னருஞ் சுதனைத் தொட்டி லிடுதரத் தலைமை சான்றாள் [உ]

கொண்டலிற் சுருளுங் குஞ்சி நித்திலக் கொண்டை சேர்த்துத்
துண்டவெண் பிறைநுதன்மீத் தூராயொளி துலங்கச் சாத்திப்
பண்டமார் சுடிகையோடைப் பற்பல மணியிழைத்த
குண்டலம் பிடிகஞ் சாத்திக் குலவு கண்டிகையும் பூட்டி [ங]

அம்புயத் தொளிரும் வைரத் தழுத்து மங்கதமுஞ் சாத்தி
வம்புறு நிம்ப மாலை மார்பிடை மதாணிசாத்தி
பம்பு மொண் கதிருலாய காஞ்சியும் பரிவிற் பூட்டிச்
சம்பய னறியாத்தாளிற் பரிபுரச் சதங்கை சாத்தி [ச]

பாடகங் கொலுசு பாதப் பவளமென் விரலின் மிஞ்சி
யாடகத் தமைத்துப் பூட்டி யங்குலிக் காழி சேர்த்துக்
கோடு புனைகமுஞ் சாத்திக் குதலைக் கிண்கிணிக் காயொடு
நீடர வடமும் பூட்டி நிலவமண் டிலதமிட்டு [ரு]

அஞ்சன மகன்று நீண்ட வையரி விழிமேற் றீட்டிக்
கஞ்ச மெல்லடியிற் செய்ய மஞ்சொளி கதுவக் கோட்டி
வஞ்சர் கண்ணூறு நையா வகை வலக்கதுப் பினீல
நஞ்சினுங் கரியவைய்யா னலம்பெறக் குறியொன்றிட்டு [சு]

காசறுண் பிரவாளத்தாற் கவின் பெறக் கடைந்த காலுட்
டேசிகத் திடைசலாகை சேர்ந்த மாமணி குயிற்றிப்
பாசொளி பரந்த சட்டம் பணித்துமா மரகதத்தில்
வீசுவிற் றொட்டிரு நாற்றி விசித்த பொற்றொட் டிலேற்றி [எ]

பற்பல நிலவு காலுஞ் சூரிய படத்திற் செய்ய
விற்புனை யேழடுக்கு மெத்தை மேல் விரித்து வெண்பட்
டற்புத மலர்களாற்செய் தணிகொண்மே லாப்பமைத்துப்
பொற்புறு தொட்டி லேற்றிப் பூவை தாலாட்டு வாளால் [அ]

பண்ணைவாய் வளையு குத்த பன்மணி நிலவு காலுங்
கண்ணகன் றுளிரு கூடற் காவலன் மரபுளோரை
நண்ணுதற் கரிய வைதரணிக் கரை கடத்த வென்றிம்
மண்ணிடை யுதித்த வென்கண் மணியே தாலோ தாலேலோ [கூ]

உலைபடா தொளிருஞ் செம்பொ னுதயனுற் கருகாமாலை
யலைபடா வமுத மாலை யடைதரா வினிய கன்னல்
கலைபடா மதியம் வண்டர் கவர்ந்திடா தினிய செந்தேன்
விலைபடா மணியேர் நந்தா விளக்கே தாலோ தாலேலோ [௰]

கோடரங் குழையிற் பாயக் கூனிறு லுடையத் தேனார்
மாடவிர் முகடார் மந்த மாருத வரையாள் கோவே
நீடிய திரைவாய் முத்தை நேமியம் பறவை காக்குந்
தோடவிழ் கமல வைகைத் துறைவ தாலோ தாலேலோ [௰௧]

அள்ளலங் கருஞ்சே றுற்ற வகன்பணை யுழவின் மள்ளர்
உள்ளடி யுறுத்த நீல முகுமதுக் குருகூர் நம்பி
வெள்ளநீர்க் கயல்க ளுகை மேயவைந்தருவைச் சாடித்
துள்ளுநீர்ப் பொருனற் சங்கத் துறைவ தாலோ தாலேலோ [௰௨]

இருநிலத்துறு விசிட்டாத் துவைத முற்றிட வுயர்ந்த
திருமிகு மகர கேதுச் செல்வனே வாசு தேவ
தருநிழ லண்ட முற்றுந் தங்கிய தன்ன முன்னீர்
வருபுவி யோர்குடைக்கீழ் வளர்க்க வந்தவ தாலேலோ [௰௩]

வாட்டடங் கண்ணி யிவ்வா றுல கெலாம் வயிற்றடக்கி
மீட்டுமிழ்ந் தளித்தழிக்கும் விருப்பு மாத்திரத்தி லோரும்
பாட்டுடைப் பரனை முன்னுட் பயிற்றிடு கவத்தி னூற்று
லாட்டியுள் ளுவகை பொங்க வங்கையி லெடுத்துப் பின்னர் [௰௪]

முன்னுளபடி மலர்க்கண் முகிழ்த்தி யாம் வீட்ட வாறே
னன்னய வணைகிடந்து நகிலமு முண்ணு தங்கந்
தன்னிலே யசைவு மெய்யிற் றளர்ச்சியோ டழுகையின்றி
மன்னுநம் மதலைபோலே வையகத்துளதோ வென்றே [யரு]

அம்மமுண் ணெனவே யங்கை யனகனை கிடத்தி வார்கொள்
கொம்மைவெம்முலை பிடித்துக் குமுத வாய் பொருத்த வப்பால்
செம்மையங் கடைவாய் முன்போ லோடுறத் திகைப்புற் றந்தோ
மைம்முகி லளகத்திரீ தென்னென வருந்தா நின்றாள் [யசு]

சுவர்க்க பூதலத்திற் றோன்றி தாழ்பயல் விளைந்த தன்ன
விவர்தரு திருத்தோணவ்வீ ரென்ன காரண முனைன்செய்
பவமதின் குறையோ வன்றிப் பயிற்றிய தவத்துட் கோதோ
வவனியீ திவ்வாறெச்ச மாரேனும் பெற்ற துண்டோ [யஎ]

சசியலை தரவே செய்வ தனமுறு மடவீர் சற்றும்
பசியினு லழவு மின்றிச் சேனையும் பருகா தாகி
அசதியு மில்லா தங்கு மதிவளம் பெருக முன்னீர்
வசுந்தரை பிறந்த மாதர் மக்களைப் பெறலு முண்டோ [யஅ]

மைப்படு குழலீராயு மலரணை மீதியானங்
கெப்படிக் கிடத்தினேனோ விசைந்து நாளெட்டானும்
அப்படி யிருக்க லல்லா லங்கமொன் றசைவு மில்லா
திப்படி யீது மாத ரிளமக வுயிர்த்த லுண்டோ [யகூ]

இண்டை கொண்டிலகு மைம்பா லிழைநுசுப் பரிவையீர் பொற்
றண்டை கிண்கிணி கறங்கத் தவழ்ந்திடு சிறுசே யென்னைக்
கண்டு முன்வர வன்போடு கைகொடுதழாஅ தழுக்கா
றுண் டெரிசின முள்ளோங்க வுற்றெடா திருந்திட்டேனோ [உய]

பல்லமம் பகமொண் மௌவ்வற் பசிய கோரக வெயிற்றீர்
தொல்லை நாளளவுஞ் சேயாற் றுன்புறப் பின் றவத்தான்
மல்லலங் குழவி தந்த மாமகனேய னிவ்வா
றல்லலுற் றழுங்கச் செய்ய வடிமையிற் பிழையென் னோவால் [உக]

ஒரு குறங்கணை வாய் வைத்தாங் கொரு குறங்கணை நெரூ உடித்
திருமுக மலர நோக்கிச் சிறு நகை புரியாச் சேயைக்
குருமணி கொழிக்கு முன்னீர் குலவு மானிலத் துள்ளார்கண்
மருமல ரளகபார வனிதையீ ரறிந்த துண்டோ [உஉ]

வண்டு நாணுடைய வீரன் வாளிபாய் செம்புணரச்
செண்டு மாமுலை கொண்டொத்திச் செழிக்க வன்பரைச்சேர் நல்லீர்
யெண்டிசை யிடத்திலுள்ளே ருழவிகட் கென்சேய் நோய் போ
லுண்டு கொல் யான் செய் பாவத்துறுதி கொலறைதி ரென்ருள் [உங]

பொற்றொடி கறங்கு முன்கைப் பூவையீரரியின்றுளுட்
பற்று மிவ்வுலகர் செய்ய பாலனில்லா தழுங்கிப்
பெற்ற பினுவகை கொள்வர் பேதையே னளவுமச்சே
யுற்று நீயழூங் கென்றெம்மா னுந்தி யோன் வகுத்திட்டானே [உச]

தையலார் முழுகு சீறு தைத்ததோ வன்றி வேலன்
வெய்ய கண்ணேக்கோ வந்தி மேய புட் சிரோ வென்று
வையுற விதற்குமுன் னிவ்வன்கறுப் பாடினுனே
தொய்யில் வெம்முலையீ ருற்ற சூழ்ச்சியை யறிகதிலோமால் [உரு]

கொங்கையின் பொறை கண்டேஙகு கொடியிடை மடவீர் சற்றுஞ்
சங்கை வேறுளவென் றெண்ணிற் றனுவிடை யாட்ட மில்லை
யங்கை யுள்ளங்கால் வெப்ப மாறிலைச் சரந்தாழ்வில்லை
விங்குள முச்சி தாழ்வு மெய்தில தென்னே வென்ருள் [உசு]

மெதகு முனிவன் பின்போய் விறல் கொடா டகையும் அம்மம்
போத வந்துதவு சிற்றப் பேதனை யானையும் பார்த்
தேதிவர் பெண்பா லென்றங் கெண்ணிடாதவர் கடுஞ்ச
மோதுகன் மனனே நங்கை மொழியினுக் கிரங்குவானே [உஎ]

இன்னண முடைய நங்கை யுண விலாதிளைப் புற்றோர்க
ணன்னய முர றீம்பா னண்ணியு முணற் கில்லாயி
னன்னவ ருறுக ணெவ்வா றடைவரோ வஃதினைந்து
மன்னனுக் குரைப்ப வன்னேன் வருந்தி யீதுரை செய்வானல் [உஅ]

வேறு

கொந்தார் குழலெழிற் றேட ணி குழையாய் கலை குறையா
விந்தார் முக மகவார்கலி யிரு மானிலர் முளைபோற்
செந்தாமரை விழிவாயவிழ் செயுமென்றெனி யிதுநாள்
வந்தோமினி முனர் பெருமானை காலெனவே [உகூ]

வட்டவா ருலகத் தொருபசுங் கொடிபன் மகவுயிர்த்திட வதிலொரு
வன்) [தனைகெஞ்
துட்டனுயிடினு மாங்கவற் குறுகண் டோன்றிமிக் குழல்பொழு
சொட்டுமோ கடிய வதுவியல் பன்றியோதநீர் வண்ணநின் னடியை
யெட்டுணைப்பொழுது நயந்துளா முன்னு திருந்தெனே கருணை
[வாரிதியே. (சங)

புத்தமு தூறுங் கூபமு மடவார் புனிதமாங் கற்பினின் றகலாச்
சித்தமு மாலே பரமெனக் கருதிச் செபதப கோம நேமனமு
மத்தமும் படையு மடல்கெழு புயமிக் காண்மையும் படைத்து நின்
[னடிசேர்
பத்தர்கணிடையூறளித்திடுங் கொடியபாகுபா டொன்றுறு மதனல்

இஞ்சிசூழவரை வெல்வதற் கெணிநா மெதிருறில் வல்லைநங் கழல்
[வாய்த்
தஞ்சமென் றடைவ ரருள்செய வேண்டுஞ் சரியல வாங்கவர் செயலை
வஞ்சமா யழிவுசெய்ய வென்றுன்னி மாவுரு வெடுத்தமு தனைத்துந்
துஞ்சிடப் பருகியரசதாய் மடவார் தூயகற் பதனையு மழித்தே. சடு

போதவோர் புத்தனுயவர் பக்தி போக்கியிவ் வுலகிரதமதாய்
ஆதவன் மதியந் திகிரியா யொருநான் காரணம் பரியதாய்ச் சூதன்
வேதனு யரனு மெதிரியாய் மேரு வில்லதாய் நாணும் வாசுகியாய்
தீதறுவாளி நீயதாய் வென்ற தேவவென் பிழையதிற் கொடிதோ.
(சசு)

வேறு

தனியாழிசூழ வனியாளுமெந்தை சரராம னைபொழுதோர்
முனிவாவிலக்கு வனைநீமுகத்து முனிமேலன் முனங்குருகைபோ
யினிதாயடர்ந்த புளியாவைநின்க ணெழுவாம்பி னென்ற வுரையே
யுனிமாயனம்பொன் னடிவாய் கிடத்து மொளிசேய் செய்வாய்மை
[யறைவாம். (சஎ)

ஆதிமால் தரிசனப்படலம் முற்றும்.

# திருப்புளிப் படலம்

## வழிபடு தெய்வ வணக்கம்

பருமா னிலத்தி லடர்நீச முற்ற பரவாதி யர்க்கியமனுய்த்
திருமாதிருக்கு மணிமார்பருக்க திக நேசருக்கினியவாங்
குருவாயுதித்த வெதிராசன் மெச்சு குணசீல னித்தனடியா
மிருதாமரைச்செம் மலரே மனத்து ளெளியே மிருத்தி நினைவாம். க

மதியோடருக்க ரிருபாடு முற்று மருமாமரைச் செம்மலரே
பொதிநீல்வரைக்கு நிகராகி நின்ற்பொருவான தற்ற பெருமா
னெதிரேதிருக்கு முதவாய்முகிழ்த்த வெழில்கால் கிடத்தி யிறையும்
நிதியாலிழைத்த கடமாமுலைப் பெணிதியோடு மெச்சு பொழுதில். உ

இமையோர்வணங்கமுனிவோரிறைஞ்சவிறையோரிதென்கொல்விப
தமதாயதென்று வகையோடிரங்க வடியார்கள் சங்க மறைசொல்[நீ
விமலாதிமன்ற னருளானதின்று வெளியானதென்று மகிழக்
கமமாயதூன்ப நிறைவாரி நின்று கரைகாண வின்பர்கணமே. [ங]

மிடியே மிகுப்ப வதினோ மவர்க்கு மிளிர்மா னிதிக் குவையுமே
னெடுநாடிருக் கிலயர் வோடிருக்கு நிலமானிடர்க் கிருகணு
மிடைசேர் தரக்கொ ளவரோகை தற்கு மினிதே யிரட்டி யயில்வே
லுடையானெடுற்ற விளவாணகைக்கு மொழியா மகிழ்ச்சி யெழவே.

தரைமீது சற்று மசையாது வைத்த தலைமேகிடக்கு முளைதான்
புரைதீரு மத்த வளையாதி மைத்த புகழ்சாயல் கண்டு மகிழ்வான்
மரைநே ரரிக்க ணுறவே விழித்து மணிவாய் திறந்து பொதுவர்
நிரையேகளிக்க வவர்பாலுதித்து நெடுநா டவழ்ந்த தெனவே. [ரு]

இருதோள் குலுங்க விருகா தணிந்தவெழிலே மிகுந்த மணிசேர்
தருநீடு குண்டலமராக வொண்வி றரலோடிலங்க வவிருந்
திருமார் பணிந்த வணியே சரிந்து செகமீ திழிந்து புரளச்
சுருணூறுகுஞ்சிமிசையார்கலன்கடொடையோடசைந்தொளிரவே. சு

பிறையோ டிகற்று பனேகரத்தின் பிழைதீர் நகற்க ணணியு
நிறைவா லொளித் தரளமே யிழைத்த நெடுநாய சுட்டியலைய
விறையா மடிச்செ நறையோடு புந்து திருதாமரைச்செ மலர்மே
லுறையோதிய த்தண்சிறையோதிபா புள்ளொலியேதரக்கமெலனவே.

எணிலாத தன்மை யுறுபார வண்ட மிசையூவடங்கு மிடமா
மணிமேவு பண்டி யரைசேர் சதங்கை யொடுகீழ் சரிந்து புரளப்
புணராய செந்துவரை நேரிலங்கு புகழ்தாளி னங்குலிகளொ
ணிணர்கோடை யங்கையுடன் மாமுழந்து மிடவே சிவந்த நிறமே. அ

திருமாமடந்தை புவிமாது செவ்வி திகணீளை தங்களுடனே
யொருநீல விண்டு நிகராக நின்ற வொளிராதி தன்னை வலமா
யருகே தவழ்ந்து வருபோதி லய்யனனையோடு தந்த மரெலாம்
பெருகோகை மண்டியெழ நீடுகண்டு பினிலே தொடர்ந்து வரவே. கூ

எழிலே மிகுந்த மதவேளு மண்டி யெதிர்கா ணுறிற்றன் வடிவவ்
வுழியார வெள்ளி யணைவானோர் பெண்மையுறவே விருப்புளடையக்
கழிதே சிலங்க வருளாதி நின்று களிநீடிடத்தின் வடபால்
வழியாகி நின்ற மதிமேவு திந்திரிணி நீழலுற் றனனரோ. [ய]

மாக னகக்கலை சூழரையிற்புனை மாறனணைத்தலமா
நாக மதைக்கலி யேகுது முற்பட ஞாலமடுத் தெகின
மாகி யுதித்திடு போதி யெனச்சொல வார வழுத்திவிரைத்
தேகி யுரைப்படி யாய திருப்புளி யோர்தகை சிற்பகர்வாம். [யக]

கஞ்ச மலர்த்தவி சந்தரமுற்றெழு கண்ணொரு வெட்டனொடு
மஞ்சி னிறத்தடை கண்டர் தமக்கு மகிழ்ந்தினி தெட்டரிதா
யெஞ்சலினித்திய வும்பரிலுற்றிட மெங்கும் விரிந்திடலா
லஞ்சயினற்பண்ட யங்கைதரிக்கு மரிந்தமனெக்குமரோ. [யஉ]

வானகமண்டல மோர்கையின் மன்னியவாணிதனத் திசையா
மேனனிகொண்டிடு மோதிமனண்ணிய வேலையுயிர்ப்படையா
னானன் முகங்களுநாடி யிரும்மரி தாமரை பெற்றிடலாற்
றுனவருங் கமலாலய மன்னுபிதாமக னெக்குமரோ. [யங]

வானதி தன்னுடன் மீதவிரும்பிறை வான்முக மஞ்சுறலா
லூனமிலங்கமலாதன மன்னய னோர்தலை தங்குறலாற்
றானகு கொன்றையுமாடரவுந்தலை சூடியை யொன்றுமதே
ஞானமிகுந்தக மாறனுகந்தன னுடிய திந்திரிணியே. [யச]

வென்றிமிகுத்திடு மங்கதமுற்று விளங்கு பதிக்குமடி
நின்றெவருக்கு மகிழ்ந்தினி தெட்டினிமிர்ந்து சலிப்படையா
வன்றிறலிற்படுமண்ட முகட்டிடைமன்னி யுணிற்குமதை
யென்றமுறச்சரிவின்றி நிறுத்தெழு வென்னு முரைக்குறமா. [யரு]

கொண்டபசுஞ்சுடர் விண்டுவையுஞ் சிறுகுன்று கடம்மையுமே
கண்டதை யொன்று மணங்கையினன் கவிகை யெனும் வண்ணமுற
வண்ட மடங்கலு மண்டிவிரிந்தெழு மந்தர மாந்தனையும்
வண்டலையும் பல தண்டலைதம்மையு மன்னவே கண்டிடிலே. [கசு]

காயொடடை திரள் சேர்தரு நற்கனி காண மிருக்குமலர்
தூயமிகக்கெழு காலடி பட்டுயர்சோர்வி நிசைத் திசைப்போ
யோயடையுற்றிடு மோவலதுக்கு விண்ணேடுநதிக்குள்விழா
மேயலை கிட்டும்மா வோர்கிலமித்தரை வீழ்தரலற்றனவே. [கஎ]

ஆருமலர்க்கணனுமளப்பரி தாய்முடி வற்றிமிருஞ்
சாருமெணற்றப லாயிர மற்படு சாகை தழைத்திடலா
லாரணமொக்கு மலாமலு மற்று வலாரி நிகர்க்குமதே
சேருமையுற்றெளி சேர்சசி தொட்டுயர் சேணகருற்றிடலால். [கஅ]

வாரிகலிங்க மெனுவரை கொண்டிடு மானில மண்டிமிரு
மாரிருள் வெம்பகை போழ்தர வெங்கதி ராமசி கொண் டெழுகுஞ்
சூரிய னென்றினராவித னுண்ணுழை தோறு மெஞ்ஞான ரவி
சாரொளியா லொரு தீபமெனும்படி தானெளி தந்திடுமால். [கசு]

பாயுமிதிற் சிறுதேனு முரைத்திடில் பாருள பட்டுமிழி
வாயுவுடற்படு நோய்களனைத்தும் வராமலடர்த்திடுமாற்
றீயகனற் கணுவேனுமிதிற் படில்சேகுருகிப் புனல்க
ளேயது வெத்தல மோவவ்விடத்தினி லேறவிடுத்திடுமால். [உ0]

யோகவருங் கொடிதாய தொழில்புரிவோர்களு மிவ்வழியா
யேகவரும்பொழு தீதவர்கண்படிலேய பவந்தொலையும்
ஆகவநன்னகர் மேவி விளங்குவராகில் விளம்புவர் யார்
தாகமொடும் வழிபாடுசெயும் மவர்தாமடையுந் திறனே. [உக]

தாறுபடுங்கமுகோர்பெறு தெங்கொடு சாமரையிற் பொலியச்
சீறிமலர்ந்தகல் வானுயருங் கவிர்தேரின் விளக்கொளிரச்
சூறடிவிண்டவழ் சோலையெறும் மனர்தாழ்ந் தயனிற்பவன
மாறனெனும்படி பூவரசுற்றிடும் வாளர வப்புளியே. [உஉ]

வேறு

அத்தனரு மாவலிபான் மூவடிமண் வாங்கிய நாள வனைத்துந் தன்னுள்
வைத்தடக்கு மலரடியே மானவிரு வானமெலா மலர்ந்து நீண்ட
இத்தகையபுளிநீழற்றவழ்ந் தொடிச்சென் றணைந்தவிள வலாயி சான்.
முத்திநிலமடிதொழுவோர்தமக்கருளும்பரனதன் றன்மூலஞ்சேர்ந்

பாரடையிற் பரகதியிற் சேர்த்தருள்வாம் வடபாற்கட் பரிந்துமுன் [போய்
ஓரடியிட்டினிவரவின்றெழுதிரெனத்தென்புறத்தூற்றுறையுந்திய
காரடுமற்படு முடலத்தேமனருங் கொடுந்தமரைக்காய்வான் போலச்
சீரடரப்புளிவேரிற்சென்றபரன்றெக்கணமாந்திசையைநோக்கா. உச

ஐம்புலமாயந்தனை நிராகரிக்கும் யோகியர்கட் கறிவிப்பான் போற்
செம்பதுமாதனந்தரித்துட்கரிதாகிப்புடையகலாச்செழித்துநீண்டு
வம்புறமற்கமலநறம்போதெனவேயிடையிடைசெவ்வரிகளோடிப்
பம்பருட் கணிணைபிறழா தெழிலாரு நாசிநுனிபார்த்துமாதோ. உரு

வடமேருப் பொன்கிரி நின்றிழிதரு பல்லருவியென வயங்குமார்பி
னிடமே வொண்ணிலவு மிழும் வெண்டரள மணியார மிலங்கவே
படமேவி நிமிர்ந்தி மிருமரகத நல்வரைய தனுட் படிந்த சோதித்(னோ
தடமேய செங்கதிரிற் றிருமேனி யொளிசெய்யச் சலியானகி. [உசு]

பல்லாயிரங்கோடி யண்டமு மவ்வண்டத்துட் பரந்துவாழு
மெல்லாமுந்தானகி நின்றருளு முதலாய வெழில்கொள் சோதி
யில்லாரைம்படையாதி நிர்மலனே பரமாயவிமல னென்னு
மல்லாரும் வலது கரத்தில குசின்முத்திரை தரித்து வயங்கிமாதோ.

மற்றோர் செங்கர கமல முன்னொரு நாட் டோன்றிய வம்மலரே [சேர்த்தி யன்னப்)
பொற்றோ யுமப்போதிற் புடைபரந்தவுந்தி யின்மேற் பொருந்தச்
யுற்றோடும்பேருயிர்ப்புள்ளுறவடக்கி யாம்பலம்போ துறழ்வாய்மூடி
முற்றோகையொளிபரந்துவான்முகநின்றொளிசெய்யமோனமாகி.

அகலுகில்லேன்னிறையு மெனத் திருமாதுள்ளுறமகிழ்வுற்ற மருமார் [பன்
சகமுழுதுந்தன்னுளுறத் தானடக்குந்தாட்கமலத்தார்வம் வைத்துப்
பகர்தாக் கண்ணகத் துழலுமிருவினையாம் பவந்தொடைத்துப் [பாகாடீயும்
நிகரிலருந் தகையவட்டாக் கரப்பொருளே தாரகமாய் நெஞ்சுட் கொண்டு [உகூ]

உருகிய பேரன்பினெடும்வந்தணைந்தாரிருவினையீர்த்து யர்வானீயத்
தருமுதலே மெல்லணையா யங்கிழலே மேனிமுற்றுஞ் சத்திரமாகப்
பெருகிய மெய்ஞ்ஞானச்செங்கோலோச்சி வீற்றிருந்து பிறங்கினனை
லிருநீலங்கொள் மருளகலச் செங்கதிர்போற் றென்பாலி லெழுந் தானம்மா. [நய]

இவ்வணம் வீற்றிருந் தருளுமேந் தறனைக்கண் டெளிதி னெடுப்பா
னெண்ணிப்) [கச்
பவ்வங்கொளலே வாரிதன்னிலும் பெருவகை வெள்ளம்பம்பியோங்
செவ்வண்ணந் திகழ்சுடரோன்றனை மின்சேருந் தகையிற் றழுவினு
(ளான்
மைவ் வண்ணந் திகழோதிப் பொன்னுடைய நங்கையெனு மடந்தை
தானே. [நக]

கையாரத் தழுவியணைத் தெடுத்தளவிற் பேர்வரைபோற் கனப்ப
(நோக்கி
யையோ வீதென்கொலெனப் பதைபதைப்புற் றசைத் தெடுத்து
(மசையா னுகி
மெய்சோரக் கைசோர மாழாந்து வாய்குழறி மிகவே விம்மி
மையோதி யெழுதியவோர் சித்திரம்போலத் தனையு மறந்தாண்
மன்னே. [நஉ]

மருவிரியுங் குழலுடைய நங்கையெனும்மடமாதோர்வண்ணந்தேறிப்
பொருமலொடு விம்மலு மென்மே லெழவுள்ளுற வடக்கிப் பொரு
வேற் கண்ணின்) [மன்னே
றருவியெனப் புனல்சோர வாம்பலென வாயங் காந்தறைந்தாண்
விருநிலனும் பெருவானுங் கருதுறவே யிசை வாய்ந்த விறையோற்
கன்றே. [நங]

போதகமோடிகல் வேடற் கிருவானமீந்து முகிற்பொலிந்து நின்ற
நாதனருட் பல்காற் சிந்தித் தோகைமீக்கிளர் நனியுந்தேசார்
காதலனின் றிங்கோடித் தவழ்ந்ததுவே பெறும்பேறுய்க்கருதிநின்ற
சீதகறுங் களிவண்டு பாண்முரலுந் தொடை யகலத் திறல்வேற்
கோமான். [நச]

வேறு

பருந்தாரயில்வாட் படைவிழியாள் பரிவிற் சோர்வுற் றுரைத்த
திருந்தாரங்கை வேனுதிபோற் செவியி னூடே நுழைதரலும்(மொழி
வருந்தா நின்றுள்ளினி திரங்கி மாழாந் தீதென் னதிசயமென்
றருந்தாட் கமலத் தவிர்கழல் களதிரக்கடிதிற் குறுகினனால். [நரு]

மழுஞ்சே ரொளிவிட் டெழுங் கதிரைவளையுமோர் கோள் சூழ்ந்ததெ
குழைஞ்சேயுள்ளந் திருந்தலர்க்குக் கொடுமை கூருங்கொலேவ(னக்
பழஞ்சேயாம்பற் றுவர் வாயபாலனைப் பரிணைத்தன் (லான்
முழைஞ்சேயோ வரையன்ன வொய்ப்பாற் றழுவ வெடுத்தனனால்.

தண்ணென் நதி சூடிறையன்னான் முதையாய தாட்கமலத்
தண்ணா றன்னேடும்ப ரெல்லாமறியச் சுடரை யெடுத்தளவிற்
றிண்ணஞ் சிகரம்போற் கனப்பச் செழியர் கோமான்றிறலழிந்து
கண்ணிலாதான் பெற்றிழந்த காட்சி யண்ணலாயினனால். [நஎ]

மன்னர்கோமா னெடுத்ததற் பின் மாழாந்துருகித் தமர்குழுவுந்
துன்னுங் கதிர்வேன ராதிபருந் துணைமென்கொங்கை நுண்மருங்கு
லின்னல்கூரப் பணைத்தண்ணுந் திருமாந்திருக்குங் குவடிணையா
மன்னம்போலு நடையாரு மசைத் தசைத்துப் பார்த்தனரால். நஅ

தம்மாலாகுந் திறத்தினொடுந் தழுவி யசைத்துப் பார்த்தளவிற்
செம்மா மேனித் தனிமுதல்வன் சிறிதுஞ் சலியாவகை நோக்கா
நம்மாலாகா வகையன்றி நாறுங்கதிர்காலிப் புதல்வன்
செம்மாந் திருக்குங் களியானைத் திரட்குமசையா னென்றனரே. நகூ

சனித்தநாட் டொட்டின்றளவுஞ் சலியாத னுவுமதி விரைவி
லினித்த செவ்வாய் கண்டிறந் தின்றெளி திற்றவழ்ந்திங் கோடிய
பணித்த நெஞ்சிலாதார் தம் பார்வை யெச்சிலெய்தியதோ (தால்
தனிச்செஞ்சுடரேயெனவொளிரித்தனையற்கென்பார்சிலரன்றே. சுய

மருந்தினின்சொற் றிருமாது வளரு மணிமார்பன் கொல்லோ
திருந்து தனிச் செங்கோ னடத்துஞ் சேனை முதல்வன்தான் கொல்
கருந்தண்ணீர் மண்ணிடத்தேதோ காரணத்தின் பொருட்டாக (லோ
அருந்தவத் திம்மன்னவன் பாலடைந்தார் கொல்லோ வென்பாரால்.

தேனார்கமலத் திருமகட்குந் திரைப்பார் மகட்குந் தனிச் செல்வக்
கோனாதனுக்குக் குடிகுடியாட் சேய்யுஞ் செழியர்தங் கோமான்
மேனாளிழைத்த மெய்த் தவங்கள் விளங்க முற்று முடித்திலனே
ஏனுமிவ்வாறிப் புதல்வற் கிருக்குந் திறனென்பார் சிலரே. [சஉ]

வாளை கமுகு மடல் கீறு வயல்சூழ் குருகாபுரி யளிக்குங்
காளையன்னு னிம்மைதனிற் கணமுந் தீமை நினையானாய்
வேளை மூன்று மெய்யறம விளங்கச் செய்தான் யாமறிவோங்
கோளை யெய்திக் கொடுமை யன்னன் கொண்டதிறனெ னென்பார்
சிலரே. [சங]

வியனார்பதும மென்போதே மிளிருங் கண்கால் கரமாயு
முயர்வா னிலவினேர் மதியே யொளிமா முகமாயும் படைத்தே
யியலாரிப் பாலகன் றனக்கீங் கிவ்வாற ளித்தவீர்ங்கமலத்
தயனே கொடிய பாவியென வறைவாருள்ளங் கரைவாரால். [சச]

என்று கூறுமொழிகளைக் கேட்டிறுமாந் திணைந்த வன்னமுலை
துன்றுங்குழ னங்கை மாதுந் தோன்ற ருனுமுள்ளுடைந்து
கன்றிமாழாந் தனராகிக் கண்ணீர் தமை மஞ்சன மாட்டக்
குன்றுபோலப் பொலிந்து நின்ற கோமான் முன்னரிவை சொல்
வார். [சரு]

வேறு

கொண்டலிற் பொலிந்து நின்ற கொழுஞ்சுடர்ப் பரிதி வேந்தே
வண்டர்தந் துயரந்தீர வகலிடத்துதித்த கோவே
பண்டொரு விலங்கிற்கோடிப் பாலனம் புரிந்த வுன்றன்
மண்டரு ளிணையின்றெங்கண் மறைத்தனை யெம்பான் மன்னே. சசு

வழிவழி நினக்காட் செய்து வந்த வல்வினையே மின்று
கழிபெருங் கொடிய துன்பக் கடலிடையாழ்த னன்றே
பழிவழி யொழுகா வன்பர் படுந்துயர் காப்பா யென்று
மொழிவது பொய்யதாமோ முதற்பரம் பொருளிரங்காய். [சஎ]

அறிவிலச் சிறியரே போலெதுவு நின்னடியலாது
பிறிதுயர் நினைந்ததுண்டோ பெருந்துய ருழன்று வாடுங்
குறியினைப் புரிவதென்னே குணப்பெருங் கடலேகாவி
செறிகுழற் றிருமணாளா செழிக்க வின்னருள் செய்வாயே. [சஅ]

அருளிழிந் தொழுகு தாதையன்னை மெய்ஞ்ஞான மோதுங்
குருமுத லனைத்து நீயாய்க்கொண் டினிதிருக்கு மெம்பாற்
பெருகியவருள் செய்யாதே பிறங்கு மெய்ப்பொருளே மென்மேல்
வருதுய ரதனின் மூழ்கவைத்தனை யென்கொலின்றே. [சகூ]

வன்புறு மனத்தேன் நின்பான் மனிமக வருள்வா யென்ன
வன்புடன் வேண்டுங்காலை யளித்திடா தொழியின் மேவுந்
துன்பமொன் றதுவேயாகுந் தூய்மறைப்பொருளே யன்றி
யின்ப மதருள்வான்போல விடர் பல விளைத்ததென்னே. [ருய]

மூல மென்றொருகாற் கூவுமுன்னரே யடைந்தோர்மாவி
னேலஞரொழித்தா யின்றிவ்விளி வரலிடரின் மூழ்கச்
சாலவு முழன்றநேகந் தரமுனை யழைத்து மென்னே
வாலடைதுயின்றகோவே யருள்செயா திருந்தவாறே. [ருக]

உள்ளநெக்குருகி யிவ்வாறொலிதிரைப் பரவைஞாலத்
தெள்ளருஞ் சிறப்புவாய்ந்த வெரிமணிப் பூணரேத்தப்
புள்ளுயர் கொடியானங்குப் பொலிந்தருள் புரியானகத்
தள்ளருந்துயரவாரி தன்னுளாழ்ந் திருந்தாரன்றே. [ருஉ]

வரிசிலைச்சுவடு தோய்ந்த வரைபொருவயிரத்திண்டோட்
குரிசிலாண் டகைமையாலுட் கொள்ளரு ரடக்கா நின்றான்
பெரியவாட்டடங்கணல்லாள் பேதைமைக் குணத்தாலன்ன
துரியனைக் கண்டு கண்டு துயருளாழ்ந்தினைய சொல்வாள். [ருங]

வேறு

நஞ்சிற் பொலிகண் ணங்கையர் நகை கண்டயல் சூழ்ந்தே
கொஞ்சத்தனி மஞ்சத்திடை குலவித்துயில் வளர்ந்தென்
நெஞ்சத் துயரகலக் களிநிலைபெற்றிட வருளா
வஞ்சுற்றுயர்தருமித்தரு வேருற்றதென்மதலாய். [ருச]

தளிர்மெல்லடி தனுவைப் பழிநுதலாய் குலமதலாய்
மிளிரொண்மணி மனைவாய்ப் பவவினையாள் செயவிழைவா
லொளிமேனி சற்றசையா விடுமுழையே கிடந்தனையே
யெளிதாயிவனுறவே யெழுமிகல் வந்ததெனிறையோய் [ருரு]

இருகட்புல னில்லாதவர்க் கிடையேயளித் தன்றே
பருகுற்றிடு வகைபோ லொளிர் பனிமாமதி நுதலாய்
மருவுற்றெழு களியுட்கொளும் வகையேதவழ் நடைசெய்
தருகித் துயருற வென்னதை யுடனே கரந்தனையே. [ருசா]

பழுமாமர விலைமேலொரு பகலோர் சிறுமகவாய்த்
தழுவாவிழி துயில்வோனருட் டகையால்வரு மகனே
யெழுநீள்பசியதனன்மல ரெழில்வாய்திறந் தினிதா
யழுமோசையை யெளியேன்செவி யடையுந்திற னென்றே. [ருஎ]

துனியேமிகு மாபாதகத் தொழிலே யருவினையே
னினிதாய் மடிமிசைவைத்தம மிழிபானிறை யூட்டக்
கனிவாய்திறந் துணவென்றுகொல் களியோடது காண்பேன்
பனிமாமதி மரபூடெழு பகல் போலொளிர் மகனே [ருஅ]

இங்குன்றனதணியும் பெருவெழிலார்மதி முகமும்
பொங்குஞ்செழு வகுளப்புயம் பொருவு நயநயுக
முங்கண்டவர் கண்ணெச் சிலதுடையபபல காப்புத்
தங்கும்படி செயவென்றெழு தருவா யொளியுருவே. [ருகூ]

கோடுஞ்சிலை நுதலாயணி குழையார்களை மருப்பப்
பாடுள்ளவிர் பனிதூங்கவே செங்கீரைய தொன்றி
யாடும்பருவ மிதாகலினரிதாய தொல்வினை யேன்
நீடுந்துயரது தீர்தர நீயென்றது புரிவாய். [௬௰]

துன்றுங்குழன்மட மங்கையர் சூழ்வுற்றனர் தாலோ
வென்றுன்றனை யாட்டச்சுட ரெறிமா மணியதனு
லொன்றும்படியிழை தொட்டிலிலோடித் தவழ்ந்தேறி
யின்றுன்றிய கழலாய்மலர் விழியென்றுகொ றுயில்வாய். [௬௰௧]

என்றென் வயிறிடைநின்று நீயிவண்வந் துதித்தனையோ
வன்றொன்றியே யிதுநாள்வரை யனுறிற்பட மூழ்கு
முன்றன்றவ முது தந்தையு முறவோர்களு மியானுங்
குன்றில் களிகொள வென்றுகொல் சப்பாணி கொட்டுவையே. ௬௰௨

சித்தந் தனிலுறு வெந்துயர் தீரக்களிசேரக்
கத்துந் திறலதுகண்டு நீயினியாகிலுங் கனிவாய்
முத்தந் தரவெழுவாய்தரு மூலத்துறைவோ யென்
புத்தென்றுரை நரகப்பிணி போகப்பணி மகனே. [௬௰௩]

விட்டுக்கதிர் பொலியுஞ்சுடர் மிளிரும் பசுமுகிலு
மெட்டிக்கு மகிழவந்தென விவரிம்மர முறைவோய்
வட்டச்சிறு பறைகைக்கொடு வருசிற்ற வருடனே
கொட்டித் திரிதரலென்றுகொல் கொடியே னிடர்கெடவே [௬௰௪]

தாராகண நடுநின்றொளிர் தருமாமதியெனவே
வேரார் தருசிறு பாலகரிடை மன்னுறவெய்தி
வாரார்முலை மடவார்மலிமறு கூடொளிர் சிறிய
தேராரவிடுத் தென்று கொறிரிவா யொளியுருவே. [௬௰௫]

வரமாமலரிணை சேரடிமணி நூபுரமொலியே
தரநாடொறும் விரைவோடியே தளவெண்ணகை யிளையார்
பாவாவகன்மறு கூடிழை பயில் சிற்றில்கண் மூழ்துந்
திரமாக வெனொரு பாலக சிதைத்தென்றுகொல் வருவாய். [௬௰௬]

அணிமாநகருறைவோர் பல ரடையா வெனதிடையே
மணிவார் குழையுடையாயுனன் மகனு டொறுமளவில்
இனியோடின றுவம்புகள் செய்கின்றன னெனவே
பணியாவெழ விறையென்றுகொல் பயில்வாய் மறுகிடையே. [௬௰௭]

பெருநீருலகிடை மாமகள் பெருமானுயர் மதமே
மருவாமலிதரவே செயுமனர் கோனளி மகனே
திருமாது றமணி மாளிகைத் திருவே மூதன்மருவா
திருமாமரநிழல் வைகுறமிதுவோவுன விதியே. [சுஅ]

கடல்வேலை கடந்தாலென விழிநீரிருபுடையும்
விடவேயெரிதரு வெங்கனலிடைமென்றளி ரெனவே
யுடல்சோர் தரமாழாந்தினிதுருகுஞ் செயல்கண்டு
மிடரேனென வுரையாடலை யிதுவோவுனதறமே. [சுசு]

மிகவேநறையுகு மாலுகவிரி மாலையினிறையோய்
மகனே யருமகவினையென மதிசேர்தரல் கண்டே
யுகவாவெனதனைநீ யினியுறகேலெனவுரையா
வகமேவிய துயர்தீர்தரவருளாதது தகவோ. [எம]

நகுமின்சுதரிசனன்பத நளினங்களைமறவேந்
தகவெந்துயர்கொள மன்னுயிர்தமையெங் கணுநலியே
மிகுநல்லறவினை யன்றியேபுரியோமொரு வினையுஞ்
செகுவெந்துயரிடைமூழ்குறசெயலென்ன கொல்விதியே. [எக]

வேறு

கொலைபழுத்தொழுகூன் வைவேற்கொற்றவர் குழுமிநந்தந்
தலைமகனிவனேயென்று தாங்கருந்திறைகள் கொண்டு
சிலைநுதற்றிருவேயுன்றன் றிருவடிபோற்று நின்றார்
உலைவுறென்றுயரந்தீர வுகந்ததைக்கண்ணுற்பாராய். [எஉ]

சிற்றிடைக்கன்னிமாருன் சீரடிச்சுவடு காண்பான்
முற்றிலந்துதைகொண்டிம் மூதெகினத்தினீழற்
சுற்றிலுஞ்சிற்றில்செய்து துன்னிநின்றார் நீயத்தைப்
பற்றுமென்றுயரந்தீரப் பணிமலர்க்கண்ணுற் பாராய். [எங]

செவ்வியவொளிகொள் மேனிச்செல்வனோர் வளர்வெண்டிங்கட்
கொவ்வநாடொரும் பூரித்துமுடல் சிறிதசையானுக
வவ்வணமிருப்பக்கண்டே யறற்குழனரிலாழ்ந்தாங்
கிவ்வணம்பருவந்தோறு மிரங்கியுள்ளுருகாநின்றார். [எச]

எல்லியும்பகலுநீங்கா தியாவருமிருப்பச் செம்பொற்
சில்லியங்குழலாணங்கை செவ்வியிற்றினங்கடோறு
மில்லகத்தனிலே முன்னரியற்றியவாறுபோல
வல்லியங்கடலக்கண்ணுற் கவ்விடத்தியற்று நின்றாள். [எரு]

வண்டலைந்திழிதேனுண்டு மருவுதாரிமிரு மார்பக்
கொண்டலைப்பொருவும் வண்கைக்கோமகன் குழவிதன்னைக்
கண்டுகண்டுருகித் துன்பக்கடற்கரை காணுகிப்
பண்டருங்குறுங்கைவாழும் பரமனதுரைமறந்தே. [எசு]

நச்சினர்வினையைநீக்கும் ஞானதேசிகனெடுப்பான்
வைச்சபண்டிதர்களாலு மந்திரத்தலைவராலும்
வெச்சுறமுத்தீயோம்பும் வேதவந்தணர்களாலும்
பச்சிலைவகையினுலும் பார்த்தனனிருந்தானன்றே. [எஎ]

நீருலாம்பொருனை நாடனெஞ்சிடர் நிறையநாளு
மேருலாங்குழவிதன்னை யெடுத்தினி தளிப்போர்க்கென்றன்
சீருலாந்தரணியாவுஞ் சிறப்புடனளிப்பேனென்ன
வோருரைவழங்கி யன்னேருறும் வழிபாராநின்றான். [எஅ]

ஞானவாரமுதமுண்டு நாடொறுமவயவாதி
வானவாந்தருக்களேபோல் வளர்தரத்தருவின்மூலத்
தேனலம்பொருந்த யோகியென வினிதமர்ந்துவாழு
மூனமிலர்தவெந்தை யொளிர்திர மேனிதன்னில். [எகூ]

விரைக்கருங்குழலாணங்கை வேந்தர்கோன் முதலயாரு
நிரைக்குலந்தமதுகன்றை நீங்கிலா வகைபோற்சூழ்ந்தே
யுரைக்கருப்பதினுருண்டீ யுடனெறும் பணுகாவண்ண
மரைக்கணப்பொழுதுநீங்கா தன்னவரிருந்தாராங்கே. [அ0]

திருப்புளிப்படல முற்றும்.

---

# திருமதுரகவிப் படலம்

## வழிபடு தெய்வ வணக்கம்

பைத்தலை யரவந் தாங்கும் பாரிடத் துயிர்கட் கெல்லா
மெய்த்தரு முகிலேய் மேனி மாயனெம் பெருமான் றன்னைக்
கைத்தலத் தமர்ந்த நெல்லிக் கனியெனக் காட்டி நந்த
மெய்த்தவ னெதிராசன் றன் விரையல ரடியுட் கொள்வாம். [க]

கரகமலங்கள் கூப்பிக் கைதொழு மவர்தம் தீய
நரகவித் தருள்வான் ஞான நாதனிவ் வாறிருக்க
குரகதமுகத்தாற் கன்பாங் குமுதகணும்சராம்ம
தூகவிப் பெருமாள் வந்துதோன்றிய விபரஞ்சொல்வாம். [உ]

உலகெனு மடந்தைக் கோங்கு முருவமை யவயவாதி
யலகிலா வளஞ்சேர் தேய மவற்றுளிப் பாண்டி நந்நா
டிலகொளி வதன மந்த வெழின்முகங் கவினத் தீட்டுந்
திலகமதென்னத் தோன்றித் திகழ்தருந் திருக்கோளூரே. [ங]

அத்தமா னிறக்துவேதத் தந்தணன் முதலாந் தேவர்
தத்தமானியை யெடுத்துச் சாற்றிடக் கமலமென்போ
துய்த்தமா னிலமான் செய்ய வொளியடி வருடப் பாம்பில்
வைத்தமா னிதிமலர்க்கண் வளர்தருந் திருக்கோளூரே. [ச]

மாகய மருப்புமாய்த்தான் மலரடி வணங்குந்தூயோ
ரேகய வேள்வி யாற்ற வெழுந்தடர் கரியதூமம்
ஆகயம் படரக் கண்டே யணிமுகிற் குலங்களென்னுக்
கேகயம் பலநின் றுடிக் கிளர்தருந் திருக்கோளூரே. [ரு]

அமலமுற் றிடலான் மீதி லணிமைதங்குறலான் மீவான்
கமலக ணுறலா னற்பொற் கலைதரித் திடலான்மண்ணின்
குமரர்கண் ணிணைக்கு மெட்டாக் கொள்கையா லொளிருமாடம்
விமலவிண்டுவினை யொப்பர்ய் விளங்குறுந்திருக்கோளூரே [சு]

எங்கண்மா னகர்போந் தெந்த மிறையடி வணங்கி யேகுஞ்
சங்கரன் றனைநீ தாங்கித் தருக்குட னெம்போ னிற்குந்
துங்கநன் றெனவான் கைலைத் தொல்கிரி யினைநக்கென்னுத்
திங்களஞ் சவிசேர் மாடந் திகழ்தருந் திருக்கோளூரோ [எ]

இத்திரு நகரில் வேத வெழிற் பெருங்குலத்துட்டுவாப
ரத்தின தந்த மாகு மணியவிக்கிரம வாண்டிற்
சித்திரை மாதத் தோடு சேர்ந்தசுக்கிலபக்கச்ச
தூர்த்தசித் திதியுஞ் சுக்ர வாரமுங் கலந்ததாகும் [அ]

சித்திரை நாளி லாசான் சிச்சரி னியல்பு மன்னோர்
பத்தியும் விசுவாசத்தின் பான்மையு நிலத்துவாழும்
புத்தியி லுயிர்கட் கன்பாய்ப் புகழ்பெறக் காட்டித் தூய
முத்தியின் விளைவை நல்க முதற்பரம் பொருளாலன்றே. [கூ]

இருணலி தரக்கால் சோதி யிளங்கதி ருதையமுன்ன
ரருணனு ருதிக்குந் தன்மை யாமெனப் பரவை ஞால
மருணசிப் படைய ஞான வாரமு தருளுஞ்செம்பொன்
வருணநங் காரிமாறன் வருமுன மெழுந்த வள்ளல். [ம]

முடிவிலின்னவனுல் வேத முற்றுணர்திறத்தைக் கூறிற்
கடிமலர் கமலச்சேக்கைக் கண்ணவற் கிழுக்குண்டாமா
லொடிதிரைப் பரவை ஞாலத் துயிர்கண்மேல் வைக்கு மன்பாற்
படிமுழு தளந்துகொண்ட பரமனேயனையனுவான். [மக]

பண்டரும் பரம வேதவிதிப்படி பரித்த முந்நூல்
விண்டலத் தெழுந்துலாவு மின்னெனப் பிறழுமார்பன்
வெண்டிக ழூர்த்த புண்ட்ர மேவிய நுதலான் சேந்த
மண்டுபொற் சடிலத் தாலே வயங்குசேகரத்தினனே. [மஉ]

பரந்தர வணையான் செய்ய பதகமலங்க ளல்லாற்
புரந்தர னீருய் வேதப்புனிதனே முதலாந்தேவர்
வரந்தர வல்லே மென்ன வந்துமுன் னிற்பாரேனுங்
கரந்தலை குவித்துச் சற்றுங் கணித்திடாக் கருத்தனம்மா. [மங]

கொல்லுநஞ் சடக்கு கண்டக் குழகனு மறைவலானும்
வெல்லுதற் கரிய காமவெகுளிக ளவிக்கு நீரான்
புல்லிய நெறியி னுளும் பொறிபுலன் றமைப்போக் காது
சொல்லிய வறத்தினிற்குந்தூய நன்மனத் தனம்மா. [மச]

சென்னிகழ் வடைத லாகச் செப்பிய காலமூன்று
முன்னியுள் ளறியும் ஞானத் தூறுதிகொண் டுயர்வு பெற்றோன்
பன்னுதற் கரியவாய பதும வாதனத் தட்டாங்க
மன்னிய யோகத் தின்கண் வரம்பினன் மகிழ்வு கொண்டோன் மரு

வேறு

இன்னதன்மையமதுரகவிப்பெருமானெண்ணுதற்கரியவேதாந்தத்
தன்னியல்புணருநிபுணனுய்ச்சகவ்வந்தலையெடுக்தெவருமோர்தரமு
னுன்னிய வளவிற் பரகதி யுதவயோத்தியேமுதற்றிரு மடந்தை
மன்னியோ ரிறையு மகல்கிலா மருமன்வளர்தரும் பதிதொழுந்
சென்றே. [மசா]

விழுத்தகு மூவகை யுள்ளநெக் குருகி விரைமல ரருச்சனைபுரியா
வழுத்தியாங் குளவாம் புனிதநற் றிவலை வானகமுகடுதைவரவே[து
கொழுத்தலையெறியுங்கங்கையைமுதலாக் கொண்ட பற்பலநதிபடிந்
பழுத்தமெய்ஞ் ஞான நிலையுணர்ந் தநேகம்பகல்வட புலத்திருந்தன
னால். [௰௭]

அங்கரு முனிவ னிவ்வண மிருப்ப வணியவைகுந்தநன்னாட்டிற்
பொங்கருட் பரம வுருவினித்தியர்கள் புடைபரந் திறைஞ்சினர்
[பொலிய
சங்குடன் றிகிரி வாள்கதை வரிவிற் றாங்கிவீற்றிருந்தரு ணிமலன்
செங்கையிற் பிரம்பொன் றேந்தி நன்களிக்குஞ் சேனையர் தலைவ
னைக்கூவி. [௰௮]

இன்றெழுந் துலகிற் றீயிருட் பிழம்பை யிகலறத் துடைத்தருள்
[புரிவான்
சென்றுந மிசைபூதரா யுதித்துத் திருப்புளியடியில்யோகியரா
யொன்றிய பதுமாசனந்தரித் திருக்குமொப்பிலா மாறனுக்கின்றே
பொன்மக ளிடமுன்னீர்ப்பெருந் தகையைப்போற்றிரு விலச்சினை
முதலா. [௰௯]

மந்திர வுபதேசமும்புரிந் திவணீர் வருதிரென் றுரைத்திட விரை
விற்)
[றிருக்கும்
சிந்தையுள் ளுவகை கொண்டன னிவணந் திந்த்ருணி யடியில் வீற்
நந்தமதிறையாங் கொந்தவிழ் குழலி னங்கைதன் திருவயிறுதித்த
சுந்தர வதநற் கவ்வணம் புரிந்து தொன்னக ரடைந்தனன்றா
யோன். [௨௰]

சங்கொடும் புனிதத் திகிரியுந் தாங்கித் தயங்குறு மூர்த்தபுண்டர
மங்கலி லதிதேயோமயனாய் நின்மலனுமாய்வீற்றிருந்தனனால் [னாய்
பொங்கலைப் புணரி நிலந்தனி புரக்கும் புரவல னியற்றருந் தவத்தில்
வெங்கலி கரப்ப வந்தெழுந்தருளும் விமலமெய்ஞ் ஞானநாய
கனே. [௨௰௧]

இருந்தரு டாவிங்கிணையிலான் முன்ன ரெழுந்தன னுத்தரதிசை
யிற்)
[றபூர
பொருந்திய மதுர கவியெனும் பெயர்கொள் புனிதமெய் யறநிலைபி

வருந்தவ முனிவ னொருபக லிரவி லீனபிரிந்தலமருகன்றின்
வருந்தியுள ளுருகி யணிதிருக்கோளூர்வணங்கினன்தென்றிசை
மீநோக்கா. [உஉ]

நோக்கலு மிவணத் திருப்புளி யடியி னுவலருந் தகையின் வீற்றி
ருக்கு) [லாற்
மாக்கவி னிமல மாறனன்னவன்றன் மணி விழி யிணையினுக் கல்
றுக்குற வெவர்க்குந் தோற்றில னாகித் தளதளப் புடனெழுமுதைய
நீக்கருஞ் சவிகொள் கதிரெனப் பொலிந்து நின்றிடக் கண்டனன
வனும். [உஙு]

காண்டவச் செழுமி னொளிவிடுஞ் சுடரைக் கடியவெங்கானக மத
[னிற்
றூண்டிநின் றெரியு மங்கிகொ லலது தடநகர் வேவுறக் கனன்று
நீண்டுபெற்றிடுசெங் கனல் கொலோ வென்ன நெஞ்சயிர்ப் புடனி
[ருந்தனனால்
மாண்டகு மினிய தமிழ்மறை யுரைத்த வன்றன தடிபணிந்துய்ந்
தோன். [உச]

வேறு

இவ்வண மிரண்டு மூன்றுநா ளளவா யெண்ணியு மவ்வொளி
மழுங்கா) [ணைக்கு
தவ்வண மிருப்ப வென்விழிப் புலனுக் கன்றிமற் றியாவர் கண்ணி
மொவ்வுத லின்றி யொளியுட னிலங்க லென்னகொ லிது வெனக்
[கலங்கிச்
செவ்விய நெறிகொண் முனிவரன் பின்னுந் திருவினையகன்செய
லென்னு. [உரு]

நன்றுகொ லிதனைக் கண்ணுறி வழியா நவையிலா வொளியதா
யிலங்கு) [புரிந்து
கின்றது கணமுந் தங்குறு விரைவிற் கிளம்பியான் சோதனை
சென்றிவ ணடைவ னெனத்திரங் கொடுதொ றென்முக நோக்
[கினனெழுந்தான்
மன்றலந் துளவத் தாரினு னடியர் மலரடியன்றிமற்றன்னான் [உசு]

உதையவெங்கதிரி னொளிவிடுஞ் சுடரை யொன்றுற நோக்கியச்
சுடரே) [நரும்பக லொருங்கண்
சிதைவினன் னெறியாக் கொண்டிரா முழுதுஞ் சென்றவின்

டதைமலர் வளரச் செயதிடை யுறுகற் றலந்தொறுஞ் சோதனை [புரிந்து
புதையிருட் பிழம்பு சீத்தொளிர் மாடம் பொலிதிரு வரங்கம்வந்த
டைந்தான். [உஎ]

அத்திரு நகரி லரங்கனை வணங்கி யற்றைய பகலினைக் கழித்து
நத்தம்வந்தடைய வாய்ந்தன னவணர் நகைவிடுஞ் சோதியே பின்னு
மத்திசையொளிரவெழுந்தனன் விரைவிலடவிவெற்பகன்றிருங்கரை [யைக்
குத்திருந் திரைகொள் பொருனைசூழ் தருமிக் குருகைமாநகரம்
வந்தடைந்தான். [உஅ]

எழுந்தரு டரவு மவ்வொளி மறைய விரும்பல தருவினன் மறைந்து
மழுங்கியதுகொலோ வெனும்பினுந் தென்பால் வந்தனன் வட
புலத் தொளிரத்) [தீதென்ன
தொழுந்தகை யுடையவ் வருந்தவ முனியித் தொன்னக ரிடத்த
வழுந்தினன் களியி லடைந்தன னிவணேயடைதலு மறைந்ததவ்
வொளியே. [உகூ]

வேறு

வந்த வருந்தவ மாமுனி வோனு
மிந்த நகர்க்கு ளேதேனும் விசேடம்
விந்தையி னுண்டுகொ லென்ன வினவச்
சிந்தை யுவந்தனர் செப்புவர் மன்னோ. [௩௰]

எந்தம் விளங்கயி லேந்திறை வோனே
சந்தத முஞ்செய் தவத்தினின் மாயோ
னந்தமிலண்ணறன் னின்னரு ளாலே
மைந்தனும் வந்து பிறந்தன னன்றே. [௩௧]

தோன்றிய வன்று தொடங்கியி தீரு
யான்ற வரும்பதி னறெனு மாண்டாய்
வான்றழை வெஞ்சுடர் வானவ னேபோற்
கான்ற கவின்றிகழ் காண்டகு மேனி. [௩௨]

சற்றுமசைத்திலன் றுமரை யங்க
ளுற்றுவிழித்தில னொள்ளிய செம்மை
முற்றியவாயது மூடுத லின்றிப்
பற்றிழையான் முலைப்பாலு மருந்தான். [௩௩]

தீண்டரு மெய்த்தவ செப்பிய தன்றி
யாண்டுதோ றுங்கவி னங்கம் வளர்ந்தே
நீண்டிட வோர்தரு நீழ லிடத்தே
மாண்டக வைகினன் மைந்தனு மன்றே. [௩௪]

அன்றுமுதற்கொ டருந்திறல் வேலோ
னின்றள வாக வெழுந்தரு ளன்போற்
சென்றவ ராய செழுந்தவர் தம்மாற்
குன்றி னிதிக்குவை கொள்ள வளிப்பேன். [௩௫]

என்னவுரைத்தன னிங்கெடு நாளாய்த்
துன்னவருட்கொடு பார்த்தனன் றுய்ய
வன்னவ ராலு மசைந்தில னாக
மன்னிய வின்னலின் மாழ்கின னன்னோன். [௩௬]

என்றுரை செய்தன ரின்றத னைப்போய்
நன்றறி வேனென நாறிய மாடங்
குன்றென நின்றொளிர் கோமறு கின்கண்
சென்றுநடந்தனன் றீதில்குணத்தோன் [௩௭]

வருந்தவனைச்செழு மாமறு கிற்கண்
டருந்தையமுங்கினனன்னவர்காணு
இருந்தவெழிற்புயவேந்தலிடம்போய்
விரைந்தனர்சென்றவிளம்பினரன்றே. [௩௮]

கேட்டள விற்பொன் கிரிப்பெரு மொய்ம்பின்
வாட்டகை மன்னன் மதிக்கடலாய
கூட்டவமைச்சர்கள் கூட்டிவரத்தீ
வீட்டிய லற்கெதிர் மேவின னன்றே. [௩௯]

இந்நக ருக்குணீ யெய்துற வென்றன்
முன்னரிழைத்த முதற்றவ மேயென்
றன்னமுனிப்பர னய்மல ரன்ன
மன்னுமடித்துணை யாரவழுத்தி [௪0]

ஆக்கமு றும்முடை யார வொடுக்கி
நீக்கரும் வெந்துயர் நீடின னிற்கும்
வீக்கவடற்புய வேந்தனை யன்னோ
னோக்கின னின்று நுவன்றிட லுற்றான். [௪௧]

நெய்கதழ் வேலநின் னெஞ்சிடர் கொள்ளுஞ்
செய்கையதென்னகொல் செப்புதி யென்னப்
பொய்கை தனிற்பல புட்செறி பாண்டி
மொய்கவினுற்று முதிர்ந்திடு நாடன். [சஉ]

மைந்த னிலாது வருந்திய தாதி
யந்த மரத்தி லடைந்ததை யீறுய்
விந்தை யினங்கிடை மேவிய வெல்லாஞ்
சிந்தை மயக்கொடு செப்பினனன்றே. [சங]

வேறு

இந்த வாறிரு நிலந்தனி புரந்தருளிறையோன்
சந்த மாமுடி மன்னவன் சாற்றின னிற்ப
வந்த மாமுனி யருண்முக நோக்கின ராகி
அந்த மாமதி யமைச்சர்நின் றறைகுவர் மாதோ. [சச]

அரிய மாமறைப் பொருளெலா மினிதுணர்ந் தரியாத்
துரிய மால்பத மன்றிமற் றுணர்தராத் தூயோய்
விரிய காதமென் பேலெழுந் துயரொடு மிகுந்த
கரிய வார்கலிக் கரைபெறு துழன்றுயர் கடையோம். [சரு]

களிப்பெனும்பெரு மதுக்கட லாழ்தரக் கமலத்
தளிர்க்கு மெல்லடிக் குமரனத் தருநிழல் விட்டெங்
களிக்குலம்படு மாம்பலம் போதினுக் கரிய
நளிக்கனிக்கிணை வாய்திறந் தொருமொழி நவில. [சசா]

விருப்புளிப்புரிந் தருளுவ தன்றிமேல் வேங்கைப்
பொருப்புவிட்டபைங்கிரியெனத்தனியிடை பொலியுந்
திருப்புளித்தலத் திருந்தெடுத் தன்னைதன் செழுமலை
யருப்புளிற்பெரு கமுதுண வருள்செய வேண்டும் [சஎ]

இவ்வணம்புரிந் திடிலொரு சூச்சியு மேருச்
செவ்வணந்திகழ் சடிலசேகரவருந் திறலோய்
பவ்வ வெண்டிரைப் பரவைமா னிலந்தனி புரக்குங்
கவ்வை யின்னக ரன்புட னளித்தகங் களிப்ப [சஅ]

மண்டலேசுர ரனைவரு நின்னடி வணங்கப்
பண்டை யாய்வழி வருமுடி சூட்டினர் பரவுக்
கொண்ட கோரரி யணைமிசை யிருத்தினங் கொடியேந்
தொண்டு செய்தனம் வருகுவ மென்றுபு சொற்றார். [சகூ]



ஸ்வாமி நம்மாழ்வார் யோகாஸனத்தில் எழுந்தருளியிருந்த
16-வது திருநக்ஷத்திரத்தில், மதுரகவிகள்
ஸேவித்து நிற்றல். (53-ம் கவி)

சொற்ற வம்மொழி யிருசெவி வெதுப்புறத் தூய்மை
யுற்ற மாமுனி வரனவ னுறைவிட மதனை
யிற்றை நீரது காட்டுமி னிவ்வண மியற்றிப்
பிற்றை யானது கொள்ளுவ னென்மொழி பெய்தான் [ரு௰]

என்ற மாமுனி வரன்றனை யிறையவர்க் கிறையோன்
துன்று பற்பல மங்கல முரசினந் தொனிப்ப
நன்று கொண்டினி தேகியத் தருநிழ லவையின்
றொன்றி வைகிய வொளியினைக் காட்டின னுகந்தே. [ருக]

முன்னந் தாயினை நீங்கிய முலைவிடாக் கன்று
பின்னங் காண்குறு வகையெனப் பெய்யொளி பிறங்க
மன்னுந் தாருநன் னிழலிடைக் கதிரென வைகும்
பொன்னந் தேசினம் மாறனைக் கண்டனன் புனிதன். [ருஉ]

வண்டு சூழ்மகிழ் மாறனைக் காண்டலும் வதநம்
விண்டலர்ந்திட லாலவன் முகமது விளங்கும்
புண்டரீகமென் பதற்குமம் மாறனைப் பொருவி
லண்ட யோனியென் பதற்குமிங் கையமில்லம்மா. [ரு௩]

மோன மாகியோகத்தினி திருந்தருண் முதல்வ
னான நாதனைக் காண்டலு மன்னவ னருளால்
ஞான முன்னைய துதயமா குறமுனி நளினத்
தேனவாமலர்த் தாட்டுணைச் சடைமுடி தீண்டி [ருச]

இப்பெருந்தனிச் சோதியோ வென்றன திதயந்
துப்பனன்மெழு கெனவுருக் கியதெனுந் தூய
முப்பரஞ்சுடர் தம்மிலு முதற்சுட ரிதுவென்
றப்பராங்குசன் குணமெலா மெடுத்தெடுத் தறையும். [ருரு]

கண்ணுகர்ந்தவர் தம்மிலுங் களிநற வருந்தி
யுண்ணெகிழ்ந்துநின் றாடுறும் பாடுறு முயர்யாழ்ப்
பண்ணுலாமொழி நங்கைகொண் மகிமையிப் பாரவை
நண்ணு மானிலத் துற்றவர் யாரென நவிலும். [ருசா]

அங்கு மிங்குமா யெழுந்தெழுந் தேமுறு மமல
னிங்கு தோன்றுதற் கெத்தவ மிழைத்ததிவ் வெறுநீர்
தங்கு மானில மென்னுமியான் பெற்றிடுந் தகையிற்
பொங்கு பேரியார் பெற்றவ ரெனத்தனைப் புகழும். [ருஎ]

மருப்படுங்கம லாநந மலருமாநந்தப்
பெருக்கி னீடுகட் புனலிடை மூழ்குறும் பிதிருந்
திருத்தகும்புய வரைகள் பூரிப்புடன் றிகழ
விருப்பினுற்புள காங்கித மடைதர வியக்கும் [ருஅ]

இத்தரைக்குள்யா னியற்றிய தவப்பல னின்றே
முத்தி யின்விளை யதனையீந்ததுவென மொழியும்
பித்தடைந்தவ ரென்னமெய் மறந்தளி பிதிருங்
கொத்து நன்மலர் கொய்துகொய் தெறிதரு மன்றே. [ருகூ]

இவ்வணம்பர மானந்தக் கடலத னிடையே
யவ்வரந்தரு முனிவரன் மெய்மறந் தாழ்ந்து
செவ்வை யின்னகந் தெளிந்துபின் றோத்திரஞ் செய்வான்
கொவ்வை வாயுடை நங்கைதன் குலக்கொழுந் தினையே. [சுய]

வேறு

செஞ்சுடர் போலொளிசெய் தேசுறு மெய்ப்பொருளே
மஞ்சௌ வேயணிசேர் மானிற மெங்குரையாய்
விஞ்சகல்மார்பிடையேமேவிவிளங்குறுபொற்
கஞ்சமலர்த்தவிசார்காரிகைமெய்த்தவனே. [சுக]

பொங்கட லாரவுணர் பொயொழியப் புவியில்
வெங்கதழ் வாளமரில் வீசுசெழுந்திகிரி
சங்குட ணெண்கதைவாள் சார்ங்கமெனுந்தவர்மற்
றெங்கிவை வைத்தனையோ வென்றனை யாளொளியே [சுஉ]

மந்தர மாமலையின் வாகொரு நான்கினுமுங்
சுந்தர மோடடல்சேர் தோளிணை யெங்குகொலோ
இந்திர ராகமிசைத் தின்னளி பல்லலர்ந்த
கந்தமுறுந்துளவக் கண்ணிக ளெங்குகொலோ. [சுங]

பாதக வெவ்வினைகள் பாரிடம் விட்டகலத்
தீதறு மெய்யறிவாந் தேசிடு மாதவனே
மாதக வாயுறுசீவத்ச மெனும்மருவும்
பீதக மெய்யொளிசேர் பீடுடை யெங்குகொலோ. [சுச]

செஞ்சரண் வீழ்சுரர்நோய் தீர்தர மண்கொளுநாள்
விஞ்சகல் வான்முகடு மேவர நின்றதுதான்

எஞ்சலி னன்மணியா லிழைபல பூண்டிகழிக்
குஞ்சிகொலோவழுதிக் கோமகனேயுரையாய். [சுரு]

நாடிய வாசமுறு நான நறுந்திலகம்
பீடிய லாவணியப் பெய்யொளி செய்வதுதான்
நீடிய வெண்ணிலவி னேரவிர் புண்டரமார்
கோடிய செம்பிறைநேர் கொண்டொளிரிந்நுதலே. [சுசு]

அண்டர் தொழக்குளிர வன்றருள் செய்ததுதான்
வண்டலர் செங்கமல மான மிளிர்ந்தரிகள்
கொண்டு பரந்தணிசேர் குழைகளி னேடிகலிக்
கண்டவர் கண்கவரிக் கண்ணிணையேகொலரோ. [சுஎ]

கோவியர் மத்தளைபால் கொண்டினி துண்டதுதான்
காவிய நீள்விழிநங்கைக்குயர் மாமதலாய்
தூவிய னற்பவளத் துண்ட மிரண்டதனைச்
சீவியிணைத்ததெனத் திகழுமிவ் வாய்கொலரோ. [சுஅ]

முன்னொரு வாரணமே மூலமெனுஞ்சொலையே
மன்னுற வேற்றதுதான் மாமறை யாலுணராய்
நன்னய நான்மகர குண்டல நின்றினிது
சன்னளி யாடுறமிக் காதுகொல் சற்றுரையாய் [சுகூ]

விழுத்தகு வால்வளையை வென்று பசுங்கமுகிற்
பழுத்தணி கொண்டுபள பளப்புட னேங்குறமிக்
கழுத்துகொ லண்டமெலா முண்டு களித்ததுவே
கொழுத்தலை மண்டுபுனற் கூர்பொருனைத்துறையாய் [எ0]

விண்ணவருக்கினிய வெண்சுதை யீந்தருள்வான்
தண்ணலையைக்கடையுஞ் சார்தகை யுற்றதுதான்
வண்ணமுறுங்கிரிபோன் மல்லொடு பேரணியு
நண்ணிய விப்புயமோ நங்கைகண் மாமணியே. [எக]

சந்தமுறும்பசிய தாமரை யோடிகல
விந்தைசின் முத்திரையை மேவிய விக்கரமோ
நொந்தக நைந்தரனுர் நுன்சர ணேசரணைப்
வந்தடி வீழ்தருமுன் மாபலி யிட்டதுவே. [எஉ]

துண்டநறுந்துவரோ தூய்மையருங்கமலம்
விண்டிதழோவெனவே விளங்கணி யிவ்விரலுன்

மண்டுநிரைக்குலம்விண் மாரிநெருங்குதலைக்
கண்டழு கால்வரையைத் தாங்கியளித்ததுவோ. [எங]

நிம்பவலங்கலொடு நீண்மணி யாரமுநி
ரம்பிநிதிக்கிரிபோ லகன்றொளி ரிம்மருமப்
பம்பிடமேகொலரும் பைங்கமலத்திடைவாழ்
வம்புமலர்க்குழலாள்வாழ்வினுகக்குமிடம் (எச)

குயிற்றிட மேதினியிற் கோதறு மெய்யறிவைப்
பயிற்றிட வேவியவெம் பரம்பொருண் முத்திரையைக்
கயிற்றிட மேகொளிறை கவின்மிக வார்ந்தொளிரிவ்
வயிற்றிட மேகொலுயிர் வைத்து வளர்த்ததுவே (எரு)

அங்கம லாதனனை யன்றருள் செய்ததுதான்
துங்கம லாதவனுர் தோன்றின ரென்னவொளி
பொங்கம லாதடையிற் பூம்புன லிற்சுழிபோற்
பங்கம லாதளிசேர் பூவுமிவ் வுந்திகொலோ (எசு)

பார்த்தனணிந்தசெழும் பைந்தொடையுங்கனத
தீர்த்தமு மன்றரனுர் செஞ்சடை மீதுறவே
சேர்த்தது தானெழிலச் செய்ய மலர்க்கழலோ
நீர்த்தல மேழினுமே நின்ற புகழ்ச்சுடரே. (எஎ)

ஏறுட னம்பதும விரேகைபரந்தமலர்
வீறுகெடுத்துமணி மேவி யடைந்தவர்நோய்
மாறுபடுத்தியருண் மாமலரிவ்வடியோ
வீறிலிரும்புவிமண் டாவியளந்ததுவே. (எஅ)

சேயமணிச்சடிலச் சேகர னிவ்வனமா
யேயரியன்றிவிழி யேனெனு மக்குறியே
மேயவ னுகியநா வீறனை யுன்றனரு
மாயமதைத்தெரியும் வல்லவர் யார்கொலெனு. (எகூ)

பற்பல தோத்திரமுஞ் செய்து பரன்செயலைக்
கற்புடை நங்கைமுதல் கண்டு மகிழ்ந்திடுவான்
சிற்பரனுக்கணிசேர் செவிப்புல னுண்டுகொலென்
றற்பக நின்றெழுவே யம்முனி வோரிறையே (அ0)

அடுத்ததிரைக்கடன்மண் ணதிர்ச்சி மிகுந்திடவே
யெடுத்தோரிருங்கலைமுன் னேயெறியக் குணமே
கொடுத்தருள் செய்தெளியேங் கோது தொலைப்பவனுந்
திடுக்கென வேவிழிக டிறந்தனனோக்கினனால் (அக)

நீக்கமருங்களியி னாழ்ந்தனனின்றெவரு
நோக்கினர் மன்னுறவே நோன்மையி னேழுலகு
மாக்கிய நல்லிசைகொ ளவ்வரு மாமுனிவன்
வாக்கிவ னுக்குளகொ லென்றுமகிழ்ந்தனனாய். (அஉ)

சித்தின்வயிற்றிடையே சிறிய துதித்திடிலே
யெத்தையருந்தியது வெங்கு கிடக்குமென
வத்தையருந்தியது வங்கு கிடக்குமென
வித்தக னன்பொடுவாய் விண்டுரைசெய்தனனால் (அங)

வேறு

அதுல னுரைத்திடு மம்மொழி தன்செவி யடையாமுன்
மதுர கவித்தவ னெந்தை யடித்துணை மலர்வாழ்த்திச்
சதுமறையுட்பொருண் முற்றுமோ ரிம்மொழி தனிலொன்றி
யதுவெனவுட்கொடு கந்தன னங்ஙனிருக்குங்கால். (அச)

வந்தடி சென்னி புனைந்தவர் வெவ்வினை மருவாதே
விந்தையி னின்ப முகந்தரு ணன்மகிழ் விரைமார்பன்
சிந்தையுவந்து விளம்பிய வம்மொழி செவியோரா
வந்தர நின்று பொழிந்தனர் விண்ணவ ரலர்மாரி. (அரு)

மல்லட ரும்புய நின்மல னன்று மகிழ்ந்தீயு
நல்லமு துண்டு வியந்தவி னும்பரி னனியேயு
மல்லலெனுங்கட றன்னி லழுங்கிய வனைவோருஞ்
சொல்லமு தஞ்செவி யுண்டு களித்தனர் துணிவுற்றார். (அசு)

எத்திசை யுந்தனி நின்று புரந்தரு ளிறையோனே
டுத்தியுறும்பணி நுண்ணிடைநங்கையு முடனாகப்
பித்தரெனும்படி தம்மை மறந்தனர் பேரோகை
யத்தியமுங்கி மயங்கி யுணர்ந்தன ராய்நின்றே. (அஎ)

அங்கையெனும்மலர் சென்னி புனைந்தன ராயம்பொன்
றங்கிய செஞ்சடை கொண்டெழுமம்முனி தனையார
வெங்கடம் வெந்துயர் மங்க வெழுந்த ளிறைபோற்றி
யுங்குச னுந்திய வெஞ்சரம் வென்றவ வருள்போற்றி. (அஅ)

வய்யக மெங்குமலிந்து பிறங்கிசை வளர்ந்தோங்கப்
பொய்யிலருந்தவ மெண்ணில் புரிந்த புனிதபோற்றி
வெய்யகொடும்பவ மெவ்வுயி ரும்விட மேவாவந்
தய்யமறும்படி மெய்யறி வின்றரு ளடிபோற்றி. (அகூ)

என்றுவணங்கின ருள்ள நிரம்பி யெழுந்தோகை
யொன்றற நின்றிட மன்ற லுறுங்குழன மடமாதர்
வன்றிறலின்மணி மண்டபமெங்கு மலிந்தோங்கிக்
குன்றின்மிகுந்தெரு வெங்கு முளங்களி கொண்டாராய் (கூய)

விந்தையலங்கிர்த நன்குபுரிந்தன ரென்மேலுஞ்
சந்தனநன்புனு கின்பனி நீர்மலர் தயிர்நெய்பால்
புந்தியிலன்புமிகுந்து பொழிந்தனர் பொருவில்லா
மைந்தனுதித்தரு ளன்றினு மினறெண் மடங்காக. (கூக)

இவ்வண மெண்ணி லருந்தகை யந்நக ரெல்லோரு
மெவ்வழி யுள்ள மகிழ்ந்தனர் வைகுற விகல்சேருந்
தெவ்வர்கடம்முயிர் தினறொளி மண்டிய திறல்வேலான்
முவ்வுல கும்புக ழும்முனி தன்னடி முடிதாழ்ந்தே. (கூஉ)

மின்னவிருஞ்சடை மன்னு மருந்தவ வினையேன்முன்
சொன்னவணந்திரை மண்டி யெழுங்கடல் சூழும்பார்
நின்னததன்கண் மலிந்து பிறங்கிய நிதியெல்லா
முன்னது வின்றுநீ கொள்ளுதி யென்றவ னுரைசெய்தான். (கூங)

அவ்வுரை தன்னை யுணர்ந்துமறிந்தில னெனவேயவ்
வெவ்வழி னன்னெறி கொண்ட வருந்தவ னிடைவைகப்
பவ்வவருங்கடன் மண்டனி நின்றளி பகல்வேலான்
செவ்விய வன்னவன் முன்பினு மின்னுரை செய்வானால். (கூச)

இன்றுகொடும்பவ வல்வினை யன்சொலை யேறுதே
யொன்றிய தெவ்வினை வன்பு மிகுந்தன னுரைசெய்யத்
துன்றிய மின்னவிருஞ்சடை கொண்டு துறந்தெல்லாம்
பின்றவ நல்விர தங்கொ டெழுந்தவர் பிழையில்லோய். (கூரு)

மன்னவர் தம்வினை கொண்டு மகிழ்ந்திடு வகைநன்றே
யின்னமு துண்டவர் வெங்கடு வுண்பர்கொ லெனவேமுன்
றென்னுமுகந்தால வெங்கதா கண்டெழு சீராளன்
சொன்னதுணர்ந்தபின் மன்னவர் மன்னவன சொல்வானால். கூசு

சங்கென வெண்ணில வுந்தி யிலங்குப றவையோகி
ருங்குல தன்மமி தென்னிலே மைந்தனை யுறநன்றாய்ச்
செங்கனி மென்றுவ ரென்ன விளங்குறு செவ்வாயை
யிங்குதிறந்துசொ னன்குமொழிந்திட விறைசெய்யா. (கூஎ)

அப்புமலர்க்கண் விழித்திட வின்னுமதருள்செய்தே
யொப்பிலிவன்றனை யன்னை முலைப்பய முணவோங்கு
மிப்புளி நின்று மெடுத்தெமிடந்தனி லினிதீந்து
செப்பரு வாழ்வையளித்தரு ளென்றுரை செய்தானல். (கூஅ)

திருமதுரகவிப் படலம் முற்றும்.

---

# பதின்மர் திருவரன்முறைப் படலம்

## வழிபடு தெய்வ வணக்கம்

ஆடரவத் தமளிதுயி லரங்கன்செய்ய வடிபரவக்
கூரேச னடையமேலை
வீடுமெக்கின் றளித்தனமென் றரங்கன்சொல்ல
விபுதனென் சம்பந்தா சம்பந்திகட்குன்
காடிடக் தந்தருடியெனவுரைத்துக் கைக்கொ
ணன்மையிற் காடாயமுயர் நனிவீசெந்தை
சேடமுனி கழல்பணிந்து பதின்மர்தங்க
டிருவரன்முறைப் படலஞ் செப்புவாமால். (க)

வேறு

இன்னணங் குரிசி லுரைசெவி யுணர்ந்தாங் கேதிலாத் தவமுனி [யுகந்து
தென்னனின் மகவென் றுள்ளினை யதுவோர் தேவரா சியமெனத் [திரண்ட
கன்னவிற்றுறத் றோட் காளமன் மதுர கவியடி பணிந்ததை யருடி
யென்னலு முன்னுண் டறிந்தவை முழுது மியம்பின னெவர்களு [மறிய. (உ)

தாதவிழ்ந்தினவண் டுதுபைந்துளபத் தாரினன் கதைக்கள னூர்திப்
போதவற் கருநான் மறையன வடிவிற் போதமுற் றிடவருள் புனி [தன்
ஆதவனெளிகெட் டிரவுறப் பகலி லமர் கோன் மெடற்திதருகபடன்
வாதமுன் னரவப் பணையி நடித்த மாயவன் பரவாசுதேவன். (௩)

செங்கதிர் மதியின் மினியெனவொளிகொள்சேனுறு கித்தியரன்றிப்
பங்கய னரனிந் திரன்முத லறியாப் பதத்தவ னுள்மகிழ்ந்துலகோர்
நங்கழ னிலைபெற் றின்புற வவர்த நவைகொள்வெவ் வினைத்தொட
[ரகலச்
சங்கையி லவதாரங்கள்செய் துரைத்த சதுமறைவிதிவழியனைத்துட்.

கற்றிடற் குரிய ரெவர்க்குமுட் பொருள்கள் கசடற வெளிப்பட
[லரிதாய்
மற்றுளோ ருள்ளற் கறமில தாகி வழங்கலி லவரெவாறுய்வார்
இற்றைநாடொடங்கி யாவரு மம்மை யெளிதினி லறிவதற் கினிய
சொற்றருந் தமிழி லருமறைப் பொருளைச் சொற்றிடி லுய்வரென்
[றெண்ணி. (ரு)

பைத்தலை யரவுக் கரசனே டினிய பரிகர மனைத்தையும் விளித்தங்
கத்திருவுலகின் முன்பினு மமிச மவதரித் திடப்புரிந் தறநூன்
முத்தமிழதனிற் றெளிதரப் பொருளை மொழிந்துவெம் பிறமத
[நெறிகொள்
சித்தர்களெளிதிற் பரமிதென் றறியச் செய்திடச் செவ்வியிற்
[செய்மின். (சா)

என்றவர்க் குரைத்திவ் வுலகுயக் கருது மெம்பிரான் சரபசங்கார
வென்றிகொளுகிரி னரகரி யெனுமம் மேதகு விமலனுள் ளுகந்தே
இன்றுநீசெய்த தவத்தினு முன்னு ளெய்துமாதவத்தினு முனக்கு
மன்றலங் குழவி யெனப்புகழுடைபோய் மலடற வுதித்தன னென்
[றூன். (எ)

மாமுனியுரைத்த வுரைசெவி யுணரா வாம்பரி மன்னர்கோனயந்து
தேமலர்த்துளவினருட் பெறுமச் சேடன்மற் றுளபரிகரங்க
டாமினிதுதித்த தெவ்விட மவர்கள் சாற்றிய நூல்களியா வெனவும்
நாமவேன் மன்னு நினக்கறி வுறயா னவில்குவ னெனநவில்குவனுல்

## முதலாழ்வார்கள் (வேறு)

தண்டுழாய் மார்பன் பாஞ்ச சன்னியாழ் வானு மிந்தத்
தொண்டைமானிலம்பெண் கண்டந் துலங்குமங்கலமே யென்ன
வண்டமொடிலகு மிஞ்சி யத்திமா நாகந்தன்னுட்
கொண்டலார்கலியென் றுள்ளிக்குளிர்புனற்பருகும் பொய்கை.[கூ]

தோடவிழ்ந் தொழுகு செந்தேன் றடம்பிதங்கிளையோ டுண்டு
பாடொலி கறங்குஞ் செய்ய பங்கயமலரினுள்ளே
கேடிறுவாபராந்தங் கெழுமுசித்தார்த்திதன்னி
னுடைமைப்பசியிற்சுக்லபக்கமுநயந்தகாலை. [௰]

ஓணமோ டார ணன்ஞ் ளொன்றிய தினத்தி லாங்கு
மாணமர் குழவி யாயவ் வளநகர் வதிந்து நாம
நீணிலத்தவர்கள் பொய்கை யாரென நிகழ்த்த மேலோர்
பேணிய புவிகள் முற்றும் வலஞ்செய்வான் பெயர்ந்தா னன்றே

திண்டிறற் கதையு முன்னஞ் செப்பிய திருநா டுள்ளே
வெண்டிரைக் கரங்கண் முத்தம் வீசுமம் புதிக்கங் குற்ற
துண்ட வெண் பிறை யோனென்னச் சுதையவிர் மாட மல்லை
வண்டிமிர்ந் தடருத்யான வனத்துறு குருக் கத்திக்கண் [௰௨]

வாய்ந்த பொன் மலரிலந்த யுகமொடு வருட மாதத்
தேந்திடு புதனவிட்டத் திளமக வுருவாய் நாம
மாய்ந்த பேருலகர் பூதத் தய்யனென் றழைக்க முன்னீர்
தோய்ந்த மாநிலமன்னேனும் வலஞ்செய்வான் றொடங்கிச்சென்றான்

நாந்தக மதுமுன் சொன்ன நாட்டெறி கடற் கரைக்கண்
மாந்தளி ரனையமேனி மாதரார் மயிலை தன்னிற்
பாந்தளிற் பயிலு மாதி கேசவப் பெருமாள் கோயி .
லேய்ந்தநீள் புனல்கொள் கூபத் திருந்தசெவ் வல்லிப்போதில் [௰௪]

முன்னிருவருக்கு மாங்கு மொழியுக வருட மாதம்
தன்னிலந் தசமி பொன்னாட் சதையம் வந்துதித்த நாம
மின்னிலத் தவர்கள் பேயரென்றிட முதிர்ந்த ஞான
மன்னியவாறு பூமி வலஞ்செய்வான் றொடங்கிச்சென்றான் [௰௫]

முனம்புவி வலஞ்செயச்சென் மூவரிற் பெரியோன் செய்யி
லனம்பயில் கோவ லுற்றோ ரம்மையார் மனைக்கண் சென்றித்
தினந்துயில் வுறவெற் குய்மி லிடமருள் செய்யீரென்ன
மனமகிழ்ந் தவளத் தொண்டன் மலரடி பரவிச் சொல்வாள் [௰௬]

அய்யவிக் குடிற்கு டிண்ணை யொருவருக் கணையா மற்று
மெய்யவரிருவராகில் வீற்றிருக் கிடலா மூன்று
துய்யவராகின் மாயன் றொழ நிற்றிடலா மென்னப்
பொய்யிலாள் மனைக்கு ளன்பிற் புகுந்து கண்டுயிலுங் காலை [௰௭]

பூதமா முனிவ னின்னேன் போலவே வினவி வந்தம்
மேதகு விமலனோடு வீற்றிருந் தருளமற்றும்
கோதிலா னொருவ னன்னேன் போலமேய் வினவிக் கூட
வேதிலார் மூவராகி யிசைந்து நின்றிடுமவ்வேலை [௰அ]

நள்ளிருட் பிழம்பி னுங்கு நனிபடர் தரவவ்வேலை
கள்ளிருந் தொழுக வண்டர் காமரு பெடையோ டுண்டு
கொள்ளரும் பார்ப்பு முண்ணக் கொடுத்துவாழ்துளவத் தெந்தை
னெள்ளலாரிடைக்க ணின்று நெருக்கிடவவருஞ் சொல்வார். [௰௯]

அய்ய மூவரின் முன்னேனங் கடைதரு மிருட்குலங்க
ணையவென் றுழியான்ற னளிரடிக் கமலப் போதில்
வையமோர் தகழி யாக வாரிதி நறுநெய் யாக
வெய்யவன் விளக்கதாக விருப்புட னேற்றினுனல். [உ௰]

பின்பிரு வருக்குண் முன்னேன் பேரிருட் பிழம்புதுஞ்ச
வன்பொரு தகழி யாக வார்வமே நறுநெய் யாக
வின்புறு சிந்தை யந்நெய் யிடுதிரி யாகப் போத
நன்மணி விளக்கதாக நாரணன் கழலிற் சூட்ட. [உக]

துன்னியவிருள்கணீங்கித் துளவினன் கலுழன் மீதங்
கன்னவர்க்கெதிரில் காட்சி யளித்திட வவருட் பின்னேன்
மன்னிய திருவைக் கண்டேன் மாசில்பொன் மேனிகண்டேன்
பின்னுமைம் படைகைக் கண்டேன் பேரருட் கடலென்றோதி [உஉ]

மூவரொன் றாகி யார்க்கு முதல்வனை விதியீசற்குந்
தேவனைக் கமலவீட்டுச் செல்வி நாயகனை வாழ்த்தி
மேவுபு வணங்கி யன்னேன் விரிபுக ழதனினெஞ்ச
வாவுற வேதாந்தார்த்தம் வண்டமிழ்த் தொடைசெய்தாரால். [உங]

அத்திரு நாட்டில் மாயன் றிருவாழி யாழ்வான் மெய்யர்
நித்தமைந் தழலை யோம்பு நீணகர் மழிசை தன்பாற்
பத்துடை யடியர் மேலாம் பார்க்கவ ரிடிதன்றேவி
மைத்தகோ திசுக வின்சொற் கனகாங்கி மணிவயிற்றில். [உச]

செப்புறு விபவாப்தத்துட் செயிரறு மகரசுக்லத்
தொப்பறுதசமி பொன்னுளுற்றிடு மகநாளெங்கு
மற்புத மெனவோர் பிண்ட மாயவதரிக்கநொந்தம்
மைப்படி குழலியோடவ் வரமுனி யதையெடுத்தே. [உரு]

வழிப்பறிக் கபடர் மேலாம் வள்ளலிம் மந்திரந்தான்
விழுமிய ததினுலிந்த மென்மலர் வாயியுண்ணி
முழுகிநாமமு மணிந்துண் மொய்த்தவன் பகலத் தென்னை
தொழுதுபின் வினவிற் சொல்வன் றாய வென்னலு மிசைந்தான்.

மாதவ னடியை வாழ்த்தி வலச்செவி கொடுக்க வன்னோன்
கோத றட்டாக்கரத்தைக் கூறவு மிருளகன்று
போதமுற் றெனையிவ் வாறிற் போந்துனதடிக்காட்செய்த
நாதனே கண்டுகொண்டே னாரண னுமமென்றே. [௱எ]

சூடினன் மடிமாங்காயிட் டடியனை வழித்தொண் டாக்குங்
கோடுளாய் மாதரார்தங் கூர்விழி வலையிற் பட்டு
வாடினேன் வாடி யென்றும் வருந்தினேனெனப் பாமாலை
பாடினன் பரமீதென்று பாருளோர் தெளிய மாதோ. [௱அ]

பொன்வரைக் குடுமி மீதூர் புயலெனக் கலுழன்மீது
கன்னியந் துளவினனுங் காட்சிதந் தருளிப் பின்னர்
மன்னுநங் கலிய னென்று நாமமும்வழங்கிச் செல்ல
வின்னவ னுகந்தம் மாயன் பதிதொறு மிறைஞ்ச் வென்றே. [௱கூ]

நாடிப்பல் பதிகஞ் சொல்லி நாற்கவிப் புலவனென்று
நீடிய விருது பெற்று நிகழுறும்பொழுது கொன்றை
சூடியின் கழல்சம்பந்த தூதனுங் கொருவன் செல்லா
எடமிவம் மிறைபோலிந்த விருதனக் கிசையாதென்ன. [௱ய]

கலியனீ தறிந்திவ் வண்ணம் விருதுகொள் கவியின் மிக்க
வலியன தவைக்கண் சென்றியாம் வாதமேபுரிவ மென்று
சொலிவரு மிவனை யன்னோன் றாயனென் றறியானுகி
வெனுவமென் றெண்ணிநீயோர் குறளினை விளம்பென்றானல். ௱யக

இந்தவா றுரைப்ப நெஞ்சத் தேதிலாக் கலியனோர்ந்தே
யந்தமா நகர்க்குள் வைகும் வைணவத் தம்மையாரை
யெந்தமக் குமது பூசை யெம்பிரான் றனைநீர்சந்றே
தந்திடு மெனக்கைக் கொண்டச் சார்ங்கனை யெதிரில் வைத்தே.

ஒருகுற ளென்றெடுத்துப் பதிகமொன் றுரைத்துத் தான்கொள்
விருதுக ளனைத்துங் கூறி வென்றபி னிவனை யன்னோன்
திருவடி வணங்கி நாயேன் செய்பிழை பொறுத்தி யென்று
பருதிமுன் சசியினின்று பரகால னென்று போனன். [௱யங]

வெறுமையா லறுவை கீறி வேளை போக்கிடப் பொருந்து
மறிஞரை யுமைகாண் குற்றிவ் வறியனுக் கருள்வா யின்று
தறுகண்வெங் கயத்தோ லன்பா சார்ந்தென மறுக்கத் தாழ
மறுவிலான் முனவன் நண்ண மதித்திடா திருந்துந் தேறான் [௩௪]

மாசிலாய் நினது ளென்சொல் வழங்குவ னெனவீடென்ன
வாசிலா ததற்கு நாமோ ரதிகாரி யில்லை யென்னத்
தேசிக னகைத்தாங் கேளின் சீர்மை யிக்கலை பொருத்து
மூசிபோம்வழி நூலேனு முடன் செலற் குதவா யென்ன [௩௫]

முக்கணான் பரிகசித்தா னிவனென முனிந்து வெய்ய
வக்கினிக் கணைவிழிப்ப வவன்றவத் தழலையேவ
விக்கிநொந் துயரேழ் மால்பெய் வித்தும தவியா தெண்ணி
நக்கனும் பக்தி சார நாமமிட் டேகினால் [௩௬]

இத்தகை மழிசை வேந்த னிணைமரு திறுத்த வேந்தே
மத்தளை தயிர்பா லுண்ட மாயனே பரனென்றோதுந்
தத்துவப் பொருளு மாறு சாத்திரப் பொருளு மோர்ந்து
முத்தமிழதனில் யாரு மொழிதரப் புகன்றான் மாதோ [௩௭]

காரமர் மேனி நங்கள் கண்ணனின் கவுத்துவாம்சத்
தார்கலி பரசு ராம னாணையி லொதுக்கித் தந்த
கேரள நாட்டு மாதர் கிளரொளி வதனநோக்கி
மாரவேண் மயல்கொள் வஞ்சிக் களநக ரரசுகந்து. [௩௮]

அகனில முழுதுமோச்சு மரசனாங் கொருவன்பால
வுகமுறு பராபவத்து ளோங்கிய மாசிச்சுக்லத்
திகல்கெடு தசமி பொன்னா ளெய்திய புனர்பூசத்திற்
பகலவ னொளியே யன்ன பைங்கதிர்க் குழவியானான். [௩௯]

சேரனுக் கிளவலாகச் செனித்துவெண் டிருமண்காப்பு
நேர்கொள்வைணவர்க ளோடு நித்தலும் ராமகாதை
யோருநாட் கரனோடெந்தை யொருவனைப் பொருதுங் காதை
போரவு மொழியக் கேட்டுப் பொருதுவன்கரனோடென்றே. [௪௰]

வழிகொடு நடந்த போத மைச்சரான் மறைவலார்கள்
பழிபடு கரன்மற் றுள்ள பரிகர மழிந்தாரென்று
மொழிதரு காதை சொல்ல முழக்குமேபேரிகையை யென்று
கழுகுலா யயிற்கை வேந்தன் களிப்புடனிருந்தானம்மா. [௪௧]

இன்னவா றியைந்த வாய்மை யேதிலா வுழையரோர்ந்து
மன்னனுக் கிவ்வா றேதும் வைணவர் நீக்கவென்று
ளுள்ளியவ் வினன்செய் பூசைக் குரியதென் னரங்கன்சாத்தும்
பொன்னணி யாரந் தாமே கவர்ந்துபின் புகலலுற்றார். [சஉ]

கடகரி மருப்பொசித்த கண்ணன் முத்தாரந் தன்னை
மடமிலா விபுதராகின் வைணவர் கவர்ந்தா ரென்ன
வடலரசவர்கள் செய்யா ரென்றுரை யாடிப்பாந்தட்
குடமதுட் கையிட் டன்னோர்க் குறுதியே கூறினனல். [சங]

இனையன விழைத்தபேர்க ளுழையரென் றினனுளெண்ணி
வனமணி மார்ப னெந்தை மாமதி லரங்க மேவித்
தனைக்குல சேகராழ்வா ரென்றுபேர் சாற்றப் பெற்று
முனமுள ராம காதை மொழிந்தனன் றமிழி லன்றே. [சச]

கள்ளவி ழுளகபாரக் கடைசியர் களைகொய் வேலை
பள்ளநீர்ப் பழன முற்றும் பங்கயங் குமுத நீலத்
தொள்ளிய வுருவிற் காட்ட வோதையிட் டலமார்ந் தெங்கும்
கொள்ளைவண் டுளமயங்குங் கோமகன் வழுதி நாட்டில். [சரு]

அல்லியங் கோதை மாத ரகனிலா மணிமாடஞ்சேர்
வில்லிபுத்தூரின் மெய்ய விப்பிரர் குலத்து முன்னஞ்
சொல்லுகற் குரோதனத்திற் றோன்றியமிதுனசுக்லச்
செல்வநற் பலகோ ளேகாதெசிகொள் ஞாயிறுநன்னாளில். [சசு]

சோதிநாட் கருடன் சேயாய்த் தோன்றியப் பருவஞ் சென்று
நீதிநூ லனைத்து மோர்ந்து நிமல ரநந்தனன
வாதிமா லடியர் தம்பா லன்புபூண் டவன்பதத்திற்
போதுநந்தவனம் வைத்துப பூந்தொடை யளித்துவந்தான். [சஎ]

ஆவலிற் றுளபமற்று மமுதுகு மலர்கள் கொய்து
மாவல மார்பன் செய்ய மலரடி சூட்டுநாளிற்
சிவல தேவனென்னுந் தென்னர்கோன் பரமதாய
தேவினைத் தெரிவா னுள்ளந் திகைத்திருந் கவலைபூண்டே. [சஅ]

கல்வியின் முதிர்ந்து ஞானக் கடலெனக் கருணை பூத்த
செல்வநம் பியினைக்கூவித் தேவினுட்பரமீதென்று
சொல்வதற் குலகுளோரிற் றனக்கறு பகைமற் றன்ன
பல்வகை நூல்களாய்ந்து பாவலர்த் தோப்பினென்றான். [சகூ]

இன்னிலத் தியாவரேனு மிணையிலாப் பரமீதென்று
நன்னெறி மநுநூன் மற்று நான்மறை யெவையாலேனு
மன்னிடப் பிரதிபாதிக்க வல்லரே லளவிலிந்தப்
பொன்னுறு கிழியறுத்துப் போவரென் றறிவித்தானல். [௫௰]

கற்றறிவாளர் பல்லோர் கசடற வறிந்தீதென்று
சொற்றிடற் கரியதாகச் சோர்வுறப் புதுவை வாழு
மற்றுறந் திடவென் றேட்டும் வடபெருங் கோயிலுள்ளா
னற்றைநா டொடையல் சூட்டவ் வன்பனின் கனவிற் சொல்வான்

வார்த்தவேல் வழுதி கூடன் மன்னர்கோன் பரமீதென்று
தேர்ந்திட வறிவிப் போரிக் கிழியறச் செய்வாரென்று
நேர்ந்தவ னற்றி னனந் நிருபன தவைக்க ணீயுஞ்
சார்ந்திதென் றறிவித்துப்பொன் றனையறுத் திவணேகென்றான்.

கொழுஞ்சுட ரனைய நேமிக் கோவல னுரைப்பவன்றேன்
அழுங்கியு னடியிலன்பி னய்மலர்த் தொடையல் சூட்டுந்
தொழும்பல தறியா யான்மெய்ச் சொரூபமீ தென்பான் கொட்டுத்
தழும்பினைக் காட்டி வீட்டத் தக்கதோ கிழியை யென்றான். [௫௩]

மெய்யனின் கவலை மாற்றி வேந்தன தவைக்கண்வாதஞ்
செய்யுநா ளெழுந்து யானுன் சிந்தைவந் திருப்ப னஞ்ச
லய்யவென் றிடவவ் வன்ப னரசர்கோ ணவைக்கண்சென்று
பையராத் துயிலு மாலே பரமென வறிவித்தானல். [௫௪]

கொய்யுளைப் பரிவேந் தன்றேன் கூறிய தோர்ந்து பின்னுங்
கையிலங் காழி மாலே பரமெனக் கழறும் வாய்மை
மெய்யெனில் கிழியறுந்து விழுமெனச் சமையமெல்லா
நையவீழ்ந் ததுவெல்லோர்க்கு நாரணன் பரமனென்ன. [௫௫]

மீனகேதன னுகந்தவ் விபுதனைக் களிற்றி லேற்றித்
தானைபின் றொடர வீதி தனைவலம் வருங்காலத்தில்
வானினன் முகன்வேய் முத்தன் வார்தொழக் கலுழன்மீது
தேனிறை துளவத் தெந்தை சேவைதந் தருளக்கண்டே. [௫௬]

கூடினன் களிநூலங்கக் குணமிகு பாமன் றனைச்
சூடினன் றதிபல்கா லுஞ் சொல்லினன் றுளங்கி நெஞ்சம்
வாடின னிவர்கண் ணிறு வருமெனத் திருப்பல்லாண்டு
பாடின னெவர்க்கு நீயே பரமெனந் தொழுதான்மாதோ. [௫௭]

பொன்னவள் கொழுநன் வாழ்த்திப் போனபின் புனிதனுரும்
பின்னமி லிவர்க்குப் பட்டர் பிரானென நாமஞ் சாத்திக்
கன்னவி ரிரடோட் காளை கனிந்திவர்க் கடிமையாக
மன்னுமிவ் வுலகிற் பாக வதமியற் றமிழ்செய்தானல். [௫அ]

இனையவன் புதுவை சென்றாங் கெந்தைபான் முன்னினந்தா
வனமதுபுரந்து செய்ய மலரளித் திடுமோர்நாளிற்
கனவண னருளா னீளை கடிவனத் துளவத்தூற்றிற்
சினமக ளுருவதாகத் திருவின்வந் தவதரித்தாள். [௫௯]

மண்டமர் கடந்த வாழி வடபெருங் கோவிலார்க்குத்
தண்டுளவெடுக்குங் காலத் தளிர்நிறக் குழவிதன்னைக்
கண்டுட னெடுத்து வந்து கனிவுடன் வளர்க்க வன்னாள்
கொண்டலிற் சுருளுங் குஞ்சிக் குழவிபோய்ப் பருவமுற்றாள். ௬0

ஓடரித் தடங்கணாளவ் வொளிமணி வண்ணற் கன்னோன்
றோடவிழ் மலர்கள் கொய்து தொடுத்துவைத் தயல்போங் காலை
காடியுள் ளுகந்து நீண்ட கள்ளிரு ளளகந்தன்னிற்
சூடிநீர்க் கிணற்றிற் பார்த்துச் சுற்றிவைத் திடுமோர்நாளில். [௬௧]

தார்வட பத்திரற்குச் சாத்தவன் றேனெடுக்க
வார்குழலிருப்ப நோக்கி மதிமலைந் துழன்று கெட்டுச்
சீர்கெழும் மடமான் செய்த செய்கையென் றறிந்துமற்று
மேர்கொடேமலர்கொய் தெந்தை யிணையடி புனைந்தான் மன்னே.

அம்மல ரணிந்த மாலவ் வடியனின் கனவிற் சென்றப்
பொம்மல்வெம் முலையாள் சூடும் போதுகந் தளித்திடாதிச்
செம்மல ரளித்த தெற்குத் திருவுள மிலையென்றேக
விம்மறை யோனு மன்னா ளிந்திரை யாமென்றெண்ணி. [௬௩]

படத்தர வணையானுள்ளப் படிமல ரளித்துச் சூடிக்
கொடுத்தவ ளென்று நாமங் கொழுங்கயற் கண்ணிக்கீந்தான்
மடக்கொடி யுகந்து பொன்னி யரங்கனை மணந்து முன்னீ
ரிடத்துப நிடதார்த்தத்தை யிசைத்தன டமிழிலன்றே. [௬௪]

கடிகொள்சந்தகிலுருட்டுங் காவிரி நதிநீர் சூழத்
தொடுதிரை விளைவாஞ் சாலிச் சோழநாடதனுள் மண்டங்
குடிநக ருறையும் விப்ர குலத்திலோர் வனமாலாஞ்சத்
தடியர்பாற் கலியுகத்தி லழகிய தனுமாதத்தில் [௬௫]

கேட்டைநாளவதரித்துக் கிளரொளி மகவாய் ஞான
நாட்டமார் விப்ரநாரா யணனென நாமம்பெற்று
வாட்டமின் மறைகண் மற்றை மனுமுத னூல்க ளோர்ந்து
கோட்டமின் மனத்தா னென்று கூறிட வதியுமெல்லை. [௬௬]

மஞ்சுயர் மாட நீண்ட மாமதி லரங்கஞ் சென்றே
ரஞ்சன வண்ணன் செம்பொ னடியிணை வணங்க மாயோன்
கஞ்சநீண் மலரரிக்கட் கடையரு ளளித்தன் னேன்ற
னெஞ்சினைக் கவர்ந்து தன்பா னேயவா னாக்கினானால். [௬௭]

அற்றைநாண் முதலன்னோனெம் மரங்கனே யரணென் றுள்ளிற்
பற்றிமா மலர்கொணர்ந்தா வனமத்து பரிவாய் வைத்து
நற்றொடை யளித்துச் செல்லு நாளொரு தினத்திலந்நா
டுற்றிடு திருக்கரம்ப னூரில்வாழ் கணிகைமாணாள். [௬௮]

காவிவென் றகன்று நீண்ட கயற்கணந் துவர்வாய்த்தேவ
தேவகி யெனும்பேர் கொள்ளுந் தெரிவையு மிருளைமாரு
மாவலி னிசுளை யென்றே ரணிநகர்க் கரசன்பாற்சென்
றேவல்கள் புரிந்து தன்பொ னெழினகர்க் கெய்துமாறில். [௬௯]

இவ்வெழில் வனங்கண் டுட்சென் றெய்திரு வளநோக் குங்கா
னவ்விகொ ணயநி விப்ர நாரணன் றன்னைக் காணச்
செவ்வியோ னிவளை யோர்கண் டிரும்பியும் பாராநிற்க
வவ்வணி மாதுக் குற்ற பின்னவ ளறைகின்றாளால். [௭௰]

மைப்படு குழலி யிந்த வையகத் தெவரையும்யான்
கைப்படுத் துவனென் றென்பாற் கழறினை யலவோவிந்தத்
துப்பனை வசஞ்செயின்னீ தொழில்வல வேசி யென்ன
வெப்படி யேனு நங்கா யிவனையென் வசப்படுப்பேன். [௭௧]

கூறென வுரைக்க மற்றோர் தொன்னக ரடைய வீண்டு
வாளரி மதர்க்கட் டேவ தேவகி வஞ்சமுற்று
நீளலர் வனத்துக் கன்னோன் பரிவுட னீரிறைக்கும்
வேளைபார்த் திவளங் குற்றம் மடையினை விலக்கிவந்தாள். [௭௨]

இன்னணஞ் சிலநாட் சென்றவ் வேதிலா னீயாரென்ன
நன்னய நிதிவெறுத்து நாயினேன் பரனைக் காண்பா
னுன்னடி பணிந்து சந்ம முய்த்திட வந்தேனென்ன
வன்னவ னிசமென் றுள்ளி யவ்வனம் பயிலுங்காலை. [௭௩]

வருடமோ ரிரவிற் பெய்ய மறைவலான் சிறுகுடிற்கு
ளிருடிபோல் வேடங்கொண்ட விவளையாங் கழைக்க வந்தே
னருடருந் தவனே நின்றன டியிணை வருடல் செய்வேன்
முருடனே னெனநயந்து முனிவனை வசஞ்செய்தாளால். [எ௪]

அன்றுதொட் டவளை யின்னே னிறையவா வகலானாகிப்
பின்றொடர்ந் தேக வன்னாள் பின்னவள் வியந்த பின்னர்ப்
பொன்தரத் தரமிலாய்நீ போவெனப் புகல மின்னாண்
முன்றில்வந் தணுகி யென்னே முடங்கிநெஞ் சுருகுங் காலை. [எ௫]

வாவிசூழரங்கன் றன்பொன் வட்டிலை யெடுத்தன்னோனை
மேவிய தூதன் போல வெய்திய வேசி தன்முன்
மேவிவட் டிலையுன் விப்ர நாரணன் கொடுத்துவிட்டா
னாவியி னவனைக்கூவி யணைகெனக் கொடுத்தகன்றான். [எ௬]

அன்னவன் கொடுத்தகன்ற வனந்தர மவனைக் கூவிப்
பின்னமி லணைந்து மற்றும் பிற்றைநாள் வெறுக்க வாங்கு
பொன்னரங் கேசன் கோயிற் பொலன்கொள் வட்டிலைக் காணாதீ
தென்ன காரணமென்றேங்கி யிறைவனுக் கறிவித் தாரால். [எ௭]

செம்பியன் சினத்தக் கோயிற் சேவக ரனைவோர்க்கூவி
யெம்பிரான் வட்டிறன்னைக் கவர்ந்த தாரியம்பீ ரென்று
வெம்பிட வருத்துங்காலவ் வேசையின் றாதி சென்றெம்
வம்பவிழளகத்தேவதேவகி மடமான் கண்ணே. [எ௮]

அடுத்தவ னொருவன் விப்ர நாரண னவன்றன் றாதாய்
விடுத்தவ னொருவ னோர்பொன் மேயவட்டிலைக்கைக் கொண்டு
கொடுத்தன னதுவோ வென்று கூறுமுன் படைதிரண்டவ்
வடுக்கணி மனைசோதித்தவ் வட்டிலை யெடுத்தாங் கெய்தும். [எ௯]

துப்பனை யழைத்து நின்றன் றாதனார் கவர்ந்த தென்னீ
செப்புவா யெனவுமன்னோன் செப்பலென் றாதுமில்லை
யிப்பொன் வட்டிலையும் யானிங் கெடுத்ததி லெனவேந்துள்ளம்
வெப்பியன் னோனைக் காவற் படுத்திடவிளம்பிச் சென்றான். [அ0]

பொன்னிசூழரங்கனிந்தப் புனிதனென் றறியாள் யானே
யன்னவ ளிடத்திற் சென்றிவ் வட்டிலை யளித்தென்றேனென்ற
னன்னயத் தூதனென்று நவின்றனை னென்று வைவேன்
மன்னவ னருகிற் சென்று கனவுரை வழங்கினானால். [அக]

கேட்டமன் னவனுமென்ன கேடிழைத் தனமென் றுள்ளம்
வாட்டமுற் றவனெழுந்தம் மறைவலான் சிறையை நீக்கிக்
கோட்டமின் மனத்தினேயென் கொடும்பிழை பொறுத்தி யென்று
தாட்டுணை தழுவ வன்னோன் றன்பிழை குறித்தயர்ந்தே. [அ௨]

முன்னினந் தவனம்வைத்தம் மூகிழ்மலர்த் தொடையல் சூட்டித்
தென்னரங் கேசன் மெய்ய திருவடித் தொழும்பனுகி
யன்னவ னடியவர்க்கு மடியர்காற் றுகளுமங்கொண்
டின்னியல் வேதாந்தார்த்த மிசைத்தனன் றமிழிலன்றே. [அ௩]

ஓதமா னீர்கொள் பொன்னி யுலவுதண் சோழநாட்டின்
மாதவர் வேள்வி நாளும் வளர்த்திடு முறந்தை தன்னிற்
சீதவா ரங்கொழிக்குஞ் செய்யுறு கதிரினுளளே
கோதறு கலியுகத்திற் கூறுதுன் மதியப்தத்தில். [அ௪]

விருச்சிகமதியிற் புந்திவிமாகநாள் ஸ்ரீவத்ஸாஞ்சத்
துருக்கிளர் மதலை யாயங்குதித்தழ வுழவன் காணுத்
தருக்குடனெடுத்தச்சேயைத் தன்மனை வளர்க்கச்சேயுந்
தெருட்சியின்முதிர்ந்தஞானச் சிந்தையாய்வளர்ந்துபின்னர். [அரு]

நித்தலு மரங்கத்துற்றுத் திருமுகத்துறைக்கு நேர்நின்
றத்தனை மனத்துட் கொண்டங் கவன்குணம் பலவும் சொல்லிப்
பித்தரிற் கடையனேனென் பிறப்பறுத் தருள்வா யென்று
புத்தல ரடிவணங்கிப் போருநா ளொருநாளாங்கே. [அசு]

போதுலாம் பொதும்பர் சூழும் பொன்னரங் கேசனூக்
கோதிலாற் கருள்வானெண்ணிக் குணமிகு முனிவனுகும்
வேதசாரங்கன் றன்பான் மேவுபு கனவி னீநஞ்
சீதவார் புனலலைக்குந் திருமுகத் துறைக்கண் சென்று [அஎ]

அங்கிருந் தொருவனம்பா லன்பினின் றகலா னுகிச்
செங்கர முடிமேல் வைத்தித் திசைதொழு திறைஞ்சி நிற்கும்
புங்கவன் றனைநின்றோளிற் பொலியவைத் திவண்வாவென்று
வங்கமா கடல்கடைந்த மாயவனருளிச் சென்றான். [அஅ]

அவ்வுரை முனிவன் கேளா வன்புடனெழுந்தாங்குற்ற
செவ்வியோன் றனையழைப்பச் சிறியனுன் புலையனையா
எவ்வண மெழுவேனென்ன விசைத்தனன் றிருத்தோளேற்றிப்
பவ்வநீ ரணைபடுத்த பாழியான் றிருமுன் புய்த்தான். [அகூ]

வண்டின முரலுந்தாம வனமணி மார்பன் றன்னைக்
கண்டுள நிறையாநந்த நீரிரு கண்ணுங் காட்ட
வண்டர்நாயகனை வாழ்த்தி யவனரு ளமுத மாந்திப்
பண்டுபோம் பொருள்கிடைத்த படியுள மகிழ்ந்தானன்றே. [௬௰]

மாடமாளிகையரங்க மறைவலாரிவனை வாழ்த்திக்
கோடுடைப்பாணுக்குற்ற குணங்களி லீடுபட்டுப்
பாடலி லுனக்கு நாமம் பாண்பெரு மாளென் றோத
வீடிலான் வேதாந்தார்த்த மிசைத்தனன் றமிழிலன்றே. [௬௧]

கொல்லுலைப் படுவே லங்கைக் கோமகன் வதிசோணாட்டுட்
சில்லரிச் சிலம்பு மாதர் செறிதரு குறையலூரி
லல்லிநற் கமலக்கண்ண னழகிய தனுவஞ்சத்தின்
மல்லலங் கலியுகத்தில் வருநளா வருடமண்ணே. [௬௨]

பொங்குகார்த்திகை யுவாவிற் பொன்னெரிநாளினல்ல
மங்கல யோக நான்காம் வருணம துதித்து நாமம்
நங்குல நீல னென்று நவின்றிட வளவன் றன்னாற்
சங்கையி னிதிபடைத்தோர் தரணியும் புரந்து வந்தான். [௬௩]

ஆவியி லுலக மோம்பு மவன்றிரு நகரி லுள்ளோர்
வாவியி லரம்பை மாதர் வைகலு மாட வோர்நாட்
கூவிளங் கனிமென் கொங்கைக் கொடியிடைக் கமல மாது
மேவியிப் புவிமானென்ன வியந்து நீராடி னாளால். [௬௪]

அன்னவ ளடைதலோடு மரம்பைய ரகலக் கண்டார்
பொன்னவ டனிக்க வாங்கோர் புனிதன்வந் திவளை நோக்கா
நின்னிட மெவணின் பேரென் னிற்றலென் றனித்திங் கென்னக்
கன்னலிற் கனிந்த தீஞ்சொற் கன்னியுங் கழறு வாளால். [௬௫]

நாகமங்கையரோ டிங்கு நணுகின னெனையன்னோர்விட்
டேகின ரினியுன் பண்டி யெய்திய மகள்யா னென்னக்
கேகையச் சாயன் மாதைக் கிழத்திபா லளித்து நாளும்
பாகமா ரமுத மூட்டிப் பரிவுடன் வளர்க்குங் காலை. [௬௬]

நீலனவ் வநகன்பாலோர் நேரிழை யியைந்து வாழுஞ்
சீலம தறிந்தனைத் திருமணஞ் செய்ய வென்று
கோலியாங் கணுகிச் செம்பொன் குறைவறக் கொடுக்கவன்னோன்
னேல்வார் குழலி யுள்ள மென்றவ ளியம்பப்பின்னர். [௬௭]

குருகுலாமயிற்கைவேந்தன் கோகில மொழியைக்கேட்கத்
திருவிலச்சினையுண்டாகிற் செய்வனென் றுரைப்பச்சென்று
மருமலர்ப்பொதும்பர்சூழு மாமதினறையூர்நம்பி
யருளினன்றிருமுன்பெற்றீண்டடைதலுமவள்பின் சொல்வாள்.

வான்றுறை புனைநாட் டொட்டோர் வருடமதளவுமெற்கோர்
நோன்பது வைணவர்க்கு ணூறுபேரழைத்துநித்தம்
பான்மிசை கருனை மற்றும் பலமளித் தவருண்பிக்கி
னுனை மணப்பே னென்ன நன்றெனமணஞ்செய்தானால். [௯௯]

மன்றலா னதுதொட் டன்னோன் வைணவர்க்களித்துக்காணுக்
குன்றிய நிதியோ னுயுட் குழைவது வளவன் கேட்டு
யின்றுநந் நிலுவை வாங்கி யேகுமென் றுரைக்கத்தூதர்
சென்றிட முனிந்தி லென்னச் செம்பியன் சிறையிலிட்டான். [௱]

வெம்பிய சிறையி லன்னோன் வெதும்பநும் வேந்திறைக்கும்
வம்பவிழ் கமலத்தொங்கல் வைணவர் வேழ்விக்கும்யான்
அம்பொன தளிப்பே னென்றங் கத்திமாநாகத் தெம்மா
னெம்பதிக் கேகென் றன்னோற் கியம்பினன் கனவிலன்றே. [௱௧]

அக்கன வறியா நீல னத்திமா நாகம் வந்து
மிக்கநும் பகுதி கோடி வேந்தென விசைந்தவ் வூருட்
புக்கநன் னிதிகாணுது புலர்ந்திடக் கனவில் வந்து
சக்கரத் தெந்தை காட்டுந்தனத்தவர்க் குளதளித்தான். [௱௨]

மற்றநன்னிதியு முன்போல் வைணவர்க்களிக்கக்காணு
துற்றிட வழிப்பறிசெய் துதவவவ் வேள்விக்கோர்நாள்
சொற்றெரி விழிதுயின்ற றாயவன் றிருவினோடு
விற்றிரட் பணிபூண் டாற்றின் மேவினன் கிழவோரன்ன. [௱௩]

அன்னவ ரடைய நீல னகமகிழ்ந் தணுகி வல்லே
பொன்னணி பறித்தன் னோர்தம் பொற்கலை விரித்து வைத்து
பன்னக நடித்த பொற்றாட் பவளமெல் விரலின் மிஞ்சி
தன்னைவெள் ளெயிற்றால் வாங்கித் தானைவைத் தெடுக்குங்காலை.

அந்தர மசைபட்டாலு மசைபடா விதனை யோர்ந்து
கந்நுகக் களிறு போல்வான் காய்சினத் தவனை நோக்கி
மந்திர முணர்ந்தாய் கொல்லோ மறைவலா வதையான் றேறத்
தந்திடல் விடுவெனென்னச் சக்கரத் தெந்தை சொல்லும். [௱௫]

வழிப்பறிக் கபடர் மேலாம் வள்ளலிம் மந்திரந்தான்
விழுமிய தநினைவிந்த மென்மலர் வாவியுண்ணீ
முழுகிநாமமு மணிந்துண் மொய்த்தவன் பகலத் தென்னை
தொழுதுபின் வினவிற் சொல்வன் றாய வென்னவு மிசைந்தான்.

மாதவ னடியை வாழ்த்தி வலச்செவி கொடுக்க வன்னோன்
கோத றட்டாக்கரத்தைக் கூறவு மிருளகன்று
போதமுற் றெனையிவ் வாறிற் போந்துனதடிக்காட்செய்த
நாதனே கண்டுகொண்டே னரண னுமமென்றே. [௱௭]

சூடினன் மடிமாங்காயிட் டடியனை வழித்தொண் டாக்குங்
கோடுளாய் மாதரார்தங் கூர்விழி வலையிற் பட்டு
வாடினேன் வாடி யென்றும் வருந்தினேனெனப் பாமாலை
பாடினன் பரமீதென்று பாருளோர் தெளிய மாதோ. [௱௮]

பொன்வரைக் குடுமி மீதூர் புயலெனக் கலுழன்மீது
கன்னியந் துளவினனுங் காட்சிதந் தருளிப் பின்னர்
மன்னுநங் கலிய னென்று நாமமும்வழங்கிச் செல்ல
வின்னவ னுகந்தம் மாயன் பதிதொறு மிறைஞ்ச் வென்றே. [௱௯]

நாடிப்பல் பதிகஞ் சொல்லி நாற்கவிப் புலவனென்று
நீடிய விருது பெற்று நிகழுறும்பொழுது கொன்றை
சூடியின் கழல்சம்பந்த தூதனுங் கொருவன் செல்லா
ஏடவெம் மிறைபோலிந்த விருதனக் கிசையாதென்ன. [௱௰]

கலியனீ தறிந்திவ் வண்ணம் விருதுகொள் கவியின் மிக்க
வலியன தவைக்கண் சென்றியாம் வாதமேபுரிவ மென்று
சொலிவரு மிவனை யன்னோன் றாயனென் றறியானாகி
வெலுவமென் றெண்ணிநீயோர் குறளினை விளம்பென்றானல். ௱௰௧

இந்தவா றுரைப்ப நெஞ்சத் தேதிலாக் கலியனோர்ந்தே
யந்தமா நகர்க்குள் வைகும் வைணவத் தம்மையாரை
யெந்தமக் குமது பூசை யெம்பிரான் றனைநீர்சற்றே
தந்திடு மெனக்கைக் கொண்டச் சார்ங்கனை யெதிரில் வைத்தே.

ஒருகுற ளொன்றெடுத்துப் பதிகமொன் றுரைத்துத் தான்கொள்
விருதுக ளனைத்துங் கூறி வென்றபி னிவனை யன்னோன்
திருவடி வணங்கி நாயேன் செய்பிழை பொறுத்தி யென்று
பருதிமுன் சசியினின்று பரகால னென்று போனன். [௱௰௨]

நாரணன் பதிகடோறு நாடியன் னவனும் வாழ்த்தி
யாரணப் பொருளீ தென்றுள் ளறிந்துபற் பதிகமாக
பாரணு முயிர்கள் செய்யபழவினை யறுத்துய்தற்குக்
காரணமாகச்செய்தான்கலியனுந் தமிழின்மன்னே. [௱௰௪]

## திருப்புளியாழ்வார் (வேறு)

நன்னய துவாபர சயத்தினலி வில்லா
மன்னு மிதுநத்தில்வரு மாசிறிரு மூலம்
பன்னக வரோதய னுகந்துபனி மாலூ
ரின்னறுமலர்ப்புளியுருக்கொடிவனுற்றான். [௱௰௫]

இங்ஙன முரைத்திடுப்ர பந்நர்களிவர்க்கே
யங்கமென வுற்றிடுவ ரண்ணலினிநீயிப்
புங்கவனை நம்புதல்வ னென்று புகலாது
வங்கமவி பவ்வமதி மாயனென வெண்ணீ. [௱௰௬]

கற்றின மறுத்ததோர் கழைத்தலை யிடத்தும்
புற்றரவ மீதும்விழி போதவள ரெந்தை
சிற்றுருவினேரிலிவன் சென்றுத னடிக்காட்
பற்றியநின் பேரினுயர் பாரிலெவ ருள்ளார். [௱௰௭]

வாரிச நிகேதனன் மலைத்தெரிவை பாகன்
ஈரிரு மீறைக்குவடு மின்னு மறியாத
சூரிகள் பராவுமிவன் றொண்டு புரிகின்ற
வாரிய நிறைதுபுக ழாருரை செய்கிற்பார். [௱௰௮]

வெஞ்சமர் கடந்தவிறல் வேந்தென விளம்ப
நெஞ்சிரு ளகன்றுவகை நீள்கடலழுந்தா
வெஞ்சலிலிவன்பர னெனும்வகை தெரிந்தே
வஞ்சலிபுரிந்திறைவ னம்முனி பணிந்தான். [௱௰௯]

இத்தகைமை யுற்றபுக ழெய்துமுதிர் ஞானத்
தத்துவ முனிப்பர னடித்துணை யிறைஞ்சா
நத்தியுல காயசட நாசனென நாமம்
முத்திதருகானரு முதற்கினிதளித்தே. [௱௨௰]

எம்பிறவி வெவ்வலை யிறக்கருணை கூறும்
நம்பியருள் செய்த மொழி நாயினன் மறந்தேன்

வம்புலவு பைந்துளவ மாலையணி மார்பா
கொம்புலவு திந்திரிணி கொண்ட சடகோபா. [௱௨௧]

கண்ணநினை யிவ்வுலகர் காள்முளையினெஞ்சத்
தெண்ணியடியன்பிழை யிழைத்தது பொறுத்தி
விண்ணவிர் திருப்புளி வியந்த பெருமானே
தண்ணளி யெனுங்கட றதும்புசடகோபா [௱௨௨]

என்றுபல வாறுள மியைந்து பணிமாறி
நன்றுபுரி யாதுபவ நாடி நனிசெய்யுந்
தன்றனைய ருயவன் சனித்தவரு ளோரா
நின்றுபு திகைத்துபு நினைந்துபு மகிழ்ந்தே. [௱௨௩]

என்னையுல கோர்பொரு ளெனத்திரு வுளத்தி
லுன்னியருள் வான்வயி றுதித்த பெருமானு
நின்னைமக வென்றபிழை நீபொறு வெனத்தார்
மன்னவ னிரந்துபு மலர்க்கழல் பணிந்தான் [௱௨௪]

அன்னவ னிறைஞ்சலு மருட்கொடளி சூழாத்
தென்னவெனு மாலையன்முன் செய்யு மவதாரந்
தன்னைமுழு தும்மவன் றனதுளம் வியப்பப்
பின்னமி லளித்தனன் பிறப்பினை யறுப்பான். [௱௨௫]

தாறுகொள் மதக்கரி தடிந்தவிறைந்தந்த
வீறிலவ தாரமதி லின்புற வுளங்கண்
மாறில்வகை பற்றவுடன் வாய்புகழ வென்போற்
பேறுறுவ ரார்கொலென வேபெரி துவந்தான். [௱௨௬]

இன்னண நவின்றுவல மெய்தியிம மால்கொண்
மின்னெனு நுடங்கிடை விழிக்கரு விளைப்பூ
கன்னியுட னப்பரன் கழற்றுணைபணிந்தே
நன்னக ரடைந்துநித நாடுவர்தொழற்கே. [௱௨௭]

பதின்மர் திருவரன்முறைப் படல முற்றும்.

---

# நூற்றெட்டுத் திருப்பதிப் படலம்

திருமகிழ் மார்பரங்கன் றிருவடித் துணையதாகு
மருமகிழ் மாலை மாறன் மலர்ப்பதத் தினிதுவாழு
மிருமகி தலத்துளோங்கு மெதிபதி சரணம்போற்றி
யருமகிமைய நூற்றெட்டா மரும்பதிப் படலஞ் சொல்வாம். [க]

குருதிகொப்பளிக்கும் வைவேற் கொற்றவன் றேவிசேரப்
பருதியிற் றிகழு மேனிப் பரமனை யிவ்வாறாகக்
கருதிநித்தமும் போந்தன்னான் கழறொழு தினிய செய்யுட்
டருதவத் திறையை நீகொள் தகையார்பெற்றாரென்றேத்தி. [உ]

அண்டமு மண்டத்துற்ற சராசர மனைத்து மாகும்
புண்டரீகக்கண் ணாழிப் புங்கவன் போந்து போந்திவ்
வெண்டிசை போற்றச் செய்த வெழில்விபவாவதாரந்
தண்டரை யின்றர்ச்சாவதார மாய்விளங்கலாலே. [ங]

அன்னது நிகர்ப்ப நம்பா லடைந்தவதாரஞ் செய்த
பன்னருஞ் சிறப்புற் றோங்கிப் பரமனு மிவ்வாறாவா
னென்னமண்டலங்கள் காக்கு மெழின்முடி மன்னர்போந்தே
சென்னிதாழ்ந் திறைஞ்சும் வேந்தன் றிருவுளத் தெண்ணினின்றே.

பொன்னனக ரிமையோர் போற்றப் பொலிந்துநின் றருளுமாதி
சினகரத்தினுக்குத் தெற்கிற் றிகழ்திருப் புளியின்கீழ்பா
லனகாற் புளத்து வாழு மனையமாறனுக்குக் கோயில்
கனக ரத்தினத்தினாலே கவின்பெற வமைத்துப் பின்னர். [ரு]

சங்கராசனுக்கு முத்தித் தலமுகந் தளித்தவாதிப்
புங்கவன் மிக்கவாதிப் புனிதன் றன்பாற் றனது
தங்குநீர் வளங்கொண்டோங்குந் தரையெழி னகராங்குள்ள
மங்கல நிதிபூண் மற்றும் வளமெலா முகந்துநல்கி. [சா]

பாட்டளி துதைந்து பாடும் பனிவளர் வகுளத் தெம்மான்
றாட்டுணை கருதியன்னோன் றழைவிழிக் கருணையாலே
வாட்டடங் கண்ணணங்கை மாதொடுஞ் சின்னாளீங்கு
வேட்டனன் வைகி வேந்தன் விளம்பரும் பதியிற்சேர்ந்தான். [எ]

அனையவ ரிவ்வாறாக வணிபெருஞ் சுடர்கொள் மேனி
புனைதரும் வருளத் தெம்மான் பொற்றிரு வடித்துணைக்கே
தனைநிகர் மதுரச் செய்யுட் டவப்பிரான் பலவாறாய
நினைவரு மடிமைசெய்யா நின்றுமுன் னினைய சொல்வான். [அ]

எளியனு மடியேற் கின்று வுதிதபுரு டார்த்த தத்வங்
களைவிளக் குறுவிசேடார்த் தங்களை யெல்லாங் கைசே
ருளமயக் கறவே யுள்ள முகந்துரைத் தருடி யென்றே
வளமலர்க் கரங்கள் கூப்பி வணங்கினன் வழங்கினானால். [௯]

இன்னணம் பரமன் முன்ன ரிசைத்தன னிற்குங்காலை
துன்னுமெய்ஞ்ஞான நித்ய சூரிகடமக்கிலாது
பின்னெவர்களுக்கு மெட்டாப் பேறரித் தாகியோங்குந்
தன்னிக ரில்லாவைகுந் தத்தினிற் பொலிந்துவாழும். [௰]

திருவினாயக னெண்போதின் செல்வனன் றிட்டசாப
மிருவிநாயகன் றுதைக்கன் றீர்த்தவன் கமலபாத
மருவினைய கருவோட்டி வானகந் தளிக்குமெம்மான்
பொருவினாயக மாறற்குப் புகழ்ந்தெதிர் விழிகொடுப்பான். [௰௧]

கருத்தினிற் கருதாமுன்னர்க் கலுழனுமுன்னர்த்தோன்ற
வெருத்தமீ தவரின் மமன்மா திருநில மாது நீளை
யருத்தியி னுடன்வந் தேற வயிர்பொலன் கிரியின்மீது
கருத்ததோர்வெற் புவந்து கலந்தெனத் திகழத்தோன்றி. [௰௨]

இருமருங் கினிது வாழு மிந்திரை முதலாமூவர்
கருவிழி யெனுங்கார் வண்டின் கண்முக மலரின்வீழப்
பொருதயிற் றிகிரி யாதி பூங்கரத் தடக்குந்துய்ய
செருவிகற் படைகளேந்து முறைமுறை திகழ்மின்காட்ட. [௰௩]

அங்கையிற் பிரம்பொன் றேந்தி யண்டாண்ட முழுதுங் காக்கும்
பொங்கருட் சேனைநாதன் புகழ்ந்தனன் முன்னரேகந்
துங்கவில் வினைதீர் நித்ய சூரிகள் நெருக்கிப்பக்க
மெங்கினுஞ் சூழ்ந்து சென்னி யெழிற்கா முகிழ்த்தாராகி. [௰௪]

பாயிர மறைகளுன்கும் பாடுறப் பலர்கள் சில்லோ
ராயிர நாமங் கூறி யடியினை பணிந்தாரேந்த
தூயவர் சிலர்ப்ர தாபஞ் சொல்லியங் கரமுகிழ்ந்தா
ராயவண் வெகுபராக்கென் றன்னவ ரெழுச்சிகூர. [௰௫]

வேறு

தாணுவய னேமுதலர் காணரிய மாயன் றனக்குவிழி யிற்றுறு
மெனத்தமது ளத்தே) [மங்கள முரைப்பச்
பூணரிய சங்கைகொடு மாணுறுமநேகர் பொங்குபல வாழியொடு
சேணிமிரு வெண்மதியின் வாணில வெறிக்குஞ் சித்திர மிழைத்தபல
சத்திர மெடுத்தே) [யினிழற்றினர்கள் செல்ல
யேணுடைய சிற்சிலர்க ணீணசையி ளெடு மெழிற்றிருவொண் மேனி

ஆமவர்க ளிற்சிலர்க டேமருவுமென்பூ வாசறும் ஞசையுறு தூசி
ளெடு சுண்ணம்) [போதவு மிரட்டுங்
பூமருவு மங்கைகொட மாமணமும் வீசப் போதமிக வுற்றசிலர்
காமரொணி லாவுலவு சாமரைக ளன்னுன் காயமெனு மார்கலியின்
மேயகவினங்கத்) [மேவோதிமநிகர்ப்ப
தாமரையை நாடிவரு கோமள மிகும்புட் சாதியி னுயர்ந்தபல

மந்தவிள மாருத மிகுந்தடைய வால வட்டமல ரங்கைகொடு
சிட்டர்பலர்வீச) [வொண் விசுத்த விருதுக்க
விந்தையுறு பற்பலர்கள் சிந்தைமகிழ் வோடும் விசித்திர விநோத
ளந்தமற வங்கைகொடு முந்தினர் நடப்ப வற்புத மிகுந்தணிய
பொற்புலவுமின்ன) [தளர்கண் முன்னுறநடப்ப
ரெந்தையி னருங்குண முகந்தினி துரைத்தே யின்னிசை யிசைத்

அண்டபகி ரண்டமுழு துண்டவிவற வந்தா னக்கனய னுக்கரிய
விக்கிரமன் வந்தான்) [தானுக வுற்றவ னடைந்தான்
முண்டகமின் மார்பினிடை கொண்டபரன் வந்தான் முற்றுமுயிர்
பண்டைமறை நாலினிலுங் கண்டறிய கில்லாப் பராதீன மற்றிலகு
புராதன னெழுந்தா) [பல நற்சின நவின்றன கறங்க
னெண்டிசையு மண்டிசைகொள் கொண்டல்வணன் வந்தா னென்று

ஆடக மணிக்குழைகள் பாடலை தரப்பொன் னரத்தவொ ணரிப்பரி
புரத்தொலி கறங்க) [மேன்மையி னடப்ப
பாடக வடித்துணையி ஞடக நடித்தே பான்மொழியர் சிற்சிலர்கண்
மாடக முடித்தநிரை நாடிய முழக்கோ மாறரிய கோடையிடி
யேறதுகொலென்றே) [கறங்க
நீடக மயிர்ப்புறவே கோடணிய காள நிகழ்த்தரிய பல்லிய மிகுத்தன

இன்னன வளங்களய றன்னின நடப்ப வெங்கினு நிறைந்துறையு
மங்கள முகுந்தன்) [கொங்கை யயிராணி
பன்னக முடித்தலய னின்னலொழி யெம்மான் பங்கய வரும்பணைய

மன்னவன் முதற்சுரர்க டன்னடி வணங்க வந்தருள் புரிந்தவ
னெழுந்தனன் விரைந்தே) [ரந்தா நிறைந்தான்
தன்னிகராயசுட ரென்னவொளி பொங்கிச் சந்தமுறு மாறனெதி

வாரண மளித்தருளு நாரணனிவ் வாறு வானக மிசைப்பொலிய
வானகு மகிழ்ப்பூந்) [துன்னுவினை தீர்ப்பான்
தாரணியு மார்பனிசை தாரணி யுயர்ந்தோன் றன்னடி வணங்குமவர்
சீரணிய பொற்கமல வேரணிப கண்க டிறந்துவகை நீர்மடை திறந்
தொழுக நில்வா) [முகிழ்த்தன னுவந்தே
னேரணவு குஞ்சிமிசை யாரமலரங்கை நிகழ்த்தரிய வன்பொடு

வேறு

செங்கவி னுறுபைங் கமலம்வீற் றிருக்குந் திருமக ணாயக னெம்மான்
சங்குடன் பதும விரேகைகள் பரந்து தாமரை மலரொடு மிகலிப்
பொங்குமெய் யுளவன் பொடுதொழு மவர்கள் பொருந்துவெம்
[பவப்பிணி மருந்தா
யங்கண்மாஞால மகலிரு விசும்பு மளந்தபொற் றிருவடித் துணையும்

வேறு

வானகத் தவிருஞ் செக்கரை யனைய வயங்குமாற் றுயர்ந்தொ
ளிர் பசும்பொன்
னனநற் கலையை நன்மருங் கலைப்ப வணிந்தெழி லுறுதிரு வரையு
மூனமி லொருநான் முகத்தனை யளிக்கு மொளிகொள்பைங் கமல
முன் னளித்த
கானகு மலரிற் புடைபரந் தகன்று கவினுறு நாபிநற் றலமும் [உச]

அழிவுறு முடிவி லெண்ணிலண் டாண்ட மதனுள சராசரத் தொகை
கண்) [மும்
முழுமையு நெருங்கி யடங்குறு மிடமா மொய்யொளி யுதரபந்தன
வழுவறுஞ் சரச வீட்டர சுகந்த மாணிழை மடந்தையுள் ளுகந்தெப்
பொழுதுமுள் வதியு மஞ்சன வரையிற் பொற்புறு மார்பின கிட
மும் [உரு]

அத்திரு மருமத் தற்றினி திவகு மணியபொன் முப்புரி யிழையும்
நத்திவண் மனங்க ளிணைந்திசை முரன்று நறைத்துளி யுண்டடை
கிடக்கப்) [யணியு
பத்தெனுந் திசையு மணம்புகுந் தொளிரப் பரவுவண் டிருத்துழா
மத்தியி னிலகுங் கௌஸ்துவ மணியும் வற்சமென் றுரைதிரு
மருவும் [உசா]

ஒன்னல ருதிர மலகையுண் டுவப்ப வுதவிய திகிரியை முதலா
மன்னுமைம் படைக டாங்கினன் கமல மலரெனச் சிவந்தொளிர் கரமு
மின்னொளி கதுவு மங்கத மணிந்து வெற்பிரு நான்கொடு மிகலிப்
பொன்னக ருவப்பப் புணரிமுன் கடைந்து பொற்புறு மீரிரு
புயமும் [உஎ]

அண்டமுண் டுகந்த கண்டமுங் கரந்தன் றாய்ச்சியர் மத்தலை தயிர்
பா) [சிவப்புட்
லுண்டுவிண் டிலகு முண்டக மலரி னொளிர்ந்தனி யரக்கெனச்
கொண்டுகண் டவர்கண் கவர்ந்திடு வாயுங் கோமள மிகுந்தகன் றரு
[ளுண்
மண்டுசெங் கமல மலரினுக் கிணைசெவ் வரிபரந் துயர்ந்தகணிணையும்
வாமவிற் புருவத் துணையும்வெண் பிறையின் மலிந்தகன் னுதற்றி
கழ் நான) [மதியிற்
காமமுங் கமல மலரெனப் பொலிந்து கவையிலா வட்டவொண்
றாமலி கவினுற் றிலகு மாநகமுந் துன்றிய கதிர்மணி முடியு
நீமநற் பசிய மரகத மலையை நிகர்த்தில கருந்திரு வுருவும் [உ௯]

இருமருங் கினுமஞ் சலிபுரிந் தனர்வீற் றிருந்தரு ளினியசொற்
[கனிவாய்த்
திருமகண் முதலா மூவர்தங் கனகந் திகழுசுந் தரமு மன்னவர்தம்
பெருகிய வணியின் விநோதமு நிமலன் பிழையறு குணத்தினி
தியல்பும்) [கா
பொருவரும் வகுள பூடண னுகந்து புகழ்ந்தனன் கண்டுகண்டுரு

இவ்வண மாநந் தத்துட னிமல னெண்ணிறிவ் யாத்தும ஸ்வரூப
திவ்யமங் களவிக்கிரக திவ்ய தேவிபூட ணாயுததிவ்ய [மம்மா
வெவ்வமில் குணசேட் டிதங்களை யுமுளஞ் சிறந்தது பவித்துந
னவ்வது பவத்தை வெளியிடுஞ் சர்வ வாரணத் தந்தசாரமதாம்

அருந்தகைய திருமந்திரார்த் தத்தை யடக்கிநால் வேதசாரமதாந்
துரிதமி லீரிரண்டுப்ர பந்தந் தொடர்பினுல் விளக்கிட மனத்துட்
கருதுமு னனைய மாறனுக்குகந்து கருணையிற் சேவை சாதிப்பான்
றிருவளர் நித்ய சூரிக ளெவருஞ் சென்றனர் திருப்புளி மருங்கே

வேறு

இருவினைத்தொட ரின்செய லற்றுயர்
திருவு றக்கடை சென்றவ ருமிவ்வூர்

வருத லுற்றன ராயினம் மன்னகர்
பெருகு சீரெவர் பேசுந் தகையரே [ருரு]

அந்த நித்திய சூரிக ளன்னவே
யிந்த மானிலத் தேய்பதி தோறும்வாழ்
கந்த மார்வுனக் கண்ணிகொள் யாவரும்
வந்து சேவை வழங்கிட லாயினர் [ருச]

வேறு

பெருவரங்கள் கருதுமன்பர் பெறவழங்கு வகுளநங்
குருவரங்கொள் கவியிலன்பு கொடுவவண் முனரனய
னிருவரங்க ளமுதமண்டி யெழுகுபொன்னி வலம் வருந்
திருவரங்க நகருறங்கு திருவரங்க னெய்தினன். [ருரு]

வேறு

மருவருநூ றிதட்கமல மன்னிகர்மா றன்றருவின்
மருவருநூ லினிதுணர்வான் வந்தனனன் றனெதிரே
திருவுறையூ ரியறுளவந் திகழ்ந்தலையு மணிமார்பத்
திருவுறையூ ரெனும்பதியிற் சிறந்துறையு மின்றயோனும் [ருசு]

வேறு

கருத்தஞ்ச வானே ருருக்கும்பொ னுமன் கணத்தின்மு னேதுஞ்ச
வே) [சேர்
வருத்தஞ்செய் மாய னருக்கன்குலாவு மணிப்பொன்னின் மாடங்கள்
திருத்தஞ்சை யாய நகர்க்கண்ண மாலுஞ் சிறைப்புள்ளின் மேனடி
னு) [கேயன்முனே
னிருத்தஞ்செ யாகன் றமிழ்ச்செஞ்சொன் மாறன் றமர்க்கன்பர்

வேறு
அருவன் பிலியா மரவின் றலைமேற்
பெருவன் பினிது டியகம் பெருமான்
திருவன் பிலில்வாழ் தேவு முவண
வொருவன பிடர்மே லுற்றுனிவனே. [ருஅ]

வேறு
கருக்க ரும்படர் கண்ட னுதிதே
வருக்க ரம்பட வாண னுயிரங்
குருக்க ரம்பக லாழி கொண்டரி
திருக்க ரம்பனூர்த் தேவு மெய்தினன். [ருகூ]

வேறு
புள்ளறை யும்பொழில் பொன்மதில் வானை
நள்ளறை கூவவி னுடைய வெனவாம்

வெள்ளறை மாயனு மேவின னம்பொற்
கள்ளறை வந்த கருங்குழ லோடு. [௪ம]

வேறு

பொருப்புள்ளம் பூதப் படையாற்கெட் டாதென்றும் போற்றடியார்
விருப்புள்ளம் பூதல மாதின் விளங்கவி ஞர்முகமாந்
திருப்புள்ளம் பூதங் குடிவிற் றிகழ்ராம னும்பொழிலிற்
கருப்புள்ளம் தங்குரு கைம்மாறற் கிந்தனன் காட்சியதே. [௪க]

வேறு

திருப்பே ரொருக்கா னினைப்போர் திருக்கே திரித்தாண்மகிழ்
மருப்பே ரளித்தா ருடைக்கோ னெதிர்க்கே வரத்தேறினன்
திருப்பேர் நகர்க்கோ ரிறைச்சேர் தடத்தே திகைத்தேயழை
மருப்பேர் கரித்தோ மொழித்தா னிருக்கே வழுத்தாதியே. [௪உ]

வேறு

மருவாத வல்வினை மாறருளாத்
திருவாத வனேரணி கொண்டவன்முன்
திருவாதனூர் மேவிய சீதரனும்
பெருவாதமோடு பிறங்கினனால். [௪௩]

வேறு

செருவழுந் திறலுடைய ராகிடுந் தீயபிணி
மருவழுந் திடவவுணர் வளைதிரித் தெறியுமணி
திருவழுந் தூரிறையு மேயினன் செய்யமகிழ்
மருவழுந் தியவணிகொண் மார்பினன் முனரரோ. [௪௪]

வேறு

தருச்சினை மலராற் செய்ய தாட்டுணை மலரின் மீதே
யருச்சனை புரிந்து வானோ ரகமகிழ்ந் திறைஞ்சி யேகத்
திருச்சிறு புலியூர் வாழுந் தேவனெம் பெருமான் றானு
முருச்சிறைப் புட்பான் மாறற் குதவினன் சேவை மன்னோ. [௪ரு]

வேறு

கூறை யாகத் துதைந்தெழு தீயவர்க்
கீறை யாக்கி யிருந்தவ னுந்திருச்
சேறை யாயனுஞ் சென்றன னந்தமிழ்
வீறை யாரும் விமலன் றிருமுனம். [௪௬]

வேறு

உருத்த லெச்சங் கம்புகியே வொன்று மெரித்தாக்கர்
கருத்த லெச்சங் கவர்திறலைக் கண்டனஞ்செய் தினிதுகந்த

திருத்த லேச்சங் கநாண்மதியத் தேவர்பிரா னும்மடைந்தான்
குருத்த லேச்சங் கப்புலவோர் கொண்டசெருக் கடர்ப்பான்முன்.

வேறு

சீர்திருக் குடந்தை மானகர்க் கமர்ந்த தேவனற் புளென்றவாகன
வூர்திருக் குடந்தை யோர்கணத் தின்முன ரோகையுற்றெழுந்து நாடினன்) [ரிடை
பார்திருக் குடந்தை யானவர் கருதும்பராங்குசற் குறுண் மைசே
வார்திருக் குடந்தை மாதனத் துநங் கைவாழ்வினுக் குகந்துமுன் னரோ. [சஅ]

வேறு தருக்கண்டி யானையிடர் தந்துகன் மடந்தை
யுருக்கண்டி யாரதிவ ளோதுமுனி யென்ற
திருக்கண்டி யூரிலுறை தேவனு முகந்தெங்
கருக்கண்டி மாறனுயர் கண்முன மடைந்தான். [சகூ]

மண்ணகமு றும்வினைவ ரைந்தருளு மாறன்
கண்ணகமுன் னண்ணினன கங்களி சிறப்ப
விண்ணகர மெண்ணறிரு விண்ணகர நண்ணுந்
தண்ணகமலம்புரை தடங்கணிறை யோனும் [ருய]

வேறு

கருதிருக் கண்ணறனை நிலவுயிர்க் கங்கையுறு கனியெனத்தந்த மகிழ்தேன்) [கமலநே
றருதிருக் கண்ணிபுனை யளிபுயத் தெங்தையெழு தளவிரைச் செங்
ரிருதிருக் கண்ணவுயர் கருடனற் கந்தரமு ளிசைகரப் பொன்னி [நெடுசென்
றொருதிருக் கண்ணபுர வளநகர்க் கண்ணவனு முயர்புளிக் கண் [மருவினன். [ருக]

வேறு அருவாலில் வளர்ந்தொ ணடிப்பொடியா
னுருவா லிகைதற் குதவுற் றெணிலாக்
குருவா லிபர் தங்கள் குழாமலியுந்
திருவாலி வாழ்தேவனுஞ் சென்றனனால். [ருஉ]

வேறு பாகை யினிப்படு பான்மொழி மின்னு
ரோகை யின்மாளிகை யும்பரு லாவ
வாகையின் மின்னென லாடும் வளங்கொள்
நாகையி னுதனு நாடின னம்மா. [ருங]

மறையூ டுவதிந் தருளெம் பெருமா
னறையூ ருறைநம் பியுமெய்தினனாற்
நிறையூ கமனேரலருக் கயிலிற்
கறையூறிய காரிகுலச் சுதன்முன். [௫௪]

வேறு

வெந்திற லூறுந்திகிரி நந்துவி லருங்கதை விளங்கு வடிவாள்
சந்தம லரங்கைக டயங்கமரு வண்டுமுர றண்டுளவமுஞ்
செந்திரு மடந்தையு முரந்தனில் வயங்கநொடி சென்றனனரோ
நந்திபுர விண்ணகர வெந்தையுமினங்கையரு கந்தனெதிரே. [௫௫]

வேறு அருவிந்தள மளிபாடுசெ் யடருங்களை கடியு
மிருவிந்தள முலையார்மர்ரை யெழில்செந்துவர் குவளை
வருவிந்தன முகம்வாய்விழி யெனவேகரை மருவுந்
திருவிந்தளூ ருறைமாயனுஞ் சென்றா னவன்முனமே.

வேறு

குருச்சித் திரமா ளிகைமிசையே கொண்டல் வந்து கண்படுக்குந்
திருச்சித் திரகூ டத்தமர்ந்த சீமா னும்போந் தான்மலரா
லருச்சித் திரவெ ணீங்காத வன்பர் கொண்ட வெவ்வினையை
வருச்சித் திரங்கு நங்கோனும் வகுளாபரணன் றிருமுன்னர். ௫௭

வேறு காரா பணிச்சுனை கலக்க முகைவிண்டே
வாரா மதுத்தளி மலர்த்தவி சுகந்த
தாரா படுத்தண தழைத்திடு வளஞ்சேர்
சீராம விண்ணகரச் சீதரனுமுற்றான். [௫அ]

வேறு

ஏட லார்குழ னங்கை தன்சுத னெந்தையஞ்சட கோபனின்
பாட லார்தமி ழாசையான்மிகு பரிவதோடுமுன் மருவினா
னூட லாருர காசனன்பிட ராரவேறியே நேரிலாக்
கூட லூரெனு மாவளப்பதி கொண்டவன் றுயர்விண்டவன். [௫௯]

வேறு வண்ணங் குலையா தமடந் தையர்மா
றிண்ணங் குலையன் பர்செருக் கருவா
னெண்ணங் குடியா னுமுனெய் தினனாற்
கண்ணங் குடிநின்று கக்ப் பிடர்மேல். [௬0]

வேறு

வண்ண மங்கல மாமலர் மேவிய வெள்ளையன்ன விராசிக ளாதவ
மன்னவெஞ்சமர் வேளையி லேமறை மாயோனின்

றண்ண மங்கையி னுமயவால்வளை யென்னநன்கணி யோடுமுலாவிடு
தங்குபல்வள நீள்பணை சூழ்தரு தாரார்சீர்க்
கண்ண மங்கையி னேங்கையினேடுறை யன்பர் தங்களி னுவியுமேவன
கன்கணண்ணபி டேகமனுளொடு கானூரும்
விண்ண மங்கைகு லாவிய காவின மன்னுமங்குரு காபுரிமாறனின்
மென்கண்முன்னணி சேவைதராபுளின் மேலானன். [௬௧]

வேறு
உருக்கவித் தலத்துளோடு மும்பரு நடுங்கவே
செருக்கவித் தலங்கைமன் செருக்கழித்த வாதியாங்
திருக்கவித் தலத்துகந்த தேவுமெய்தி னனம
தருக்கவித் தலங்கெடுத்த தன்னிகர்க்கு மாறன்முன்.

வேறு
வள்ளி யங்குழை யின்சொன் மடந்தையர்
கள்ளி யங்குங் கவின்குரு காரின்முன்
பள்ள யங்குடி கொண்ட பரவைசெய்
வெள்ளி யங்குடி மாயனு மேவினன். [௬௩]

வேறு

அணிமாடத் திடையிருந்த லேம்பால்கொண் மாதர்செயுந்
திணிமாட கத்தியாழ்ப்பண் செவியின்மடுத் தசுணமெலா
நணிமாட கத்துலவு நாரியர்கண் டினிதுவக்கு
மணிமாடக் கோயிலுறை மாமகனுதனுமடைந்தான். [௬௪]

வேறு
நந்தமர் முன்கை மின்னிடை மாதர் நடைகண்டே
வந்துறை யும்ப லஞ்சம னத்தே வட்கிப்போம்
விந்தைவைகுந்த விண்ணகரத்தே விளைவோடா
ரந்தமி லானு மிந்திரை யோடடைந்தானல். [௬௫]

வேறு

வரிமேய விளமுசுவு முழவோர் கண்டார் வளைகொடெறி தரவது
தென் மரமேறுவெண்) [கவின்கொண்பாட
கரிமேய விண்ணகர மிசையிற் றுவிக் கற்பகக்கா வூடொளியுங்
லரிமேய விண்ணகரத் திறையும் போந்தா னன்பர்குழா மிடுபதக
[மாகும்பாரப்
பரிமேய விறையளவுஞ் சகியாநம்ப ராங்குசன்நன் குரைசெய்தமிழ்
[பரிந்துளோர்வான். [௬௬]

வேறு
ஆவ னூர்தொக லார்மன வன்பர்தங்
காவ னூர்தொடு கண்ணி மகிழன்முன்

மாவ ணூர்தொகை யுற்றும கிழ்ந்துவாழ்
தேவ ஞூர்தொகைச் செல்வனு மெய்தினன். [கூஎ]

வேறு

வருடோத்தவ மாதோத்தவ மகிழ்வோடுசெ யதுவிண்
வருடோத்தரம் புரியப்பசு மலையிற்றிகழுறுவண்
புருடோத்தம மெனவேயுரை பொருவின்னக ரிடைவாழ்
புருடோத்தம னுஞ்சென்றனன் பொலிவா ருவணத்தே [கூஅ]

வேறு

பம்புசெங் கதிரோன் றன்னைப் பாயிரு ளனைத்து மொன்றி
வம்பற வுறவு செய்வான் வருந்தகை யனைய மாற
னம்பொன்செ யுருவந் தாங்கு மமலனின் றிருமுன் பாகச்
செம்பொன்செய் கோயில் வாழுந் திருவிணயகனும் போந்தான்.

வேறு

வெற்றி யம்பலத் தாடும் விளங்கனல்
கெற்றி யம்பலர் நேர்சடை யாற்கருள்
பெற்றி யம்பலரும்பரன் பேரருட்
டெற்றி யம்பலத் தேவனு மெய்தினன். [எ0]

வேறு

அருமணிக் கூட லுற்றவிர்தரத் துடைய நங்கைக்
கொருமணிக் கூடற் சங்க மொழிப்பவ னுரைநூ லோர்வான்
பெருமணிக் கூடத் தோடும் பிறங்குமாடங்களோங்குந்
திருமணிக் கூடத் தானுஞ் சென்றனன் கடிதினம்மா. [எக]

வேறு

நெருக்கா வளவில் நிரைமேய்த்து நேர்ந்தங் கிகலுந் தீயோரைக்
கருக்கா வளவிற் சென்றுயர் கன்னி மாரோ டினிதாடும்
திருக்கா வளம்பாடிக்குறையுஞ் செங்கட் டிருமாலும்போந்தான்
பெருக்கா வளமார் தென்குருகைப் பெருமான் வகுளப் பரன்
முன்னே. [எஉ]

வேறு

எள்ளக் குளத்தினை யினித்தசொ லரும்பிக்
குள்ளக் குளத்தியர் குருடேந்திடவரால்கள்
பள்ளக் குளத்திடை பரந்துயர் குதிக்கும்
வெள்ளக் குளத்திலுறை மெய்யனு மடைந்தான். [எங]

வேறு

சுருப்பார்த் தலம்புபொழில் சூழ்குருகை மாறன்பால்
விருப்பார்த் தநெஞ்சடியார் வெவ்வினைதீர்ப் பான்முன்னர்
மருப்பார்த் ததண்டுளவ மாலையணி மார்பிலங்கத்
திருப்பார்த்தன் பள்ளியுறை தேவபிரா னும்மடைந்தான். [௭௪]

வேறு

இருமா னிலம்பரவு மகிழ்மார்ப னின்வாயி லினிதாயெழு
மொருமா வளங்கொள்கவி பெறவேணு மென்றேகி யுயர்மேவுதண்
முருகா ரரும்புவிரி புளிமேவி னன்கரிய முகின்மேருவின்
வருமாறுபுண்மீது திருமா லிருஞ்சோலை வளர்மாயனே. [௭௫]

வேறு

சினத்திருக்கோட் டிபமலற மருப்பொசித்த திருக்கரன்ற னடிபர
வுந் திறத்தினோருண்) [மகளுகந்த வரைநேர்மார்பன்
மனத்திருக்கோட் டிடுங்கருணை வரதன்செய்ய மரைத்திருமா
முனத்திருக்கோட் டினையுறுவெற் பெடுத்தானுய்ய முகிறடுத்தோன்
[பழமறைதேர் முதுவோர்வாழுந்
தனத்திருக்கோட் டியெனுமணி நகர்வாழெந்தைசௌமிய
[நாராயணனுஞ் சார்ந்தான் மன்னோ. [௭௬]

வேறு

வையமுழு மாருயிர்கள் செய்யும்வினை யோடியுயர் வானி லடையா
வுய்யும்வகை யாகவரு மய்யனருண் மாறனுரை யொன்று பெறவே
பையரவ மீதுதுயின் மையவரி மூசியடர் பாசொளிது ழாய்
மெய்யமலை யாளனிவண் செய்யமலர் மாதினொடு மேவினனரோ.

வேறு

செல்லாரு மாறுறுவ ரெல்லாரு மேபரவு தீந்தாமமார்
சல்லாப மாறனுரை யில்லார்வ மொடுகட னூன்றீயவெய்
வில்லாளி யேழிடப மல்லோடு காயும்வலி வேந்தாகுமெம்
புல்லாணி மாயவனும் மல்லாரு மோதியொடு போந்தனரோ. [௭௮]

வேறு

எருத்தண லமரர் யாரு மியாங்களுஞ் சீவித்தற்கெங்
கருத்தண்கா வெனநின் றேத்தக் கருணைகூர்ந் தருளினனை
மருத்தண்கா வுகுசெந் தேனுல் வானுற வளருஞ் செந்நெற்
றிருத்தண்கா னுறையு மம்பொற் றிருமகட் கிறைவந்தானல். [௭௯]

கருமாமுகி லுருவாபொழி கருணைப்பெரு மழையாய்
திருமாமகள கணவாவென வேதந்தமிழ் செய்யும்
பெருமான்பர வடியாயொளிர் பேராயிர முறுமெம்
மொருமாமணி முதலேயென வுருகும்வயி னவணே [ரு]

வாதம்புரி சங்கத்தொரு வல்லோனதை வினவா
வேதந்தமிழ் செய்தோனென விருதோதினை யவனு
லோதுங்கவி சங்கத்தின மொவ்வாவகை யறியா
தேதிங்கன முரையாடினை யினிநீவிடு கென்றான் [சு]

அப்பத்தனின் செவிவாய்சுடு மழனேரது படியச்
செப்பற்கவ னடல்வெந்துயர் செறிவாரிதி முழுகி
வைப்பிற்றிக ழணிபற்பல வளமாநிதி நிறைவுற்
றொப்பற்றொளிர் குருகாபுரி யொல்லைப்பொழு துற்றே [எ]

செங்கட்பிடி நடைநுண்டுடி சிவணும்மிடை யுடைய
நங்கைக்கரு மகனாகிய நாவீறனை யடையா
வெங்கட்கரு முதலீரிரு வெழுதாமுறை முழுது
மங்கட்படியறியத்தமிழதனிற்றருமழகா [அ]

ஒதிபாண்டனுக் கருள்வானவன் சிறுகூறையி லுறைமால்
பதிதோறும டியன்மேவுபு பரிவாலடி தொழுதேர்
மதுராபுரி யடையாவவண் மாலைத்தமிழ் மறையாற்
றுதிசெய்யுளி யகமேவிய தூர்த்தன்பிற வாதி [கூ]

உன்னானுரை கவியென்றிறை யுன்னாதனை யிழிவு
சொன்னானென வவணிற்றிடு துயர்சேர்மொழி யுரையா
மன்னாவினி யவனெவ்விடம் வகையேயரு ளிலையே
லென்னாவிகொ ளெனமாறனி னெதிரிற்படுத் தனனால் [ய]

வேறு

உண்ணலோ டுறக்கமற்றுங் கொருவன்ப்ரா யோபவேசம்
பண்ணின வகையுமோர்ந்து பராங்குச னுவகை பூத்துத்
துண்ணெனச் சிச்சனும மதுரகவி யழைத்த வ்வன்ப
னெண்ணம தனைத்து மோதி யெழுதினன் னிருபமம்மா [யக]

கரைந்துள முருகுங் கண்ணைன் கழலிணை யெனுமோர் பாவை
விரைந்தொரு முடங்க லாக்கி மதுரைபோ யிலைதைச் சங்கத்

தரங்கநீர்ப் பலகை வைக்கிற் றூழூவ ரன்னோ ரென்றிவ்
வுரங்கொ ணெஞ் சவன்பா னீபோ யுணர்த்தெ னவளித்து
ரைத்தான் [௰௨]

செல்லடர் புளிகொண் மாறன் றிருமுக முனிகொண் டந்த
நல்லறி வாள னேக்கி நனிமகிழ்ந் தெழூப்பி மாறன்
சொல்லிய தனைத்து மோதித் துதித்திட வவனும் போற்றி
வல்லையின் மதுரை சென்றான் மலிகதிர் கடலுட் சென்றான்

தோட்டடர்ந் தளிமூரன்று துன்னுதார் மகிழ்கொண் மார்பன்
பாட்டுற நிருபங் கொண்ட பாகத னறிய வெய்ய
கோட்டமார் மனத்துச் சங்கக் குழூஉக்களின் கருத்தீ தென்று
காட்டுவா னெழுந்த தன்ன காரிருட் படர்ந்த தன்றே [௰௪]

அன்றிர வவனே ரில்லத் தந்தணன் றுயின்று நீங்கத்
துன்றுசங் கத்தோர் நெஞ்சஞ் சூறிருட் பிழம்பிப் பாவா
மென்றிரு லறமென் றேமுன் னியம்புவா னெழுந்த தன்ன
குன்றிலாக் கதிரோன் றுய்ய குணபுலத் தெழுந்தானன்றே

கொங்கலர் நறவு காலுங் குளிர்மலர் வாவி யாய
வங்கடைந் தெமது பெம்மா னாரணந் தமிழாய்ச் செய்தோன்
பொங்குபா மகிமை காண்பான் புலவரீர் நீங்கள் வைகுஞ்
சங்கமாம் பலகை தன்னிற் சற்றிடங் கொடுப்பீ ரென்றான்

அன்னதை வினவா வன்னோ ரந்தணன் சிறுசுருட்கு
மின்னுமப் பலகை யிற்றும் விலகிச்சற் றிடங்கொடுக்க
மன்னுவ் வேத நாவன் வகுளபூ டணனை நெஞ்ச
முன்னியம் முடங்க றன்னை முடியினின் றிருகை யேந்தி

ஆங்குறு புலவ ராய ரஜோகுணத் தவர்க ளேக்கப்
பாங்குட னிருத்தச் சங்கப் பலகையு மூவகை பூத்துத்
தாங்கிமீ தரும மும்மைத் தமிழுறு குழூஉக்கண் முற்றும்
வீங்குநீ ரதனுள் வல்லை விழும்படி சுருங்கிற் றன்றே [௰அ]

புடத்தில்வைத் தெடுக்கக் கட்டைப் பொன்னுமாற் றதிக மா
றடத்துவீழ்த் தோலை தன்னாற் றம்முள மலமு நீங்கி [போற்
விடக்கரு தாமுன் புன்மை விளம்புநா வூமை யாகி
யிடக்கரற் றறிவு மீக்கொண் டெய்தினர் கரைமீ தன்றே [௰௯]

வந்தனர் வகுள மார்பன் வரைந்திடு திருபஞ் சென்னி
நந்துத லின்றிச் சூடி நாமெனு மகங்கா ரத்தின்
பந்தன முண்டு நாயேம் பரிபவப் பட்டோ மின்றியா
முய்ந்தன மென்று தம்முள் ளுன்னுபு வணங்கிப் பின்னர்

மைப்படி மேனி செந்தா மரைவிழி மாலே வந்தே
ரிப்படி தன்னின் மாற னெனவவ தரித்த நங்க
ளப்பன தடியிற் றுஞ்செய் யபராத க்ஷமைசெய் வான்சங்
கப்புல வோர்கண் முற்றுங் கருத்துற முன்னி மன்னோ [உக]

சிந்துகு மூலகிற் காரி சிறுவனல் விடுக்க வந்த
வந்தண னுபய பாத மன்பொடு பராவி யன்னோன்
முந்துற நடக்கப் பின்னே முடுகியவ் வூமை யானோர்
சந்தனப் பொதும்பர் சூழ்தென் குருகையிற் சார்ந்தா ரன்றே

சிற்றிழை நுசுப்பு நங்கை திருவயி றுதித்த செல்வன்
பொற்றளி வலம தாகப் போந்தவன் முன்னே சென்று
கற்றிலே நீசொல் வேதக் கவியினிற் பரம பக்தி
யுற்றிலே னாயே னென்றுள் ளுன்ன வூமையு மகன்ற [உங]

கண்ணினுண் சிறுத்தாம் போதுங் கவிவலர் பணிபாதத்தை
யுண்ணெகிழ் வுடனே பல்கா லுத்தமும் பெழவே வாழ்த்தி
நண்ணினு ரடிமை பூண்டார் நைச்யாநு சந்தா னத்தைப்
பண்ணினு ரவன்கழற்கோர் பாமல ரருச்சித் தாரால் [உச]

"ஈயாடுவதோ கருடற் கெதிர்ர யிரவிக்கெதிர்மின் மினியா டுவதோ
நாயாடுவதோ விறல்வெம் புலிமுன் நரியாடுவதோ நரகே சரிமுன்
பேயாடுவதோ வழகூர் வசிமுன் பெருமான் வகுளா பரண னருள்கூர்ந்
தோவா துரையா யிரமா மறையின் ஒருசொற்பெறுமோ உலகிற் கவியே [உரு]

என்றேய் சுடர்கொள் வகுளா பரணன் னிருதா மரைசேருறுதா ளிணையிற்) [கவிதா
பொன்று தவர்தம் மவரில் லொருவர்க் கொருவர்தெரியாப் புகலின்
னென்றாகியிதீ தவனின் னருளென் றுவவைக் கடலுற் றவருள் [ளறிய
முன்று மிழைதீ மையினைப் பல்கான் முன்னிப் புகலா மன்னுங் கவியோர் [உசு]

இந்நாள் வரையிவ் வகைசென் றெவரும் மெதிரா னமையின் றெழிலார் வகுள) [ருலகின்
மென்று ரணியோ னொருவாய் மொழியால் வென்று னதனுல் விரிநீ
மன்னு குபராங் குசனு மெனவே வழுவா தொருபே ரழியா துரையா
வன்னே ரிவனின் கழலே பரவா வணிமா மதுரைப் பதியே கினரால்

சங்கத் தவரிற் பதினெண் மதருந் தாமென் றுறுமித் தனியே தனிவந்) [மவரைப்
திங்குற் றிடமா மகிழும் புயனின் னேவல் கொடுவம் முனியும்
பங்கப் படவென் றவனின் கழலே பாவும் படிசெய் திவணிப் [படியே
துங்கத் தவனென் றிடவே வதியாச் சோதித் திருநா டேகுற் றனனே [௨௰]

(பரவாதகண்டனப் படலமுற்றும்)

---

# திருநாதமுனிப் படலம்

தென்புதுவா புரிமடக்கோ தைப்பிராட்டி செந்தமிழிற் காட்டு வணஞ் சேவெற் போர்க்கு) [ரேகப்
ளன்பினோடு மக்கார வடிசினு று சுடாரஞ்செய் தருளியெழூந் தவ்வூ
பின்னவளு நங்கோயி லண்ணனென்ம்றுர் பேர்வழங்கக் கொண் டருளெம் பெருமா னார்தம்) [நவில்குவாமால்
நன்கமல மாமலர்த்தாள் சென்னிகொண்டு நாதமுனிப் படலமதை

முருகு விண்டமா மகிழணி நின்மல முதல்வ
னருளி னல்வழி நின்றவம் முனிவர னழிவி
றிருமடந்தையுள் ளுகந்துறை திருமரு மார்பன்
பெருவிசும்படைந் தநேகநாட் சென்றதன் பின்னர் (௨)

அந்த மாமுனி வரன்றன தடிபணிந் தன்னுன்
சிந்தையேமகிழ் தரப்பணி விடைபல செய்து
வந்தநான்மறைச் சீடனின் மரபுறித் தோன்றும்
விந்தைசேர்பராங் குசநம்பி யென்னுமோர் விமலன் (௩)

பையராமுடி மிசையுறக் கிடந்தபா ரதனிற்
றுய்ய மாவிசை தாங்கிய மதுமகிழ்த் தொடைசூழ்
செய்ய மார்புடைப் பரன்றனக் கம்முனிசெய்த
பொய்யிலாவகை தானுகன் கியற்றினன் போந்தான் (௪)

இந்த வாறுபராங்குச நம்பியு மியற்றி
வந்த நாண்மதுரச்செயுண் மாமுனி வரன்போ
மந்தநாண்முத லாகமுற் றேன்றிய மகிழ்கொ
ணந்த மாறனை முதலிய நின்மலர் நவின்ற (௫)

இனிய செந்தமிழ் மறையெலா மிருநில வரைப்பி
னனியு மோதுவித் திடுவர்க ளின்மையி னாலுங்
கனிவி னவ்வண மோதுவித் திடினுநி கரிலாப்
புனித ராகியிங் குற்றவவ் விமலர்கள் பொருந்தி (௬)

மன்னும் விந்தையை யோர்ந்தியா முணர்ந்திடின் மடிவா
மென்னவேமனத் தெண்ணம தெழுந்ததி னாலும்
உன்னவேபர கதியினை யுகந்தினி துதவு
மன்னசெந்தமிழ் மறைபெலா மழிந்தன வன்றே (௭)

இருநிலந்தனி லிவ்வணந் தமிழ்மறை யெல்லா
மருவலின்றியே மலினமா யழிதருஞ் செயலைத்
திருமலிந்தணி சிறந்தொளி மிகுந்துபு திகழும்
பருமைத்ங்கு வைகுந்தமா நகரெனும்பதியில். (௮)

அண்ட கோளம தழிதரு முடிவினு மழிவி
றெண்டர்தங்குழா மிருமருங் கினுமிகச் சூழ்ந்தே
வண்டலர்க்கர முகிழ்த்தன ரிறைஞ்சியே வாழ்த்த
வெண்டரும் பணமுடியரா வணையதன் மிசையே (௯)

அஞ்சநந்திகழ் தருமுகிற் குலமளி யலம்புங்
கஞ்ச நாண்மலர் பூத்தலர்ந் தெனவுருக் கலந்த
விஞ்சு வாணிதம் பெருகுபைந் துளவணி விமல
னெஞ்சி னுனில வலயமுன் னிகழ்ந்ததை நினைவான் (௰)

அறிவி லாதுயி ரடங்கலும் பவக்கட லாழ்ந்து
சிறிது மோரிடந் தங்குறு துறழுறுஞ் செயலை
நெறியி னேர்ந்தது தவிர்ந்துநற் பரகதி நேர்வா
னறிய வாரணந் தனைத்தமி ழதனினு னவின்றும் (௰௧)

உணர்கி லாதுபின் னும்கொடும் பவந்தனி லுழன்று
புணரு நந்தமை யறிகிலா வகையது பொருவில்
குணமு றந்தமி ழோதுவித் திடுவர்கள் குரைநீ
ரணவு பாரிடத் தின்மையி னென்றுளி யருள்வான் (௰௨)

மூல மென்றொரு காலழைத் திடுவதன் முன்னர்
நீல மாமுகி லென்னவக் கரிமுன ணிமலன்
றூலம் வாழுயிர் தமைப்பினுந் திருத்துவான் றகைசேர்
சீல மாய வித்தகையன செய்குவன் றேர்ந்தே (௰௩)

கான மாமல ராடன திணையடி கருதுஞ்
சேனை நாயகன் றனதருள் வழியுறச் செல்லு
மூன மேதுமி லமைச்சராங் கஜாநநர் தம்மை
யான நாதனு நோக்கியின் னுரைசெய்வா னன்றே (௰௪)

ஈர நீர்புடை சூழ்தரு முலகுயி ரெல்லாம்
பார மாகிய பழவினை பற்றறுத் துய்வான்
சீர தாகுமுன் னிகழ்த்திய மறைத்தமிழ் தெரிப்பா
ராரு மின்மையி னுலவ ணெழுந்தினி தடைந்தே (௰௫)

அரிய செந்தமிழ் மறையெலா மினிதெடுத் தருளி
வருதி யென்றுரை செய்யலு மாமலர் மடந்தை
பொருது மார்புடைப் புங்கவ னடியிணை போற்றிக்
கரியி னானமுடை யருங்கழ றுவ ரன்றே (௰௬)

உறழ்வி னின்னுரை மறுத்திட வல்லவ ருளர்கொ
லிறைவ வவ்வண முலகிடை யுதித்தலு மெமக்காங்
கறிவு தீர்ந்திடு மாதலி னத்தமி ழனைத்து
நெறியி னோர்ந்திடும் வண்ணம தியாதென நிமலன் (௰௭)

நினக்கெ னன்னது நந்தமக் கன்றுகொ னிகழு
மனத்தி னுற்றவக் கவலையற் றேகுதி மருவும்
கனத்த பாரிடத் ததற்குநல் வழியினைக் காட்டா
வுனக்கு நல்லரு ளாங்குமீ குவமென மொழிந்தான் (௰௮)

மறைக ளாலுநன் களப்பதற் கரியமா மருமா
னறைவிளங்கிய மலரடி வாழ்த்தினர் நகையயிர்
கறைவிளங்கிய பையயராத் தாங்கிய கடல்சூழ
தறையிடத்தினிற் றோன்றுவா னெழுந்தனர் தாமே (௰௯)

வேறு

குடகி ழிந்தகரு முருகு சந்தினொடு கொண்டு வெண்டிரை யெறிந் [துநீள்
தடமு றுங்கரைக டகர வண்டல்படு தண்ணரும்புனல் பரந்துசேர்
புடவி யின்மகிமை பெருகு மொன் றிணையில் பொன்னி நல்வளஞ் [சுரந்திடுந்
திடமிகுந்தபுய லணவு பைம்பொழில் சிறந்துயர்ந்திடு மரும்பதி. உ௰

எண்ணிறந்தவள மேவுதண்கழனி யேடலர்ந்தமரை மீதிலே
கண்ணிவெண்பணில மீனுமொண்டரள நாறுநுண்ணிலவு வீசவே
பண்ணமைந்தகளி வண்டினங்கள்படர் பாவுசெங்குமுதம் வாய் [விளும்
விண்ணிவந்துபல மேடைநின்றொளிரும் வீரநாரண புரமரோ (உக)

வச்சிரத்தினி லிழைத்தபற்பல வரைக்குலங்கணிகர் மாடமு
முச்சிவிட்புல முகட்டினிற்படியு மொப்பருஞ்சின கரங்களும்
கச்சறக்குநகி லத்துமங்கையர் களிப்புடன்பயிலு சாலையும்
நச்சியந்தணர்க ணிச்சலும்மரிய நற்றவம்புரி யிடங்களும் (உஉ)

வண்டினம்பல மருங்கணைந்துமுரன் மாமலர்ப்பொழிலு விண்ணு லாங்) [கன்றவாம்
கொண்டல்வெண்டிரையி னுள்ளிவந்துபுனல் கொள்ளுறுந்தகைய
விண்டுபுண்டரீக மங்கைமார்முகம் விளங்குமெண்ணறு தடங்களும்
தண்டருந்நறை தயங்குதண்டுளப நந்தனங்கள்பல கோடியும் (உ௩)

சக்ரவாளகிரி யொத்துயர்ந்திலகு சுந்தரமாமதி லினங்களும்
புக்குமாமலரி னட்டலக்குமி பொருந்தி மட்டில்பல வாவண
மிக்கவீதிகள னந்தமுங்கனக வீறுகொண்டவிர தங்களு
மிக்கணிப்பரு வள்த்தின்மிக்குயரெழுன்மிகுத்தவ நகர்க்கணே (உ௪)

நச்சியுற்றினிது வைகுமந்தணர்த நற்பருங்குல மதற்குளே
வெச்சடுத்திடு பவக்கடற்றனில் விழுந்துநொந்துற வழிந்திடு
மிச்சகத்துயி ரணைந்துநற்கதி யெழுக்கடுக்கலி யுகத்தினின்
முச்சகத்திரமு மிருசதத்தொடிரு பத்திரண்டினி லிரண்டுமே (உ௫)

ஒன்றுமிக்கவருடங்கள்செசன்றபின முறுவதானசுப கிருதுயாண்
டன்றிநன்மிதுன மென்னுமாதமுட னணியபூரணையு மென்றுமே
பொன்றிறன்மையுதன் றன்வாரமு மிணைந்ததானவ நுடந்தனி
லென்றெனும்படியுகந்துதித்தனரெம் மிருள்களைந்தருள வென்ப [ரால் (உ௬)

அநகனின்னருளில் வந்துதித்தருள் கஜாநநத்தவரு மிம்பரா
லினியதன்மையஸ்ரீ ரெங்கநாதமுனி யென்றுநாமமது பெற்றனர்
முனிவில்சிந்தையுடை நிபுணராகிமறை முற்றுநன்கினி துணர்ந்து
[மே
தினிமுதன்மைதிரி லோகமெங்குமிசை சென்றுலாவுற வளர்ந்தனர்.

இக்கணிப்பினிலே யுற்றடுத்துவள ரெட்டருந்தகைய வப்பரர்
முக்குணத்தினு முதற்குணத்துடை முதற்பரத்த வரிபத்தியே
மிக்கெழிற்படரு மத்திருப்பதியில் விட்புலத்தெழு முகிற்குலம்
புக்கெனத்தளி யிடத்தினிற்பொலி பொருப்புயர்ந்தபுய மன்னனூர்

போத னைம்முகன்மு தற்படுங் கடவுள் போற்றருந் தகைய பாதமே
மாத னம்மென மனத்தி னுட்கொடு வணங்கி நன்குற வழுத்தியே
வேத நன்மறை வழாத வவ்விறை விருப்புடனக மகிழ்ந்திட
வேத நைந்தபல வாய தொண்டுகளிழைத்துவந்தனரு ளன்பினுல்.

இன்ன வாறனைய ரெங்க நாதமுனி யென்னு மந்தமறை யாளரு [மா
மன்ன னூர்தமது தொண்டி னல்வழியில் வந்த நாளிலொரு வைகன்
றுன்னு மாநகர்தொ றும்பணிந்துவர மனதுளித்தமது தெய்வமா
மன்ன மாய்னை வணங்கி நின்றெதிரி லறிய வின்னமொழி யுரை
[செய்வார். (௩௰)

கிட்டு வார்வினை யறுத்து வாழ்வருள் கிடைப்பிலா மணிநிறத்தனே
வட்டவாரிதி யுடுத்தமானில வரைப்பினிற்கொடு நடத்தைசேர்
துட்டரானவர் துடிப்ப னூறிவெகு சிட்டர்பாலன மீபற்றுவா
னிட்டமாகமுன் னுதித்துவந்தெழின் மிகுத்து யர்ந்தமது ராபுரி. ௩௧

கோவருந்தகைய கோகுலம்பொருவில் கோவருத்தன முடன்விருந்
தாவனம்பிரிதி துவாரகைபதரி தாருமிக்கதிரு வேங்கட
மேவயோத்தியணி நைமிசாரணியம் விந்தையின்னமுத லானசீர்
பாவுறும்வட புலத்தினின்றிசை பரந்தநற்பதி தொறுஞ்செலா (௩௨)

அங்கிலங்குன்வடி வங்கள்கண்டினி தகங்குளிர்ந்திட வணங்கியே
யிங்கெழுந்துவர வரமுகந்தருள்செ யென்றிறைஞ்சியய னின்றிடச்
சங்குடன்றிகிரி தண்டுவாள்வரிவில் தங்குசெங்கமல மன்னனூர்
புங்கவன்னவரை நன்கினவ்வகை புரிந்திவன்கடிது செல்கெனு. ௩௩

முன்னு மர்ச்சக முகேந வின்னண மொழிந்திடக் கடிதெழுந்து
[மேபோய்
மன்னுமுத்தர திசைக்கணின்றிசை மலர்ந்திலங்குறு வதானவர்

மன்னதிவ்யபல தேசமெங்கிலு மடைந்திறைஞ்சிவிரை வாகியே
பின்னெழுந்துதம நாடுசெல்லுழி பிறங்குமன்ன மறையாளரே. ௩௪

ஓடு தெண்டிரை யரும்பொ னெண்மணி யொதுக்கு பொன்னி [வளம் மன்னுசோ
ணாடி லங்குறு மாங்கமேமுதல நற்றலந் தொறும் வணங்கியே
மாடணிந்தபுனன் மானிலந்தனின் மலிந்த வெவ்வினை யறுத்தருள்
கோடில் சிந்தையரும் வந்த ணைந்தனர் குடந்தை யென்றுரை [யரும்பதி [௩௫]

அயனை னுந்தகைய வேள்வி யந்தணர்க ளாரணத் தொலியு மணி [யரு
வியனி டந்தழுவு மாவ ணத்தொலியு மேவரும் பல வளங்கள்சேர்
புயலி ணைந்தமணி மாட நன்மறுகு பொங்கு மங்கல விழாவெழு
மயர்வில் சும்மையு மளாவிவெண்டி ரைய வம்பிஞேடிகலி யார்க்கு மால். [௩௬]

அருமறைக்குரிய புனிதர் நித்தமு மமைக்கும் வேள்வி யெழு மாவி [யும்
இருதனப்பொறையி னெசியிடைச்சியரெழிற்றருங்குழலருத்துநீன்
முருகடுத்தொளிரு மகரு நற்புகையுண் முற்று மொன்றி விணகத் [தெழ
வருமுகிற்குலமி தெனவுறக்கருதி மஞ்ஞை நின்றசை தரும்பொழில்

வேறு

அணிபெருகுதிரைக ளொன்றுமா லவிர்மணி யுகுபொனி தன்னி
இணிபெரு முயர்திரு மாளிகை செறிதரு மறுகினு மின்புனல் [னுந்
பணிமதி யணிசடை யோன்நலம் பற்றுபரன் றளி மீதினும்
தணிவரு கலியென மைம்முகி றடமு ளிறங்கி மடுக்குமால் [௩அ]

பானல மருவிடு மீர்தன பாரம தொசியு மருங்குலார்
கானலர் குழலிய ரின்சொலுங் கடிமலர் நிறைதரு வாவியும்
வானக முகிறவழ் சோலையு மாமறை வேதிய ருள்ளமுந்
தூநகை மாடமு மினமுறத் துளிமலர்க் கண்ணனை நாடுமால் [௩௯]

இனையன பெருவள மிடையுமவ் வெழினக ரிடைநவ மாமணி
புனைபுரி சையுமெண் விமானமும் பொன்னகர் மிசையுறு சிகரியும்
வனையுமி ளொளிமிகு தூபியு மலிந்து சிறந்திடு கோயிலை
யனையரின் மலருபடைந்தன ரகமெழு மோகையோ டென்பரால்.

அன்னவிருந்தளி தன்னிலோ ரஞ்சன வெற்புக் கிடந்ததை
யென்னமலர்க்கண் வளர்ந்தரு ளெந்தமை யாளுடை நின்மலன்
கொன்னவிலுமயி லேர்விழிக் கோமள வல்லி புணர்ந்தவன்
முன்னரடைந்தடி தாழ்ந்தனர் மூவுலகும்மிசை கொண்டனர் [௪௧]

அண்டமடங்கலு நின்றரு ளன்ன பரன்றன மாமணி
கொண்டொளி வீசபி டேகமொண் கோடியசெஞ்சிலை யின்னுதல்
கண்டவர் சிந்தை கவர்ந்திடுங் கருணை மிகப்பொழி யுந்தகை
புண்டரிகம்புரை கண்குளிர் பூரணசந்திர வானனம் [௪௨]

குடந்தை கிடந்தருள் கொள்கையென் கோல வெனும்மழிசைப்பிரா
னிடந்தனி லின்னுரை யாடவே யெழுந்த வெழிற்கனி வாய்வரைத்
தடந்தனி யம்புய மைம்படை தாங்கிய செங்கர மாமலர்
மடந்தை வதிந்தருண் மார்பொளிர் மாடுடை மேவிய சீரரை [௪௩]

புண்டரி கன்வதி நாபியே போந்தடை வார்பிற விப்பிணி
கண்டிமருந்தென வாகுமீர்ங் கமல மலர்ப்பத மின்னவை
மண்டி மனத்தி லெழக்களி கண்டு நுணுற்று வணங்கியே
யண்டரு மாமறை முற்றையு மறிந்தரு ளன்னவர் நின்றனர் [௪௪]

நம்பர மாரிய ராயவர் நவையில் பெருங்குண ரிவ்வண
மம்பர மன்றனை யேத்தியே வங்கய னின்றிடும் வேலையோர்
வம்பறு வந்தி னம்வரு மாறுபோ லன்று மடைந்தன
ளெம்பெரு மானிரு தாமரை யென்னு மடித்துணை போற்றியே

ஏவன கண்டிரு நண்பனவ் வெம்பெரு மான்றன மீதிலே
மாவமு தத்து மினித்ததாய் மாமகிழ் மாறனுரைத்தவாம்
மேவரு நற்றகை யாயிர மென்றமிழ் மாமறை தன்னுளா
ராவமு தென்னு மரும்பதி கந்தனை யார நவின்றரோ [௪௬]

முன்னுற நின்றிட வன்னவர் முன்னு முணர்ந்தவை தம்முளே
மன்னும ரும்பொரு டன்னையே வழாம லுணர்ந்தன ராகியே
பன்னிவை யாயிர முள்ளிவை பத்தெனு மஞ்சட கோபனே
சொன்ன தெனுமிவை தம்முளே தோன்றலி னன்கறி வேனெனா

அன்னவ டன்னை யடுத்திவை யாயிர முட்குறை வாகலா
லின்னவை சொற்றனர் யார்கொலோ விப்பிர பந்த மனைத்துமே
நின்னிட முண்டுகொ லன்றிநீ நெறியி னுணர்ந்தனை யோவயன்
மன்னிய புத்தக மேனுமுண் டோவென வின்சொல் வழங்கினர் [௪௮

சொற்ற சொலைச்செவி யோர்ந்தனர் துணையடி யைத்தொழு துரை
ணற்றவ தென்குரு கூரெனு நகரத னுட்சட கோபனென் [செய்வா
றற்றை யுதித்து மறைப்பொரு ளனைத்து மருந்தமி ழான்முறை
ளுற்று விரித்தன ரென்றமுன் னோருரை செய்குவ ராதலால் [சகூ]

அத்தமி ழாயிர முள்ளிவை யன்றடி யேனறி யேனயற்
புத்தக மும்மிலை முற்றுணர் புனிதரு மிங்கிலை யென்றனள்
அத்தன் மறைத்தளி வாழுமா ராவமுதன் பதமாமலர்
சித்தமுகந்து வழுத்துருச் சிறியர் முகத்து விழித்திடாள் [ருய]

வேறு

அன்ன வின்சொ லறிந்தன ராகியே
யின்ன செந்தமிழ் மாமறை யாவுமே
மன்னி வைகும் வளநகர் யாதென
வுன்னி யுன்னி யுருகினர் நின்றரோ [ருக]

தேறி யுள்ளமிச் செந்தமிழ் தம்மைமுற்
கூறு மச்சட கோப னுதித்தருண்
மாறி லாவள வண்குரு கூரெனும்
வீறு கொண்டு விளங்கு பதிக்கணே [ருஉ]

அன்றி யெங்கு மிருப்பரி தாகுமா
லின்று சென்றறி வேனென வேமன
மொன்றி வேக முடனெழுந் தோகையிற்
றென்றி சாமுகஞ் சென்றனர் நோக்கியே [ருங]

பாட்டு வண்டு படும்பல பூம்பொழிற்
கூட்ட மன்னக் குருகை யடைந்தனர்
வாட்ட மின்மகிழ் மாற னருள்வடப்
பூட்டி மூக்கப் பொருவில் குணத்தரே [ருச]

மெலிந்து சென்றருண் மேதகு சிந்தையோ
ரலிந்து சேரு மகன்மணி யாலய
மலிந்து செங்கம லங்கள் வருமுகிற்
பொலிந்து நின்ற பிரானடி போற்றியே [ருரு]

வேலை சூழ்தரு மேதினி மீமிசை
சால வேயரு டந்த கடிமகிழ்
மாலை சூடிய மாறனை யுந்தொழாச்
சீல மோடெ ழித்துமு னின்றரோ [ருசா]

தூசகும்மணி துன்றபி டேகமும்
வான வாவு மதியைப் பழிசெயு
மோன மாய முகமுங் கருணைசேர்
தேன வாவுந் திருமலர்க் கண்களும் [௫எ]

வாம விற்புரு வங்களு மாசிலாத்
தூமறைத்தமிழ் சொற்ற செழுந்துவர்க்
சாம ரொண்கடி கைக்கிணை வாயுமுள்
ளாம ணித்திரு வார முறுவலும் [௫அ]

துய்ய மாமகிழ் துன்றிய மார்பமுஞ்
செய்ய சின்முத் திரைக்கர முந்தொழு
மெய்ய ருக்குயர் விட்புல மீதலால்
வய்ய கம்புகழ் மாமலர்ப் பாதமும் [௫௯]

விண்ட லத்தெழு வெஞ்சுடர் வானவன்
மண்ட லத்திடை வந்தன னென்னவே
யொண்டு லங்கு மொளித்திரு மேனியுங்
கண்டு கண்டு களிக்கட லாழ்ந்தனர் [௬0]

யோக நன்னிலை யோரவர் மாறனைத்
தாக மோடித் தகையின் வழுத்தியே
மேக மீச்செல் விமானந் தனைவல
மாக வந்து மகிழ்ந்த னராகியே [௬க]

பந்த மாய பழைய வினையறத்
தெந்த மக்கரு ளின்வகு ளப்பிராற்
கந்த மற்ற வணிபெருந் தொண்டுகள்
புந்தி யோடு புரிந்தனன் வந்திடும் [௬௨]

அப்ப ராங்குச நம்பி யடுத்தனு
ஊனப்ப ராவி யினைய நவில்வரா
லிப்ப ராவு மண்ணேழிலு நின்றசீர்த்
துப்ப ராயவத் தூநெறி யாளரே [௬௩]

வாச மன்மகிழ் மாறன் முதலியோர்
பேசு செந்தமிழ் யாவுமிப் போர்நக
ராசி லோங்குவ துண்டுகொ லன்றுஸ்ரீ
கோச முண்டுகொல் கூறுதி ரென்றனர் [௬௪]

சொற்ற சொற்க டுளச்செவி யேறுமுன்
மற்ற னும் வழங்குவன் சிற்பக
லுற்ற துண்டுபி ளேய்ந்து மலினமா
யிற்றை நாளிவ ணேது மிலையென [௬௫]

பின்னு மோதுவன் பெய்மது மாமகிழ்
துன்னும் மார்புடைத் தோன்ற லடிபணிந்
தன்ன வன்ற னருளிற் பரகதி
மன்னி வைகும் மதுர கவியெனும் [௬௬]

எங்க ளாரிய னிங்கு விபவமாய்த்
தங்கு நாளிற் றரணி யெலாமிசை
பொங்கு மாறப் புனிதன் விடயமாய்ப்
பங்க மின்றிப் பரிவி னவின்றவாம் [௬௭]

கண்ணி நுண்சிறுத் தாம்பெனுங் கானறை
யுண்ண யப்புறு மோர்பதி கம்மனன்
விண்ணி னிற்செலும் வேலையிற் சீடரா
நண்ணினர்க்கு நவின்றன னன்பினல் [௬அ]

அன்ன சீடர் மரபின னகலா
லென்னி டத்தது வன்றிமற் றின்றெனப்
பின்னுங் கேட்டி யென்றுங்குப் பிதற்றுவா
னின்ன வந்தமி ழின்குண மியாவுமே [௬௯]

வேறு

இப்பதிகத் துறுமகிமை யெனையோ வென்னி லின்றதையு முரைத நுவனிசைந்துகேட்ட) [னுறையுஞ் சீதத்
தொப்பறவிட் புலமுகடுங் கிழிய வப்பா லோங்குபுளிக் காவணத்து
துப்புறுபாட் டளிமுரலத் துளிக்குந்தண்டேன் றாங்குமகிழ்த்
[தொடையகலஞ் சூடுமெம்மா
னப்பறுவா ட்கமலமுகத் தெதிரே ந்தண் ணரியகுசத் திழைதவிசிட்
டதன்மேல் வைகி [எ௰]

புல்லியவைம் பொறிவெறியிற் போக்கா தேகபுங்கியுடன் புண்ணிய
ராய்ப் பொருந்தி யன்ன) [சிந்தை செய்யா
சில்லியறற் குழலுடைய நங்கை மாது திருவயிறு வாய்த்தோனைச்

யெல்லியினும் பகலினுமோ ரணுவு நீங்கா திருந்தனரா யோகியர்கட்
|கிணையாய் மன்னிச்
சொல்லருபே ரானந்தக் கடலுட் டாழ்ந்து சோர்விலருந் தகைமை
யவப் பதிகந் தன்னை [எக]

பன்னரிய நற்றேவ காநத் தோடும் பன்னீரா யிரமுருவே பகர்வராகி
[னுங்கன் ஞேர்தம்
லன்னசெயற் கதியோகை கொண்டா ஞகி யணிகிளரச் சடகோப .
முன்னரெழுந்த தருள்புரிவா னெனவே முன்ஞேர் மொழிந்தனரா
லிங்கிதுதான் முறையோ வென்ன) [மதிவல் லோர்க்கே
மன்னுபராங் குசநப்பி வழங்கிஞன் மாமறையின் பொருளுணரம்

சொற்றமொழி யிருசெவியு ளோரு முன்னர்த் தூயமனத் ததியோ
கை தூங்கத் தூங்கப்) [மென்ஞப்
பற்றறுப ராங்குசனைப் பற்றற் கன்ன பதிகமே பணிபுருட கார
புற்றளரு நெஞ்சுடைய புனித ரன்ஞேன் பூங்கமலத் தாளிணையைப்
போற்று நின்றே) [யத் திசைத்தா னன்றே.
மிற்றையுகந் தன்னதைநுந் தாசனேற்கின் றீந்தருள்வீ ரெனவின

மிகவணக்கத் தடிவணங்கி நிற்குமன்ன விமலர்தமை யன்ஞேனும்
வியந்து நோக்கி) [நெறியா னுங்குப்
நிகரறுமப் பதிகமதந் நின்மலர்க்கு நிகழ்த்துவனென் றுபதேச
புகரறுதன் னுரியனை நெஞ்சுட் கொண்டு போதனைசெய் தருளின
ஞற் புலம்போ மார்க்கத்) [துணர்ந்த வன்ஞேர்க் கன்றே.
தகமதனைச் செலுத்தலிலா வளவில் யோக வருநிலைதேர்ந் தினி

வேறு

துன்னு றுந்தகை யன்னநற் பாவைத் தூய ஞமப் பராங்குச நம்பி
தன்னி டந்தனி லின்னண மாகத் தகையி ஞேர்ந்து தெளிந்தன ராகி
யன்ன வன்றன தின்னரு டன்று லந்த ரங்க முகந்தனர் சென்றார்
மன்னு மாமல ரன்ன மணந்த மன்ன ஞரடி நன்குற வுன்னி (எரு)

தேவ கானங் கடிதினிற் சென்று தேர்ந்து ணர்ந்திவ ஞர்ந்தன ராகிச்
சேவி யார்மன மேவரி தாகுஞ் செய்ய மாமகி ழ்பயனின் முன்ன
ரோவில் சிந்தையத் தூயனுகந்தன் றுரைசெய் வண்ணம் புரைசெகு
[மன்ன
பாவி னங்களை யாவருங் கேட்பப் பாட லுற்றனர் பீடுடன் மன்ஞே

மாட லர்ந்தபணுடைவி தாங்கும் வாரி சூழ்தரு பாரிட மெங்கும்
வீட லர்விசை நாடிய நன்று வீற னென்றவம் மாறனின் முன்னர்ப்
பீடி லர்மனக் கோட றுறந்த பேரருட்டமை சீருறு மன்னோர்
பாடு மின்னிசை யீடிலமுதம் பரிந்து நன்கு சொரிந்தன ரன்றே

வேறு

வான்பயி லமரர் யாரு மறுவிலா ரிசைக்குந் துய்ய
தேன்பயி லினிய கானஞ் செவியிடை யடையா முன்ன
ரூன்பயில் குலிசப் புத்தே ளோங்கவை யிடத்தியாழ் வல்லோன்
றூன்படர்ந் தனனே யென்னச் சாற்றினர் விரையச் செல்வார் (எஅ)

வாரிசூ ழுலக முய்ய வந்தரு ணிமலர் செய்யுஞ்
சீரிய கான மோர்ந்து சிறிதுநீங் கரிய வாகி
யேரிமி ரசுண மெல்லா மிருஞ்சிறைப் பந்தர் வீசிக்
காரிரு விசும்பி னூடே கவிந்தன சுழலு மாதோ (எகூ)

முல்லைய நிலத்தின் மாயோன் முற்குழற் கானஞ் செய்யு
மெல்லையன் னேனைச் சூழ்ந்த வியல்பென நிரைக ளெல்லா
நல்லிசை செவியி னேரா நாற்றிசை மருங்குந் தீட்டுஞ்
சொல்லிலோ வியமே யென்னத் துன்னின மலியுமாதோ (அ0)

மைப்புய லூர்தி செய்ய மலர்புரை விழிக ளேபோற்
செப்பறு முடல மெல்லாஞ் செவியிலே னென்பான்சேடன்
ஒப்பிலாச் செவியநேக முற்றமை பலித்த தென்னுத்
துப்புறுங் களியி னாழ்வான் றாயவவ் விசைகேட் டம்மா [அக]

மானினங் கரடி வேழம் வரிப்புலி யரிமா னின்ன
வான்பல விலங்கி யாவு மறிவிழந் திரையுந் தேடா
தூனமி லெழுவை மான வுற்றவவ் விடத்தே நிற்கு
மீனரை யணுகா வன்னோ ரிசையமு தருந்தி மாதோ [அஉ]

தண்ணளி சுரக்கு மன்ன தகையினு ரிசைக்குங் கானம்
விண்ணக முழுது மேவி விரவிநிற் றலினுற் றூய்ய
பண்ணமை துளவத் தெம்மான் பண்டிட மெங்குந் தாய
வண்ணமுற் றொளிருஞ் செய்ய மலர்ப்பத மொக்கு மம்மா [அஙு]

காரணத் துதித்த வன்னோர் கழறிசை யொன்றே யெல்லாப்
பாரண வுயிர்க டம்மைத் தன்வசப் படுத்த லாலே
சீரணங் கயனும் வியச் செறிதரு முடிவிற் றன்பா
னாரண னனைத்துங் கொள்ளு நவையிலாத் தகைமை யொக்கும் [அச]

அவ்விம லன்செய் கான மணிந்தன ராகி மண்ணோ
ரெவ்விடந் தனிலீ தென்று விரங்கினர் செவிசெய் நோன்மை
யொவ்வவிவ் விசைவலானை யுற்றுநோக் குறவே கண்கள்
செவ்விதிற் புரிய கில்லாச் செய்கையி னயர்வ ரன்றே. [௮௫]

பாதவஞ் சலியா வாங்குப் பறவைகள் சிறிதுங் கூவா
வாதவ னிவனே குங்கா லன்றென விரையச் செல்லான்
போதவந் தணர்க ளும் புரிகில வேத வோதை
தீதவம் படுத்துங் கானச் சிறைவலை யகட்ட வம்மா. [௮௬]

மாரத மொழுக வன்னோர் வழங்கிசை செவியி னூரா
நாரதன் முதலா யாழின் நல்வளந் தெரியும் வல்லோர்
போரவுள் ளுடைந்து நாணம் பூண்டினி திருப்பரென்று
லாரதன் மகிமை தேர்ந்திங் கறையவல் லவர்க ளம்மா. [௮௭]

இவ்வகைத் தாய கானத் தெண்ணருந் தகைமை சேரத்
திவ்விய மதுரப் பாவைத் தீஞ்சுவை யொழுக வன்னோ
ரொவ்வநாற் பத்தைந் தென்றங் கோதுநா ளுளவாய்ச் சொன்ன
வவ்வண மாகப் பன்னீ ராயிர முருச்செபித்தார். [௮௯]

இணையிலா ரிசைத்த தேவ வின்னிசைக் குகந்தா னுகிக்
கணையென மிளிர்ந்து நீண்ட கண்ணுடை நங்கை பால
னணைவரு மதிர்ச னுகி யகல்விசும் பகட்டிற் றோன்றுங்
குணமுறுந் தொனியி னின்று குளிர்ந்தன னுரைசெய் வானுல்.

என்னகொல் வெருவாய் நீரிங் கெந்தமைக் குறித்தி யாரும்
பன்னுதற் கருமநேகம் பகலிமைப் பொழுது நீங்காத்
துன்னியே யருமை யான தொழிலினைப் புரிந்தீ ரென்ன
வன்னவர்செவியுட் கேட்ப வறைந்தன னினிதி னம்மா. [௯௰]

அவ்வுரை செவியிற் கேட்டவ் வநகருங் களிதுலங்கிச்
செவ்வியின் வணங்கி நாயேன் செந்தமிழ் மறைகளுன்கு
மெவ்வமின் றுணர வென்றிங் கியைந்தன னடிய னேன்செய்
வெவ்வினை கழற வோத வேண்டு நாவீற வென்ன. [௯௧]

மாமகிழ் மாற னுள்ள மகிழ்ந்துரை செய்வ னன்பா
நாமுனக் கெதிரி னின்று நவிலுத லறமன் றர்ச்சை
தூமலர் வாய்திறந்து சொல்லுவந் திரையி னப்பால்
நீமனங் களிப்பக் கேட்டு வரைந்திடு நிமல வென்றான். [௯௨]

என்னனு மடிப் பாடி யிருநிதி கிடைத்த தென்ன
மன்னுமா நந்த மென்னும் வாரிதி படிந்து மாறன்
சந்நிதி யருகிற் சென்று சரண்பணிந் தருடி யென்னக்
கன்னனு மகிழ்ந்து மேய்ப்பக் கழறினன் மறைநான் கன்றே.

தூயமா தவத்து வைகும் பதின்மர்சொற் றமிழு மாநா
லாயிர முரைத்துத் தேவ கானமிங் கமுதினேய்ப்ப
நீயிவ ணிசைத்த தாலே நிற்கு நாதமுனி யென்றோ
ரேயுநா மமுமளித்தங் கின்புற விருந்த பின்னர். [௬௪]

நாதமா முனியுஞ் சொன்ன நான்மறைப் பொருளு மோர்ந்து
போதமுற் றமலன் செய்ய பொன்னடி பணிந்து நாயேன்
மாதவ மிழைத்த தாலிம் மாறனுள் ளுகந்து நாவா
லோதின னம்போற் பாரி லொருவரில் லெனவுங்கொண்டான். ௬௫

வேறு

கருத்தி னிற்கடிய வன்பு கொண்டிலகு கண்ணகத் துயிர்கள் [யாவையுந்
திருத்தி நம்ஸமய நிலைநிறுத்துபு திகைப்பு றும்பல மதம்செகுத்
தருத்தி யொன்றபய மறைநிறுத்தியு மநேக வைகலிவண் வைகுவா
ருரைத்த விப்பெருந் தகைதனக்குரிய யோகி யாகுமிவ ரென்றனன்.

வேறு

மறுவளரு மறுகால்வண் டினங்கள் பாட மடைதிறந்தின் மதுவொழு கும் வகுளமார்பத்) [சேகரன்றன்
திருவளரு மெங்கோனிவ் வண்ண மாகத் திரிதண்ட மேந்துமெதி
னருவளமெல் லாமொழியா தன்னோர்க்கோதி யதிரிசனு மாறன்மவு னமதாங் காலை) [புகழ்சேர் தூயர். [௬௭]
பொருவருநன் னிலைபிறழா திலகுமன்ன புனிதரங்க நாதமுனிப்

தாயிழந்த சேய்போலு மெழிலி நீங்குஞ் சாயலுறு மயில்போலுந் தயங்கி வாடிச்) [வலையஞ் செழிப்புற் றோங்க
சேயிதழ்நன் மரையலர்க்கண் பனிப்பத் துய்ய திரையுமோ னில
வேயிருந்தோ னங்கைதிரு வயிற்று ணின்றே விண்சுடரோ னென வெழுந்து விளங்குஞ் ஜோதி) [வளருந் தேவே. [௬௮]
மாயமற மெய்யறிவின் றளித்த கோவே மதியிலியேன் மனம்புகுந்து

கருணைபொழி விழிமுதலே நடுவீ றில்லாய் கலிவைரி புன்சமயக்
கலகர் தீய) [வழங்கு மஞ்சத்
வருமொழியே வழுதிகுல வாழ்வே தூய்ய வண்டுளவப் புயலாதி
திருவளருந் தவசத்தா யரிய நான்கு செழுமறையைச் செந்தமிழ்
செய் தே தேவே) [யா வேத்தி. [௬௬]
யுருகுமன வன்பர்களுக் கன்றியெட்டா வுத்தமமே யென்றுபல வுரை

அடங்கருமெய்ஞ் ஞானமுறு மனைய கோவா மமலனுக்கே பற்பல
வுத் தவங்கள் செய்வான்) [வந்த தோன்றல் வந்தான்
றொடங்கியுயர் குறுங்குடிவாழ் நம்பிவந்தான் தொன்னிலங்க ளுய்ய
மடந்தையர்தந் திலகநங்கை மைந்தன் வந்தான் வழுதிகுலத் தொரு
முதல்வன் வந்தான்வந்தான்) [கொ ளொருவன் வந்தான்.[௭]
ஒடுங்கலறுஞ் சடைவைரி வந்தா னேங்கு மாறனெனுந் திருப்பெயர்

அணைமுலையை யுண்ணாது கிடந்தா னவ்விண்ணவிர்புளிக்கா வணத்தி
லினி தமர்ந்தான்வந்தான்) [குசனே வந்தான் வந்தான்
வனையிசைமதுரகவிதம் பெருமான் வந்தான் வண்மைகொள் பராங்
புனையுமது மலிவகுளா பரணன் வந்தான் பொருவிலருஞ் சடகோ
பன் போந்தான் போந்தான்) [வென் னிமலன் வந்தான்.[௭௧]
நினைவருமெய்ஞ் ஞாந நகம் மாழ்வார் வந்தார் நீசமுறும் பரமதம்

குயினினுல் பொழிற்குருகூர் நம்பி வந்தான் கோதறுநா வீறனெ
னுங் கோமான் வந்தான்) [செய்த செல்வன் வந்தான்
செயிர்மறுகுங் கலிவைரி வந்தான் வந்தான் செழும்வேதந் தமிழ்
எயிலெழுகோண் டொளிரரங்கத் தீசன் கொங்க மீர்ங்கமலத் தடி
யாரு மிறைவன் வந்தான்) [கொண்ட மன்னன் வந்தான் [௭௨]
மயர்வறுநம் பொய்கைமுத லாழ்வார் தம்மை மகிழ்ந்தவய வம்

வண்டலம்பும் பொழில்வழுதி நாடன் வந்தான் மறையவர்தம் மனத்
திருந்து வளர்வான் வந்தான்) [குமரன் வந்தான்
குண்டுபடு பேரகழி வளருங் கோமான் குளிர்மதமோங் குறவந்த
விண்டபுனற் றண்பொருநைத் துறைவன் வந்தான் வேட்டவர்தம்
வினையறுத்தாள் விமலன் வந்தான்) [பகர்ந்தான் வந்தான். ௭௩
பண்டுகன்னு தமுனியென்ப ரர்க்கு கந்து பண்டையநா லாயிரமும்

என்றுபல சின்னங்க ளியம்பியார்ப்ப வெழிலியென மங்கலபல்
லியமு மேங்க) [மிப் புகழ்ந்து போற்ற
பொன்றயுவா னவருகந்து மலர்மந் தாரம் பொழிதரமண் ணோர்குழு

மன்றறரு மணிமாட மோங்கித் தோன்று மணிநகர முழுதுமரு
வளங்கொண் டோங்க) [நடாத்தி வந்தார். [௱௩]
நன்றுமன திடைமிகவா னந்தங் கொண்டுநாடோறும் பற்பல்விழா

வேறு

இங்குளமகிழ்ந்திவணம் ரங்கமுனி யெந்த ்மிறைவனெனு மந்தண்
மகிழ் நறவொழுகு மார்பற்) [நடத்தியருள் மாறன்
றங்கமல மொன்றுமுக நங்கையணி பாலற் களப்பறுப னுச்சவ
பொங்கணிமி குந்தினி திலங்குறு மடிக்கே பொற்புறுப ணிரண்டு
களை யற்புடனி யற்றுத்) [லெணி யுற்றார். [௱௪]
தங்கியவ ளந்திகழு மிங்குதிரமாகத் தரித்திடுவ மென்றுத மனத்தி

னூர்வமொடு மிவ்வணமை னோர்வருகு நாளி லட்டதிசை பொங்கிசை
தம் மிட்டதெய்வ மாகுங்) [னற்புடைய மன்ன
கார்வளரு மோதிமினை நேர்வுறுமருங்குற் கற்புமிகு பொற்றிருவி
னூர்வளரு மன்பினெடு மோர்பகல் கனவி னத்துதிகி ரிப்படை
கொள் சுத்தவுரு வோடு) [சொல் சொற்றிடுவரம்மா. [௱௫]
நீர்வளரு மப்பரர்மு,னோர்பெறவ டைந்தே நின்றினைய பற்பல

திரைக்கட லரைக்குடு தரைக்குளிசை கொண்டோய் சீறுபர வாதி
யர்கள் வீறினை யடக்கும்) [முறு மாறனையடுத்தே
விரைத்தனி மகிழ்த்தொடையு ரத்தணியு நந்நா வீறனென நாம
மரைத்துணையை நேரடி சிரத்திடை புனைந்தே வணங்கி மிகவேண்
டிட விணங்கியவன் வந்தநு) [புள தவந்தனை யொழுக்கும். [௱௬]
குரைத்திடு மறைத்தமிழ் சிரத்தையொடு கேட்டு ளுகந்திட விருப்

நந்தம்வள நன்னக ரடைந்திடுதி யென்றே நவின்றிடவு மொப்பரு
கவின்றழையுமாற) [வர் திடுக்கென விழித்தே
னந்தமிழ் மறைப்பொரு ளுகந்தினி துரைத்தா னடிக்கினிய வன்ப
சிந்தைதனி லுன்னியுட னிந்தநகர் செல்வான் சிதைவறு கதிர்க்
கடவு ளுதயமு னெழுந்தே) [முடித்துட னெழுந்தே. [௱௭]
சிந்தையறு தண்பொருநல் வந்துபுன லாடி நித்திய கடன்களை

செந்தழ னிறத்தபல சந்தமணி மேவித் தினகரனை யொத்திலகு
மெனகர மடைந்தே) [மிலடைந்தே
நந்திறைவ னுக்கருள் புரிந்துதவு மாதி நாதனை யிறைஞ்சி வலமேக
யிந்துதவழ்திந்திரிணி மேவலு முகந்தே விருந்தருளு நங்கையி
னருந்தவ மெழுந்த) [மலர்ப்பத மிறைஞ்சா.
வந்தமறு மெந்தைமு னடைந்தனையர் தாமு மப்பாம ஞெப்பறு

மாவல நிறத்திலணி கோவலநம் மாதி
  மாலினை வழுத்துறவே கோலிமுன மொன்றுந்
தேவென வுரைத்தபதி கந்தனை வினுவிச்
  செப்பமோ டளித்தபரி சர்ச்சையினு மாறன்
மேவியநன் னித்தியவி பூதியொடு லீலா
  விபூதியினு முள்ளபல சேதநர் களுய்யக்
கோவென விருந்துநனிபோதக மெனுஞ்செங்
  கோலினை நடாத்திவரு கின்றன னுகந்தே. [௯ய]

வானவர்கள் சித்தர்பல தானவர்க ணித்தம்
  வந்தடிபணிந்துமலர் சிந்தியே வழுத்த
நானில மதற்குளுள மானிடர்களெல்லா
  நாடொறு மெழுந்துபு பலாண்டிசை பயின்றே
தேனுகு மலர்ப்பத முறத்தொழுது நிற்கத்
  தேவரடி யார்நடன கீதமுமுழங்கக்
கோனென விருந்துதமி ழாரணம் விளங்கக்
  கொண்டிரு விபூதிபுரிகின்றன னுகந்தே. [௯யக]

திருநாதமுனிப்படல முற்றும்.



சடகோப திவ்யசரித்திரம் முற்றும்.

# ஸ்ரீ சடகோப திவ்விய சரித்திரம்

## பிழை திருத்தம்



| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 3 | 1 | 3 | மூநூலும் | மூந்நூலும் |
| 4 | 5 | 1 | யனேக | யநேக |
| 4 | 7 | 2 | யுஞ்ஞானம் | யுய்ஞ்ஞானம் |
| 5 | 10 | 4 | னருட் | னருள் |
| 6 | 13 | 2 | செபபுவா | செப்புவா |
| 6 | ,, | 4 | மதினின் | மதனின் |
| 6 | 15 | 3 | தெண்ணியார்கலி | தெண்ணிலார்கலி |
| 6 | ,, | 4 | தனைறு | தன்று |
| 6 | 16 | 1 | கருமபினுரு | கரும்பினுரு |
| 6 | ,, | 6 | மகிலுறைந்த | மதிலுறைந்த |
| 7 | 4 | 3 | யென்னவாணிடை | யென்னவானிடை |
| 8 | 13 | 3 | பங்கமமற்றிடு | பங்கமற்றிடு |
| 9 | 14 | 1 | ஏக்கமொடு | ஏக்கமோடு |
| 10 | 25 | 2 | ஆனை | ஆணை |
| 11 | 29 | 1 | நேர்தே | நேர்ந்தே |
| 11 | 29 | 3 | பூந்துகிற் | பூந்துகிர்க் |
| 12 | 39 | 4 | மொன்றும | மொன்றும் |
| 13 | 44 | 1 | எழலி | எழிலி |
| 15 | 3 | 2 | தொழிர் | தொளிர் |
| ,, | 5 | 2 | வைடூரீய | வைடூரிய |
| 16 | 14 | 4 | லொக்குமோ | லொக்குமே |
| 22 | 9 | 7 | வதன | வதந |
| 23 | 13 | 1 | வானனத்து | வாநநத்து |
| ,, | 15 | 3 | மஞ்சன | மஞ்சந |
| ,, | 15 | 5 | ராதன | ராதந |
| 24 | 17 | 2 | நரமபிசைததிசை | நரம்பிசைத்திசை |
| 25 | 23 | 3 | ணயன | ணயந |
| 26 | 26 | 2 | வேழததை | வேழத்தை |
| 27 | 30 | 2 | மனிலமு | மநிலமு |
| 29 | 38 | 2 | நடன | நடந |
| 30 | 48 | 3 | விலோசன | விலோசந |

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 30 | 48 | 4 | கேதன | கேதந |
| ,, | 49 | 1 | கனக | கநக |
| ,, | ,, | 2 | தொகுகிகள் | தொகுதிகள் |
| ,, | 50 | 4 | ரனந்தரி | ரநந்தரி |
| 30 | 50 | 4 | னிகர்ந்திடுவரால் | னிகர்த்திடுவரால் |
| 31 | 58 | 4 | திருந்தணி | விருந்தணி |
| 32 | 62 | 2 | னிஞ்சியும | னிஞ்சியும் |
| 33 | 66 | 4 | வரச்கடர் | வரச்சுடர் |
| ,, | 66 | 5 | சலமாறையிற் | சலமாறயிற் |
| ,, | 67 | 5 | லாலைய | லாலய |
| 34 | 69 | 8 | கடகையோ | டகையோ |
| ,, | 70 | 3 | குவிச | குவீச |
| 35 | 76 | 4 | நிகரென்னவே | நிகரென்னவெ |
| 36 | 82 | 3 | செல்லுற்றன | செலலுற்றன |
| ,, | 85 | 1 | தூலவகு | துலங்கு |
| 37 | 1 | 8 | வருவிப்பாமல் | வருவிப்பாமால் |
| ,, | 4 | 4 | மெய்ம்மணி | மேய்மணி |
| 38 | 8 | 3 | மிச்சிலை | மிச்சிலைக் |
| ,, | 9 | 1 | அனனடை | அனநடை |
| ,, | ,, | 4 | தனையனற் | தநயனற் |
| 40 | 23 | 4 | செகுத்தனஞே | செகுத்தனனே |
| 42 | 37 | 2 | மிகமகிழ்ந்து | மகமகிழ்ந்து |
| ,, | 38 | 2 | யின்பங் | யன்னத் |
| 42 | 41 | 1 | சாமரமிரட்ட | சாமரையிரட்ட |
| 43 | 50 | 2 | லனையக் | லனைய |
| 44 | 52 | 3 | வயிற் | அயற் |
| ,, | 55 | | வினிதன் | விலுதன் |
| ,, | 56 | 3 | யனுதினம் | யநுதிநம் |
| 47 | 15 | 3 | சடங்கெல | சடங்கெலா |
| ,, | 20 | 1 | களத்தனெ | களத்தனே |
| ,, | 21 | 4 | தீனரை | தீநரை |
| 49 | 34 | 2 | தெருவிலூடே | தெருவினூடே |
| 50 | 37 | .7 | முதைய | முதய |
| ,, | 39 | 3 | முதறலைவன் | முதற்றலைவன் |
| 52 | 48 | 8 | துதித்ததம்மா | துதித்தம்மா |
| 54 | 54 | 7 | னடந்தனன் விரைவிலுதையனைப் பொருவு நந்தனன்றிரு முகங்காண்பான் (என்று ஒரு பாடமுளது) | |

# பிழை திருத்தம்

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 55 | 58 | 7 | மானயிவ | மானவிவ் |
| ,, | 59 | 8 | யெடுத்யெடுத் | யெடுத்தெடுத் |
| 56 | 64. | 4 | மெய்யொளி | பெய்யொளி |
| 57 | 67 | 1 | பயிலசெழு | பயிலச்செழு |
| 58 | 71 | 3 | கருணை | கருனை |
| 62 | 1 | 8 | நல்குவாமால் | நவில்குவாமால் |
| 64 | 12 | 3 | கஞ்சனன் | கஞ்சநன் |
| 65 | 19 | 4 | கட்டியமியம்ப | கட்டியம் விளம்ப |
| 65 | 21 | 3 | விட்டடைத்த | விட்டமைத்த |
| 66 | 27 | 3 | குலையவென | குலையவென் |
| ,, | 28 | 3 | வெண்ணை | வெண்ணெய் |
| ,, | 29 | 4 | குணததை | குணத்தை |
| 66 | 33 | 1 | புறந்த | புரந்த |
| ,, | 34 | 1 | கோடேத | கொடேத |
| | | 3 | பொலிந்தபினவிதிபபடி | பொலிந்தபின்விதிப்படி |
| | | 4 | மாதவர்ககளிபபனால் | மாதவர்க்களிப்பனால் |
| 67 | 36 | 1 | முனூலிலங்கு | முநூலிலங்கு |
| 67 | 37 | 1 | மாதவர்க்களித்து | மாதவர்க்கிழைத்து |
| 67 | 40 | 2 | சினந்தீங | சிணந்தீங் |
| | | 3 | கான்முளைக்கநாம | கான்முளைக்கந்நாம |
| 67 | 41 | 3 | விண்டடைந்த | விண்டைவந்த |
| 68 | 1 | 4 | தரிசன | தரிசந |
| ,, | ,, 5 | 4 | நீடரவட | நீடரைவட |
| ,, | 6 | 2 | மஞ்சொளி | பஞ்சொளி |
| 70 | 16 | 1 | யனகனைகிடத்தி | யநகனைக்கிடத்தி |
| ,, | | 4 | முகிலளகத்திரீ | முகிலளகத்திரீ |
| ,, | 17 | 1 | பூதலத்திற் | பூதர்த்திற் |
| 71 | 25 | 4 | யறிநதிலோமால் | யறிந்திலோமால் |
| ,, | 27 | 1 | மெதகு—பேர்ய் | மேதகு—போய் |
| ,, | ,, | 4 | வானே | வானோ |
| 72 | 32 | 3 | விறைவன் | விறைவின் |
| 72 | 36 | 8 | வாருதியே | வாரிதியே |
| 73 | 39 | 3 | தரும்குண | தருமீருண் |
| ,, | 41 | 3 | டணைய | டனைய |
| 76 | 13 | 1 | மன்னிய | மன்னியே |
| 77 | 16 | 3 | மந்தரமாந்தனை | மந்தமராந்தனை |

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 77 | 17 | 2 | திசைப்போ | திசைபோ |
| ,, | 19 | 3 | மெஞ்ஞானரவி | மெய்ஞ்ஞானரவி |
| ,, | 20 | 2 | வாயுவுடற்படு | வாயவுடற்படு |
| 78 | 24 | 1 | பாரடையிற் | பாரடைவிற் |
| ,, | 30 | 2 | சத்திரமாகப் | சீத்தரமாகப் |
| 79 | 34 | 3 | பெறும்பேறுய் | பெரும்பேறுய் |
| 80 | 42 | 2 | கோளுதனுக்குக் | கோளுதனுக்குக் |
| ,, | ,, | ,, | சேய்யுஞ் | செய்யுஞ் |
| ,, | 43 | 4 | யன்னன் | யன்னுன் |
| 81 | 48 | 1 | போலெதுவு | போலணுவு |
| 86 | 6 | 2 | கமலகணுறலா | கமலக்கணுறலா |
| ,, | 7 | 4 | கோளுரோ | கொளுரே |
| 88 | 20 | 2 | சிந்தையுள்ளுவகை | சிந்தையுள்ளுவகை |
| 89 | 22 | 4 | யுளளுருகி | யுள்ளுருகி |
| 89 | ,, | 3 | லனைபிரிந்தலமரு | லனையிரிந்தலமரு |
| ,, | 30 | 2 | றரும்புகழெருருங் | றரும்பகழெருறுங் |
| 90 | 27 | 1 | செயதிடை | செய்திடை |
| ,, | 28 | 2 | யற்றையபகலினை | யற்றையம்பகலினை |
| 91 | 38 | 4 | சென்ற | சென்று |
| 92 | 45 | 2 | மன்றிமற்துணர் | மன்றிமற்றுணர் |
| 93 | 50 | 4 | னென்மொழி | னெனமொழி |
| ,, | 52 | 4 | புனிதன் | புநிதன் |
| 94 | 63 | 1 | ஙான்கிலுனுங் | நான்கிலினுங் |
| 95 | 71 | 3 | மல்லோடு | மல்லொடு |
| 96 | 76 | 4 | பங்கமலாதளிசேர் | பங்கமலாதணிசேர் |
| 96 | 78 | 4 | யளர்ந்ததுவே | யளந்ததுவே |
| ,, | 79 | 1 | னிவ்வனமா | னிவ்வணமா |
| 97 | 88 | 4 | வெனறவ | வென்றவ |
| 98 | 92 | 3 | தினறெளி | தின்றெளி |
| 98 | 96 | 4 | சொனன | சொன்ன |
| 99 | 3 | 1 | கரைக்கள ணூர்திப் | கறைக்கள ணூர்தி |
| 100 | 4 | 2 | னுள்மகிழ்ந்து | னுளமகிழ்ந்து |
| ,, | 5 | 1 | பொருள்கள் | பொருள்கள் |
| ,, | 6 | 3 | நெறிகொள் | நெறிக்கொள் |
| ,, | 7 | 4 | புகழுடைபோய் | புகழுடையோய் |

# பிழை திருத்தம்

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 101 | 16 | 3 | செய்வீரொன்ன | செய்வீரென்ன |
| 103 | 31 | 3 | கொன்போற் | கென்போற் |
| 105 | 47 | 4 | வைத்துப | வைத்துப் |
| 107 | 60 | 4 | பருவமுற்றான் | பருவமுற்றாள் |
| 110 | 82 | 2 | வாட்டமுற் | வாட்டமுற் |
| 111 | 95 | 1 | கண்டார் | கண்டப் |
| ,, | 96 | 3 | கேகையச் | கேகயச் |
| 112 | 103 | 4 | இழவோரனன | இழவோரென்ன |
| ,, | 105 | 2 | கந்துகக்களிறு | கந்துகக்களிறு |
| 113 | 106 | 3 | தென்னை | தென்னைத் |
| 114 | 114 | 2 | பதிகமாக | பதிகமாகப் |
| ,, | 116 | 4 | வங்கமவி | வங்கமவி |
| 115 | 122 | 1 | கான்முளை | கான்முளை |
| ,, | 127 | 2 | விளைப்பூ | விளைப்பூக் |
| 117 | 10 | 2 | சூரிகடமக்கிலாது | சூரிகடமக்கலாது |
| ,, | 13 | 2 | கண்முக | கணமுக |
| 117 | 14 | 3 | துங்கவில் | துவகவல் |
| 118 | 16 | 1 | விழியிற்றுறு | விழியீறுறு |
| ,, | ,, | 4 | ணீணைசையினொடு | ணீணைசையினேடு |
| ,, | 19 | 3 | நாவினிலுங் | நரலுமினுங் |
| 119 | 24 | 3 | முன்னளித்த | முன்னளித்தக் |
| ,, | 26 | 1 | திவகு | திலகு |
| 121 | 38 | 4 | வொருவன | வொருவன் |
| 123 | 53 | 3 | வாகையின் | வாகையன் |
| 124 | 54 | 2 | மெய்தினனுற் | மெய்தினனுல் |
| ,, | 56 | 2 | மிருவிந்தன | மிருவிந்தமன் |
| 125 | 66 | 3 | குழாமிடு | குழாமிகு |
| 127 | 74 | 4 | தேவபிரா | தேவர்பிரா |
| 128 | 80 | 3 | மேவங் | மேவுங் |
| ,, | 82 | 1 | வராற்கடுள்ளிச் | வராற்கன்றுள்ளிச் |
| 131 | 99 | 4 | வாரியணையான் | வாரியளையான் |
| ,, | 101 | 4 | ணடைந்தனனரோ | டடைந்தனனரோ |
| 132 | 106 | 1 | யாருடைய | யாமுடைய |
| 133 | 112 | 4 | கின்றருள | கின்றருள் |
| ,, | 113 | 3 | கித்கில | கித்தில |

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 133 | 113 | 2 | வளைமென் | வளைமேற் |
| 134 | 120 | 2 | தண்டமிழ்கேட் | றண்டமிழ்கேட் |
| 135 | 126 | 1 | திலககணங் | திலக்கணங் |
| 142 | 31 | 3 | வணைத்ததான | வனைந்ததான |
| 144 | 44 | 2 | காண் | கரணை |
| 144 | 44 | 3 | றுன்னியதிலவ்யாமோகி | றுன்னியதிவ்யாமோகி |
| 153 | 88 | 2 | சிப்பா | கிப்பா |
| 155 | 99 | 2 | மடைநதோ | மடைந்தோ |
| 157 | 111 | 1 | அறுககும | அறுக்கும் |
| 159 | 2 | 3 | செயற்க்கு | செயற்கு |
| 160 | 6 | 3 | முழன்றிடிலயா | முழன்றிடில்யா |
| ,, | 10 | 2 | ஞவீறு | ஞவீற |
| 166 | 10 | 2 | வவணிற்றிடு | வவணுற்றிடு |
| 167 | 15 | 2 | சூறிருட் | சூழிருட் |
| ,, | 18 | 3 | தரும | தமரு |
| 168 | 22 | 2 | வந்தண் | வந்தண |
| ,, | 22 | | சிந்துகுழலகிற் | சிந்துசூழலகிற் |
| ,, | 26 | 3 | வவை | வகை |
| 173 | 30 | 4 | லறிய | லரிய |
| 174 | 36 | 4 | சும்லை | சும்மை |
| 175 | 45 | 4 | யோற்றியே | யேத்தியே |
| 177 | 58 | 3 | சுாம | காம |
| 178 | 70 | 2 | ளுறையுஞ் | ஞறையுஞ் |
| ,, | ,, | 4 | னப்பறு | னப்புறு |
| 182 | 93 | 4 | மமிழ்ந்து | மமிழ்து |
| 183 | 104 | 2 | பொன்றயுவா | பொன்றலில்வா |

76-வது பக்கம் 11-வது பாட்டு முதல் "வேறு" எனக்கொள்ள

ஸ்ரீ சடகோப திவ்ய சரித்திரம் பிழை திருத்தம்

முற்றும்



ஆழ்வார்திருநகரி திருஞான முத்திரைப் பிரசுராலய

# வெளியீடுகள்

திருஞான முத்திரைக் கோவை—1. ஸ்வாமி நம்மாழ்வார் நூற்றெட்டுத் திருப்பதித் தாலாட்டு—திருக்குருகூர் திருவத்தியயன உத்ஸவத்தில் தொன்று தொட்டு சுமார் 300 ஆண்டுகளாக இன்றும் அநுஷ்டானங்களில் ஒன்ருக சேவிக்கப்பட்டு வருகிற பழமையான சிறு தமிழ் நூல். ஸ்வாமி நம்மாழ்வார் வைபவங்களை பூர்வாசாரியார்களருளிச் செயல்களை யனுசரித்து, எளிய நடையில், யாவத்சிராளும் கண்டு கேட்டுருகும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது. உபயகவி அப்பா என்பாராலியற்றியதை, பெரியன். வெ. நா. ஸ்ரீநிவாஸனுல் வெளியிடப்பட்டது. விலை ரு. 0—4—0

திருஞான முத்திரைக் கோவை—2. ஸ்ரீ சடகோபன் சந்திரகலா மாலை—ஆழ்வார் திருநகரி ஸ்ரீ. உ. வே. தேவேசபாரதிகளின் மாணுக்கரும் கனிஷ்ட சகோதரரும், ஸ்வாமி தெற்குத் திருவேங்கடமுடையான் சந்நதி அர்ச்சக கைங்கர்யம் பார்த்து வந்தவருமான அனந்தாசார்யராலியற்றி வெளியிடப்பட்டதை, திரும்ப ஷை பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸனல் வெளியிடப்பட்டது. ஸ்வாமி நம்மாழ்வாரை சேவிக்கும் சேவார்த்திகள் பாராயணத்திற்குரியது. விலை ரு. 0—1—0

திருஞான முத்திரைக் கோவை—3. ஸ்ரீசடகோப திவ்விய சரித்திரம்—திருக்குருகூர் நித்தியவாசியாயும், தமிழாசிரியரும், உபயகவி வித்வானுமான ஸ்ரீ. உ. வே. தேவராஜய்யங்கார் ஸ்வாமிகளென்ற தேவராஜ (தேவேச) பாரதிகளால் ஸ்வாமி நம்மாழ்வார் வைபவங்களை பூர்வாசார்யார்களருளிச் செயல்களான, மணிப்பிரவாள குருபரம்பராப் பிரபாவங்களை யனுசரித்து விஸ்தாரமாய், தமிழில். ஓர் புராண (காவிய) நடையிலியற்றியுள்ளது. 15 படலங்களில் சுமார் 1200 திருவிருத்தப் பாக்களடங்கியது.

ஸ்ரீ பாஷ்யக்காரரான, எம்பெருமானுரையே, வழிபடுதெய்வமாகக் கொண்டு ஒவ்வொரு படல ஆரம்பத்திலும் ஷை உடையவர் வைபவ, விஷயங்களை விளக்கிக்காட்டும், வணக்கங்களையுடையது.

நூற்றெட்டுத் திருப்பதி எம்பெருமான்களும், திருப்புளியில் யோகத்திலெழுந்தருளி யிருக்கும் ஸ்வாமி நம்மாழ்வாருக்கு சேவை பிரசாதிக்கும் வைபவங்களும், ஷை எம்பெருமான்களை, மங்களாசாசனம் செய்தவுடன் திராவிடவேதமாகிய, திருவாய்மொழி, மொழிந்த விதங்கள். ஸ்ரீமதுரகவிகள் வியக்தமாய் கேட்டுருகி பட்டோலை கொண்டு நேமனம் பெற்று, தானும் தன் போன்ற அடியார்களும் சேவித்து,

பூஜித்து, உத்ஸவம் கொண்டருளி உஜ்ஜீவிக்கும் வண்ணம் ஸ்வாமி நம்மாழ்வார் யோகாசனத் திரு உருவையே அவனருளால் திரு அர்ச்சாஸ்வரூபங்கள் கொண்ட மூர்த்திகளாய், பொருணைநதி தீர்த்தத்தைக் காய்ச்சி இறக்கி எறியருளப்பண்ணுவித்து, சேவா, பூஜா, உத்ஸவாதிகள் நடத்திவரவும், மதுரகவிகளுடைய சிஷ்ய பரம்பரையில் ஒருவரால், தமிழ்சங்கம் அபசாரப்பட்டு வணங்கி அபசாரக்ஷமை பெற்றதும்,

நாலாயிர திவ்ய பிரபந்தங்களும் மறைந்த காலத்தில் ஸ்ரீநாதமுனிகளென்பவரால், 'விசாரித்து தெளிந்து வந்து கண்ணிநுண்சிறுத்தாம்பு பாசுரங்களை முறையாக, உபதேசக்கிரமத்தில் பெற்று, முறையாக சேவித்துப்பிரார்த்திக்க அர்ச்சாஸ்வரூபமாய் எறியருளப்பண்ணிய'' மகிழ்மாறன் உள்ளம் மகிழ்ந்து, உரை செய்வன்:—

அன்பா! நாம் உனக்கு எதிரில் நின்று நவிலுதல் அறமன்று. அர்ச்சை, தூமலர், வாய் திறந்து சொல்லுவம். திரையின் அப்பால் நீ மனம் களிப்பக்கேட்டு, வரைந்திடு, நிமல!'' என்றதும் ஸ்ரீநாதமுனிகளும் பட்டோலைகொண்டு வெளியிட்டருளிய விபரங்களை விஸ்தாரமாய் பரக்கக் கூறப்பட்டுள்ளது. ஷெயார் மாணுக்கர் பெரியன் தேசிகமய்யங்காரென்ற பெரியன் வெங்கட்டநாராயணய்யங்கார் குமாரர் பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸனால் எடுத்தெழுதி நல்லான் சக்ரவர்த்தி (எட்டயாபுரம் தமிழாசிரியர் R. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமிகளால் பல ஆதாரப்பிரதிகளுக் கிணங்கப் பார்வையிடப்பட்டு அவசியமான நான்கு படங்களுடன் வெளியிடப்பட்டது. ராப்பர் விலை ரூ. 2—0—0

ஷை. காலிகோ பயிண்டு ரூ. 2—6—0. தேவையுள்ளவர்கள் அட்வான்சு ரூபாய் ஒன்று அனுப்பிப்பெற்றுக்கொள்ளவும்.

திருஞானமுத்திரைக் கோவை—4. ஸ்ரீமத் ராமாயணம்—பெரியவாச்சான் பிள்ளை திருவாய் மலர்ந்தருளிய, திவ்விய பிரபந்தப்பாசுரப்படி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்காராசாரிய ஸ்வாமியால் வெளியிடப்பட்டதை, திரும்ப, பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸனால், அச்சிட்டு இனுமாக வெளியிடப்பட்டது. ஸ்ரீ ராமநாம வைபவாமிர்தம்.

| | |
|---|---|
| கிருஷ்ணய்யரவர்கள்,<br>வேம்பத்தூர்மடம், தெற்கு ரதவீதி<br>திருநெல்வேலி டவுண் | பெரியன். வெ. நா. ஸ்ரீநிவாஸன்<br>'திருஞானமுத்திரைப் பிரசுராலயம்,'<br>ஆழ்வார்திருநகரி. |

S. திருமலைஸாமி அய்யங்கார்,
தமிழாசிரியர்,
செண்ட் சேவியர் கலாசாலை, பாளையங்கோட்டை.



ஸ்ரீராமஜயம்.

திருஞானமுத்திரைக்
கோவை 7

# திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக்குறம்

(சுவடியிலிருந்தது)

பாளையங்கோட்டை செயின்ட்சேவியர் கலாசாலைத்
தமிழாசிரியரும், நெல்லைத் தென்னிந்திய
தமிழ்ச்சங்கப் பரீக்ஷகருமான

S. திருமலைச்சாமி அய்யங்கார் ஸ்வாமியால்,

பார்வையிடப்பட்டு,

ஆழ்வார்திருநகரி (ஸ்வாமி ஆதிநாதராழ்வார்
ஸந்நிதிஸ்தானிகரும், ஸ்வாமி தெற்குத் திருவேங்கட-
முடையான், அழகர், ஸ்ரீராமன் ஸந்நிதிகளின்
சொந்தக்கார பாத்தியஸ்தர்களி லொருவருமான)
பெரியன் தேசிகமய்யங்கார் என்ற பெரியன் வெங்
கிட்டநாராயணய்யங்கார் குமாரர்
(திருஞான முத்திரைப்பிரசுராலய சொந்தக்கார
காரியஸ்தன்)

பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸய்யங்காரால்,

வெளியிடப்பட்டது.

ஸ்ரீகான வித்யா பிரஸ்,
ஸ்ரீவைகுண்டம்.

14—5—1932.



விலை அணா
நான்கு.

ஸ்ரீராமஜயம்.



# முகவுரை.



ஸ்ரீ நம்மாழ்வார் அவதரித்ததும், அதின் நிமித்தம் வைஷ்ணவ ஸ்தலங்களுள் முக்ய ஏற்றமடைந்ததுமான குருகாபுரி என்ற ஆழ்வார்திருநகரி யென்னும் திருப்பதியில், ஆதிகாலமுதல் தமிழ் நூல்வல்ல விஷ்ணுபக்தர்கள் பலர்தோன்றி, அவ்வாழ்வார் பேரிலியற்றியுள்ள நூல்கள் பலவுள. அவற்றில், அநேகம் அச்சிடப்படாமலும், பிற்காலத்தவர் கவனக்குறையால், ஏட்டுப்பிரதிகள் கூட செவ்வையாகப் பாதுகாக்கப்படாமலு மிருந்துவருகின்றன. அவைகளை எவ்விதமாவது தேடி வெளியிடவேண்டுமென்று முயற்சி செய்து வருபவர்களில் ஒருவரான பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸய்யங்கார், சில வருஷங்களாகத் திருமாளிகைகளிலும், பழைய புலவர்களின்சந்ததியாரிடத்திலும், பலமுறை விசாரித்துத்தேடியெடுத்து அச்சிட்டுவருகில் "திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக்குறம்" என்னும் இந்நூலின் ஏட்டுப்பிரதியொன்று, ஆழ்வார்திருநகரி 'திருவாய்

மொழிப்பிள்ளை மேலத்திருமாளிகை ஆசார்யஸ்வாமிகளிடமிருந்து, தேடி யெடுக்கப்பட்டு இப்போது அச்சிடப்பட்டிருக்கின்றது.

இந்நூலில் குருவணக்கத்திலிருந்து ஆழ்வார்திருநகரியி லேயே, இந்நூலாசிரியர்காலத்திலே, அனேகதமிழ் வித்வான்களிருந்த தாகத்தெரிகின்றது. இந்நூலாசிரியர் இன்னாரென்பதும், அவர் குரு வைத்தியநாதர் இன்னாரென்பதும், இப்பொழுது நன்கு விளங்க வில்லை. 'குறம்' என்னும் நூல் ஒன்றிரண்டுதான் அச்சிடப்பட்டு வழக்கில் உண்டு. இந்நூலில் அநேகம் சிந்துகவிகள் இப்பொழுது வழங்கும் சிந்துகவிகளைப்போலன்றி. ஓரடிக்குஓரடி வெவ்வேறு சந் தத்திலமைக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாசிரியர் பக்திமார்க்கத் திலும், சொற்சுவை, 'பொருட்சுவையுடன், கவிதைசெய்வதிலும் வல்லவரென்பதுஇந்நூலிலிருந்தேதெளிவாகும். சிலசிலபதங்களுக்கு தெளிவாகப் பொருள் விளங்கவில்லை. ஆயினும் ஏட்டுப்பிரதி எழுதினவரின் குற்றமோ, இல்லையோ, என்பதற்கு வேறு பிரதி கள் கிடையாமையாலும் ஆசிரியர் அரிய பதங்களை இடை யிடையே கையாண்டுவருவதாலும் கிடைத்த நூலை, ஏட்டிலுள்ள படியே அச்சிட்டு, குற்றங்குறைகளை தமிழ் வல்லோரைக்கொண்டு தீர்மானிக்க வேண்டுமென்ற அவாவாலும், கிடைத்தபடியே, அச் சிடப்பெற்றிருக்கிறது. தாய்ப்பாஷை விஷயத்திலும், நம்மாழ்வார் விஷயத்திலும் ஏற்பட்ட பக்தியால், பால்ய வயதிலேயே, பொருட் செலவு, பிரயாசங்களைக் கவனியாது ஊக்கத்துடன் இவ்வரிய நூல் களைத்தேடி வாங்கி, தமிழ்மக்களும், பக்திமான்களும், ஆனந்திக் கும்வண்ணம், பாடுபட்டுவரும், பெரியன். வெ. நா. ஸ்ரீநிவாசய்யங் கார் சிரத்தைப் போற்றத்தகுந்தது.

(Sd.) A. V. திருவேங்கடத்தய்யங்கார்,

தாசில்தார், திருச்செந்தூர்.

11—5—1932.

ஸ்ரீ சடகோபாயமங்களம்.

# திருக்குருகூர்மகிழ்மாறன்

# பவனிக்குறம்.



## காப்பு, வெண்பா

ஏறு புகழ்க்குருகை எந்தைமகிழ் மாறனுக்குக்
கூறு பவனிக் குறம்பாடப்—பேறுதரு
யாய னடியிணைக்கீழ் வாழுங் கருடேசன்
தாயமலர்த் தாளே துணை. க

## குருவணக்கம், விருத்தம்.

பனுவல்முறை தொகுத்தினிய பயனுணர்ந்த குறுமுனியொப்
பாமே யென்ன
அனுதினமு மிலக்கியமு மிலக்கணமு மாணாக்கர்க்
களிக்கும் வள்ளல்
தனுவளைத்த கருமுகிலைப் புகழ்குருகை வருமாறன்
தன்னை யல்லால்
மனிதர்தமைப் புகழாத வயித்தியநா தன்றுணைத்தாள்
வழுத்து வாமே. உ

## அவையடக்கம், விருத்தம்.

ஒப்பாரு மில்லாது நடம்புரியு மவர்தமைக்கண்
டுவகை கூர்ந்து
சப்பாணி தவழ்ந்துதவழ்ந் தாடுவே னெனத்துணிந்த
தன்மை போலும்
முப்பாலுந் தெரிந்துதமி ழினிதுரைப்பே னென்றுபுன்சொல்
முறையெண் ணாமல்.
எப்பாரும் புகழ்படைத்த கவிவாணர் தங்கண்முனியான்
இயம்பு மாறே ௩

## குறத்திதோன்றுதல், விருத்தம்

கூந்தல்புறத் தவிழுமணிப் புட்டி லேந்திக்
குழவிமருங் கணைத்துவிழி குழைமேற் றுவக்
காந்தளணி மலர்க்கையில் வரிவளைக ளார்ப்பக்
கமலபதத் தணிசிலம்பு புலம்பா நிற்ப
வேய்ந்தமகிழ்ப் பருதிதிருக் குருகை மாறன்
விரிபொருனை வளந்தழைக்க விளங்கு தென்பால்
போந்தகுறு முனிவனிசைத் தமிழா லோங்கும்
பொதியமலைக் குறத்திவந்து தோன்றி னாளே. 1

## குறத்தி கூறல், சிந்து

சீர்மரு வியதிரு மகள்தழுவுந்
திருமா லடிபர வியபெருமான்
போர்மத னன்பணி யுநம்மாழ்வார்
பொதியமலைக் குறத்தி நானம்மே. 2

மறையா கியநிறை திருமந்திர
முறையா லிசையா யிரந்தமிழ்தேர்
பொறைகூ ரிறைசெண் பகமாறன்
பொதியமலைக் குறத்தி நானம்மே. 3

## விருத்தம்

அவனி பரவுந் தமிழ்க்குருகை
யாழ்வா ரன்னப் பிடரில்வரும்
பவனி தொழுது மெலிந்தமடப்
பாவை மயிலை முகநோக்கி
எவன்நீ வருந்தி யிருப்பதனக்
கெல்லாம் உரைப்ப னின்பமுறத்
தவம்நீ செய்தாய் கலங்காதே
யென்று குறமான் சாற்றலுற்றாள். 4

## தலைவன்வளம், சிந்து

மருவுந்திரை பெருகுங்கடல் பருகி யுடல்கருகி
மஞ்சுதுஞ்சிய பொதியமாமலையான்—தமிழ்க்கலையான்
குருகும்நவ மணியுமிரு நிதியுங்கரை யருகே
கொழிக்குந்தண் பொருனைவள நதியான் பாகதியான் 5

வன்னந்திகழ் மாடம்பொலி யன்னந்தருசாலை
வளருந்திரு வழுதிவள நாடன்—மறையீடன்
மின்னும்பசும் பொன்னுமுத்தும் விளங்கும்பலவளங்கள்
மேவுங்குரு கூரான்—வரமி யாவுந்தருபோரான் 6

மழைக்கார்முகில் தடவுமொரு புழைக்கார்பனைத்தடக்கை
மதவாரணத்திறையோனுயர் பதவாரணத்துறையோன்
கழைக்காமனை யளித்தோனருள் பிழைத்தார்முடியிடறுங்
கவனவயப்பரியான் எழு புவனம் வழுத்தரியான் 7

படியேழினு மடர்தீவினை மிடியால் வருகொடிய
பசியாற்றநின்றழைக்கு மன்னக்கொடியான் கதிர்
முடியான்
இடியும்பெரு மழையுங்கடலொலியுந்திக ரெனவே
யிகல்மும் முரசுடையான்மறை புகலும் மரசுடையான் 8

வண்டேழிசை கொண்டுறிய தண்டே மதுவுண்ணும்
மகிழ்மாலிகைத்தாரான் எழில் திகழ் மாமணித் தேரான்
அண்டந்தனையுண்டேழுல களந்தோன் புவிபிளந்தோன்
ஆயனுணை மறப்பிலான்பல மாயமான பிறப்பிலான் 9

கருவாயுழல் கொடியேனையு முருவாமுறை வளர்த்தோன்
காரிதந்தருள் மாறிசெண்பகமாறன் வண்புகழ் கூறுகேன்
அருவாய்வெளியுருவாயுயாருளாய் நிறை பொருளாய்
அடங்காவிளக் கொளியோனலமடங்காவுளக் கொளி
யோன். 10

வெங்கண்மா மறலியுடல் பங்கம் படவுதைத்து
வேதன்சிரமறுத்தோர்கவியேதமெனவெறுத்தோன்
பொங்குந்தமிழ்ச் சங்கத்தவர்க் கங்கங்கவர் மனத்தே
பொருந்தவொரு கவியாகவேதிருந்த வரம்புரிந்தோன் 11

திடமேவியகடவாரணங்கொலை வேடனை மலையுந்
திருச்சங்கணித்துறையான்றமிழ் விரிச்சங்கணிமுறையான்
குடமாமெனு முலைமாதர்க ளிடமேமன தடையாக்
கொற்றவன்கதிபெற்றவன்மறைகற்றவன்எனையுற்றவன் 12
கஞ்சநான்முகன்முதலாயுள்ளவிஞ்சுதேவர்வாசஞ்செயும்
கானூர்மலர்த்துடரி மலைக்காவலன் தமிழ்நாவலன்
கொஞ்சுபூங்கிளி வஞ்சிதங்கிய குமரித்துறையுடையான்
குறுகாப்பெரும்புகழான் அன்னைமறுகாற்பெறவிகழான்.

நகரலங்காரங்கூறல், விருத்தம்

வங்கநெடுங் கடலுடுத்த தரைமுழுதும் அனுதினமும்
வணங்கி வாழ்த்தப்
பொங்குமறை தழைத்தோங்க வளந்தழையுந்திருக்குருகா
புரியில் மானே
நங்கையருள் மெய்ஞ்ஞானச் சடகோப னப்பவனி
நடத்தும் நாளில்
அங்கங்கேமறுகுதொறும் அலங்கரிக்கும்பெருமையெல்லா
மம்ம கேளே. 14

நகரலங்காரம், சிந்து

கொடியோடிடக் கயங்குடை கட்டிடுவார்—மாட
கூடமணி மேடை யலங்கரிப்பார்
கடிகமழும் வீதிபன்னீர் தெளிப்பார்—ஓங்கு
காவணங்கள் தோரணங்கள் அளிப்பார், 15

வாழைகமுகொடு கரும்பு நிரைப்பார்—சந்தனம்
வாரியே அண்டை கொண்டிரைப்பார்
தாழைமலர் மாழைபல நிரைப்பார்—நறுஞ்
சந்தனங் குங்குமங் கரைப்பார். 16

பத்திதொறு முத்துவடஞ் சேர்ப்பார்—வார்
பவனியெதி ரலங்கரித்துப் பார்ப்பார்
குத்து விளக்கணி தீபமிடுவார்—கும்ப
குடமீது பூவிரிகள் நடுவார். 17

அரிபி—வும் வெள்ளிலையும் புரிவார்—வாச
வணிதாரும் புதுநீருஞ் சொரிவார்
வரிவளைக ளிருகையிலுந் தொடுவார்—தலை
வாசல் தொறும்மணி பூசலிடுவார் 18

எட்டு வரையதிர் முரசெட்ட—நானு
மிகலோக பரலோக மட்டுமங்கு
கொட்டி வருமத்தள மிடக்கை—நவுரி
கொம்புதவில் தாரை யொலிபம்ப 19

வேதசங் கீதமிடை பாட—வியல்
விஞ்சைபயில் வஞ்சியர்க ளாட
நாதமறை வாணர் புடை சூழ—விசை
நாவீறர் வீதிவரல் தொழவே 20

இலகுபல மணிகள் பூட்டி—நானு
மிந்துநுதற் சிந்தூரந் தீட்டிக்
கலக விழியுலவ மையெழுதி—நறுங்
கந்த பரிமள சந்தமுழுகி 21

காதுகவர் விரகவிழி மானே—பூங்
கனிகள் கனிந்தொழுகு செழுந்தேனே
போது கவர்குழல் மாதருடனே—இரு
புளக முலைகுழைய நடந்துடனே 22

மருக்குலவு திருக்குருகை மாறன்—வீதி
வரும்பவனி விரும்பியெதிர் சென்றாய்
திருக்குலவு முருக்கிதழ்வாயணங்கே! தற்
செயலன்றி மயல்கொண்டு நின்றாய் 23

ஏதையுவந் திருந்தனை பெண்ணரசே? விரும்பி
யேதேது நினைந்தனை சற்றுரைசெய்
கோதைநீ யருந்துயரங் கொண்டாய்—விள்ளக்
கூசுவதென் குறியதனாற் கண்டேன். 24

வன்னவனை தன்னை யிழந்தனையே—புள்ளம்
வாடிமிக நாடி யுழந்தனையே
மின்னுமணி யாபரணந் தோற்றாய்—கூடி
விளையாடும் பூவைகிளி போற்றாய். 25

அங்கமெங்குந் தங்கநிறம் பொலிந்தாய்—வாரி
யலையிலலை மாறாக மெலிந்தாய்
மங்கையர்கள் தங்களினம் மறந்தாய்—அடங்கா
மடலியென்று முடலெடுக்கப் பிறந்தாய். 26

அன்றமுத மின்றுசுற்றம் வரைந்தாய்—வருந்தி
அயனவில்மெழு கெனமனது கரைந்தாய்
குன்றுதனை வென்றதுணை முலையாய்—என்
குறிமுழுது மறியும்வகை யிலையால். 27

## மலைவளங்கூறல், விருத்தம்

மெய்யாக வினைபுகழ்ந்து முழக்காளை மடித்துமுன்றில்
மேவி மோக
மையாரும் விழிமருட்டி யொருகைமுகஞ் சேர்த்தியம்மா
வாவா வென்றே
பையாரும் பாம்பணையிற் கண்டுயில்வோன் சரணமலர்
பரவு மாறன்
பொய்யாத புகழுரைக்குங் குறமாது பொதியவளம்
புகல லுற்றாள். 28

## மலைவளம் சிந்து.

தெண்டிரைநீர் கொண்டுபெருங் கொண்டல்தவழ் மலையே
திங்கண்முமம் மாரிதரும் துங்கசவ மலையே
அண்டரொடு புண்டரிக வயனுமுறை மலையே
ஆதவனும் அம்புலியும் அருந்தவஞ்செய் மலையே. 29

பொருத்தமுடன் மதகரிகள் பெருத்தகரு மலையே
புலியுடன்வெங் கரடிசிங்கம் மலியுமெங்கள் மலையே
கருத்திருண்ட மான்மரைக ளொருத்திரண்ட மலையே
கடமாவும் வரையாடும் நடமாடும் மலையே. 30

நெருக்கிவள ரிருப்பைபுயர் வருக்கம்வளர் மலையே
நீண்டடர்ந்த புன்னாகங் கூண்டெழுந்த மலையே
மருக்கமழ்சந் தனமகிலந் தருக்கிளரு மலையே
பாரவுளிஞ்சி பாலகுரா படருமெங்கள் மலையே. 31

துன்னுகன்னி காரமகிழ் மன்னிவளர் மலையே
துலங்குசிறு தெங்கினங்க ளிலங்குமெங்கள் மலையே
பன்னிதென்ன மரங்குருந்து வன்னிவளர் மலையே
பயில்ஞான வசம்புவஞ்சி இயல்பான மலையே. 32

பாங்கில்வளர்ந் தோங்குகொன்றை நாங்குவளர் மலையே
பசுங்கடம்பு காஞ்சிநெல்லி விசும்படரும் மலையே
வேங்கைபலா குறிஞ்சிநிறைந் தோங்குமெங்கள் மலையே
விரவுநறை மருவுபுன்னை பரவுமெங்கள் மலையே. 33

இஞ்சிபல கிழங்குகொழி ஞ்சிவளர் மலையே
யேலமிலவங்கமொடு சாலவளர் மலையே
மஞ்சளதி மதுரமிக மிஞ்சிவளர் மலையே
மாசில்லா மணிகளொளி விசுமெங்கள் மலையே. 34

பூமாதும் புவிமாதும் போற்றுமெங்கள் மலையே
புதியபெரு நதியுதவும் பொதியமா மலையே
ஆமாறு தவமுனிவ ரடைந்ததிரு மலையே
அகத்தியனார் வாழுமலைக் குறத்திநா னம்மே. 35

துங்கவட வரைபொருவு திங்கள்பயில் மலையே
தோகைநட மேவுமுயர் துடரியெங்கள் மலையே
மங்கையர்கள் துகில்கவர்ந்த செங்கண்மால் அருள்கூர்
மாறன்மலை வளமனைத்துங் கூறவரி தம்மே. 36

ஒப்பிலாக் கடனுதன்—வேத
னூர்சேத்து மயோத்தி—வண்மை
யூபர்மா நகர்க்கன்றே—பொன்னி
யூடே பரிதுயின்றார்.

105. சாற்றுமு யர்பதத்தா—சையைத்
தவிர்த்து குறுங்குடியி—லினி
தமர்ந்தே காரிமகவா—யன்று
தம்மைத்தாம் தமிழ்ப்பாடினர்
மாற்றமே தெனத்தடுத்தே—பல
வரிசை கொடுத்தனுப்ப—வுள்ள
மகிழ்ந்தே களித்துறவாய்—மனை
புகுந்தே யினிதிருந்தார்.

விருத்தம்

106. அருமறைதேர் பொலிந்துநின்ற மாமால் வாழி
ஆயிரத்தெட் டிதழ்க்கமலத் தணைந்து வாழி
குருகைநகர் வாழிதமிழ் மாறர் வாழி
குலவுபுகழ் கருடேசன் வாழி வாழி
மருமருவு பூந்தாம மிலங்கு மார்பர்
மதுரகவி யெதிராஜன் நாளும் வாழி
தருவெனவே யருள்தான் சமயம் வாழி
தண்டமிழோர் வாழியனு தினமுந் தானே.

திருஞானமுத்திரை துணை

ஸ்ரீ பராங்குசப்பளளு

என்னும்

திருகூர்ப்பள்ளு முற்றும்.

ஸ்ரீ:

# குருகூர்ப்பள்ளின்

## செய்யுள் முதற் குறிப்பகராதி

PRINTED AT THE MADRAS LAW JOURNAL PRESS, MYLAPORE, MADRAS.

ஸ்ரீ

திருஞானமுத்திரைக்கோவை 9.

# ஆழ்வார்கள் வைபவங்கள்

(குருபரம்பரை முதற்பாகம்)

வடிவழகிய நம்பிதாஸர்
இயற்றியது.

பதிப்பாசிரியர்
பெரியன் வே. நா. ஸ்ரீநிவாஸய்யங்கார்
திருஞானமுத்திரைப் பிரசுராலயம்
ஆழ்வார்திருநகரி.

ஸ்ரீராமஜெயம்:

# முன்னுரை.

---

ஸ்ரீவைகுண்ட நாயகனான ஸ்ரீமந் நாராயணனது நியமனத் தால், தன்னுடைய பரிகரங்களின் அம்சங்களாய், இப்பூவுலகில் ஆழ்வார் ஆசார்யர்கள் பலர் அவதரித்து, நாலாயிரத் திவ்ய ப்ரபந் தங்களையும் அவைகளுக்குரிய வியாக்கியானங்களையும் திருவாய் மலர்ந்தருளியுள்ளார்கள். இவர்களின் தனித்தனியான அம்சங்கள், அவதரித்துள்ள ஸ்தலங்கள், வைபவங்கள், திருவாய் மலர்ந்தருளிய நூல்களாகிய விபரங்களை சவிஸ்தாரமாய் 'எடுத்துரைக்கும் குருபரம் பராப்பாவங்கள், பலபூர்வாசார்யர்களாலருளப்பட்டுள்ளன.

இவைகள் சம்ஸ்கிருதம் தமிழ் கலந்த மணிப்ரவாள நடையி லிருப்பதால், சுத்தத் தமிழில் கவிரூபமாய் சிற்சில அடியார்கள் இயற்றியுள்ளார்கள். இப்படியுள்ளவை ஐந்துவிதமானதென்றும், இவ்வைந்தில் இதுவும் ஒன்று என்றும், இது எத்தனை கவிகளைக் கொண்டது? எந்தமூலத்தை யனுசரித்தது? யாரால்செய்யப்பட்டது என்பதையும் (ஷை ஐந்தில் மற்றொரு குரு பரம்பரையாகிய) 'அரி சமய தீபம்' முன்னுரை கூறுவதாவது:—

முன்பிலும் பின்பழகிய நம்பெருமாள் முன்னம் மொழிந்த குரு பரம்பரையாம் வடசொல்லான, தன்புமி குசுலோகமீராயிரத்தைஞ் ஞூற்றினையு மழகப்பணடியிற் சேர்த்தே, இன்பமுறு மழகியநம்பி பேர்பூண்ட வெழிலுடையான் றமிழதனுவி சைத்த பாடல், துன்பறவைத் தருளியதீராயிரத்தின் றௌளாயிரமேல றுபத்தைத் தெனச் சொல்லுவாரே.

இக்குருபரம்பரை 2975 கவிகளைக்கொண்டது. இதன் முன் பாகமான 'ஆழ்வார்கள் வைபவங்கள்' (தனித்தனியாக) மொத்தம் 1449 கவிகளை சிற்சிலபெரியோர்களின் உதவியின்பேரிலும், பின்பாக

மான 'எம்பெருமானார் வைபவம் 1118 கவிகளை ஸ்ரீபரமஹம்ஸபரிவ் ராஜ காசார்யராயும், உபய வேதாந்த ப்ரதிஷ்டாபனாசார்யராயும் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவானமாமலை சின்னக்கலியன் இராமானுஜ ஜீயர் ஸ்வாமியின் நியமனத்தாலும் 1908, 1909-ம் வருஷங்களில் ஸ்ரீ உவே பண்டிட் P. R. கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமிகள் வெளிப் படுத்தியுள்ளார்கள். தற்காலம் இவைகள் கிடைக்க மார்க்கமில்லா ததைக் கருதி சென்ற ஆண்டுவரை வெளியாயுள்ள செந்தமிழ் பத்தி ரிகையில் அதன் உதவிப் பத்திரிகாசிரியராகிய ஸ்ரீ உவே இராமா னுஜய்யங்கார் ஸ்வாமி, பின் பாகமான 'எம்பெருமானார் வைபவம்' 1118 கவிகளையும், இதுவரை வெளிவராத நாதமுனி, உய்யக்கொண் டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார் வைபவங்கள் 264-ம் கைப்பிரதி பார்த்து வெளிப்படுத்தியுள்ளார்கள்.

இவைகளில் பாக்கியாகவுள்ள 134 கவிகளும் அவதாரிகை யாயிருக்கலாம் போலும்! இதன் விபரத்தையும், இந்நூலின் பூர்த் திக்குக் குறைவுபடுகிற இந்த 134 கவிகளையும் 'செந்தமிழ்' உதவிப் பத்திரிகாசிரியர் ஸ்ரீ உவே இராமானுஜய்யங்கார்ஸ்வாமி 'செந்தமிழ்' வாயிலாக வெளிப்படுத்தி வைத்தால் மிகவும் உபகாரமாயிருப்ப துடன் இந்நூலின் குறையும் பூர்த்தியாகும்.

இதன் முதல்பாகமாகிய ஆழ்வார்கள் வைபவங்கள் வெளிப் படுத்த ஆசைகொண்டு முதலாழ்வார்கள் பெரியாழ்வார் பிரபந்தங் கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. எம்பெருமான் திருவருளும், அபி மானிகள் ஆதரவும்கூடி பாக்கியும் வெளிவரச் செய்யுமாக.

இப்பாகங்களைத் தமது 'கான வித்யா ப்ரகாசினி' வாயிலாக வெளியிட்டுதவிய கான வித்யா அச்சாபீஸ் சொந்தக்காரராகிய அன்பர் S. பார்த்தஸாரதி அய்யங்காருக்கு எனது மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருஞானமுத்திரைப்
பிரசுராலயம்
ஆழ்வார்திருநகரி.
24-9-1932.

பெரியன் வே. நா. ஸ்ரீநிவாஸன்,
பதிப்பாசிரியன்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# * ஆழ்வார்கள் வைபவம்.

## க. முதலாழ்வார்கள் பிரபந்தம்.

1. பிறவிபல பிறந்திடவும் பிணங்கியவ னேடுயிர்க
ளுறவின்றிப் பகையாகி யரக்கர்களா யுயிர்மாய
வறமெலிந்து சோதிசில ரகப்பட்டார் தம்மொடும்போய்த்
துறவுசெறி யந்தாமம் புகுந்திருந்தோர் சூட்சியினால்.

2. மான்காட்டி மான்பிடிக்கு மதியினர்போல் வரியளிசேர்
தேன்காட்டுந் துழாயினான் சீவைகுந்த முத்தர்களுக்
கூன்காட்டா னான்காட்டி யுலகமுய்யும் பொருட்டாக
வான்காட்டு மயர்வில்லா மதிநலமு மகிழ்ந்தருளி.

3. வாழ்விப்பான் யோனியராய் முதலாழ்வார் கலைமண்ணிற்
றாழ்வில்லா வற்பசியோணம்மவிட்டஞ் சதையத்திற்
சூழ்புரிசைக் கச்சிமல்லை மயிலையெனுந் தொன்னகரி
லூழில்பொய்கை பூதம்பே யெனுநாமத் துதிப்பித்தான்.

வேறு.

4. எமவுலகி லிடர்நீங்க வெவ்வுயிர்க்குங்
காமக் குரோதாதி கால்குலையச் செந்திருவின்
நாமம் விளங்க நறையார் பசுந்துளவத்
தாமமுடியான் றமராய மூவர்களும்.

வேறு.

5. ஒருவரை யொருவர் காணா துரைத்தவப் பதிகடோறுந்
திருவளர் மார்ப னன்றி செகத்திலோர் துணைகாணாதே
வருபகல் பலவும்வைகி வருநா ளொருநாண் மாயக்
கருநெறி கடக்கின்றாரைக் காசினி யெங்குநாடி.

6. திரிந்துநாங் காண்டல்வேண்டு மெனத்திரு வுளத்திலெண்ணிப்
பரிந்தெழு சிந்தைப் பொய்கை பழனஞ்சூழ் கச்சி நீங்கி
விரிந்தெழு கருணை பொங்க விடைகொள்வார் கோவலூரிற்
புரிந்தவன் புடையமாய னருளினா லதனுட்புக்கார்.

---

* இது பழைய நூலிலிருந்து பெரியன். வெ நா. ஸ்ரீனிவாஸனால் எடுத்தெழுதப்பட்டது.

7. புக்கவர் கமலக்கண்ணன் பூங்கழ லினைந்து வாழ்த்தி
யக்கர மெட்டுமுள்ள படியினா லமையவோதி
முக்கணான் சாபந்தீர்த்த முதல்வனென் றன்புசெய்து
தக்கவப் பதியி லன்று தங்குவான் சமைந்தபோதில்.

8. பூதமு மல்லை யென்னும் பொன்னகர் தன்னு ணின்று
வேதநா யகற்காளாய மெய்யரை யெய்த நாடிப்
பாததா மரைக ளேத்திப் பரவுவான் பரிந்த வன்பாற்
போதுவார் கோவலூரிற் பூவைப்பூ வண்ணனைய.

9. அருமறை முதல்வன் கூட்டு மருளினா லதனுட்சென்று
கருமுகில் வண்ணன் செம்பொற் கழலினைந் தன்றவ்வூரின்
மருவிட வந்தநாளிற் பேயரு மயிலை நீங்கித்
திருவருட் செயலால் வந்து திருக்கோவ லூரைச்சேர்ந்தார்.

10. பொருந்திய மூவர்தாமும் புனிதனை நினைந்து வெவ்வே
றிருந்தன ரிரவிபட்டா னிராப்பொழு தடங்கிவைகத்
திருந்திய பொய்கை சென்றோர் வேதியன் மனையிற்சேர்ந்து
நெருங்கிடை கழியின் மன்னித் துயில்கொள்வா னினைந்து
சார்ந்தார்.

வேறு.

11. பொருவினெறிப் பூதத்தார் புகுந்ததனா லுறைபவரார்
கருமினிராத் தங்குமிட மெனப்பொய்கை தான்விழித்திங்
கொருவருக்கே கண்டுயில வுள்ளதிட நீரணைந்தா
லிருவருக்கு மிருந்திடலா மெனத்திறந்தார் திருக்கதவை.

12. முன்சென்றார் பின்சென்றார் முகங்காணா ரிருளின்கண்
பொன்சென்ற விடைகழியி லிருவர்களும் புகுந்திருப்ப
மின்சென்ற சுடராழி விண்டுவருள் கொண்டுவரப்
பின்சென்ற பேயாரு மம்மனைவா யிற்புறமாய்.

13. சென்றாரிவ் விடைகழியிற் செறிபவரா ரிடமுளதோ
குன்றாத வன்புடையீர் கூறியிடு மெனவுரைப்ப
நன்றாய்முன் னொருவர்படுத் தோமிருவர் நன்கிருந்தோ
நின்றீர் நீர் வந்தணைந்தா னின்றிடலா மூவர்களும்

14. எனவுரைப்பத் திறவுமென்றா ரிருந்தவர்தா டிறந்துநின்றார்
மனமகிழ்ந்து சென்றவரு மற்றவர்க ளுடனின்றா
ரனவயல்சூழ் கோவலூ ராயனா மாயவனும்
புனைமலர்ச்செந் திருவோடும் புகுந்திருளி லாங்கவரை.

15. நெருக்கினா னெருக்குண்டு நின்றாழ்வார் மூவர்களு
முருக்காட்டா திவணெருக்கி யுறைபவனைக் காண்டுமெனுங்
கருத்தினாற் சுடர்ஞானக் கனல்விளக்கை யேற்றினார்
திருக்கண்டேம் பொன்மேனி கண்டேமென் றுடன்றெளிந்தே.

16. ஆடினார் குணலைக்கூத் தங்கைகொட்டி நான்மறையைப்
பாடினார் பாரோடும் பணிந்தெழுந்து பதுமத்தாள்
சூடினார் சுகவடிவைப் பிரிந்ததுன்ப மவைதீரக்
கூடினா ரானந்தக் கொழுஞ்சோதிக் கடற்குளித்தார்.

17. அத்திக்கா யுட்கீட மத்திநடு வாதியந்த
மெத்திக்கா லும்மறியா வகைபோனின் னிடையிலண்டந்
தொத்திப்பா மூறவதனுட் பிரமனா னெனத்தோன்றி
வத்திக்கா ருனையறியா ரென்றாலிம் மண்ணுலகில்.

18. பேரானந் தச்சோதிப் பிரளயமா நினைபடையு
மாராத காதலரா யகப்படுவார் தமைக்காணேன்
நாராயணாசெய்யுந் திறமறியே னவில்கவெனக்
கூராழி சங்கேந்துங் கொண்டலுடன் குறித்துரைத்தார்.

19. மூவர்களு மவைகூற மூவுலக முண்டுமிழ்ந்த
தேவர்கடே வன்னகைத்துச் செப்புவா னீர்வேட்டா
ரேவர்கடா மடைத்துடைத்தா லூடுவா ரிரும்புனலோ
டாவயினா மடைப்பதல்லா லருள்கவென வாழ்வார்கள்.

20. செங்கமலைத் தனிவாழ்வின் சேவடியி லுறப்பணிய
வங்கமுற மூவரையு மெடுத்தணைத்தீ தருள்புரியு
முங்கள்பொருட் டாலுலகந் திருந்தவின்ப முண்பதியான்
பங்கமிலா நெறியுடையீர் பார்முழுதுந் திருத்துமென.

21. எம்பெருமா னின்றனனுங் கிளையில்பெருங் கருணைமிகு
மன்பர்களா மூவர்களு மச்சுதன் சீரருளோங்கி
யின்பமயமேயென் றிரங்கிக் கரைந்தழுதங்
கும்பர்முதன் மாநிலத்தோருய்யும் வண்ணமின்னிசையால்

வேறு.

22. வையந் தகளியென்றும் வார்கடலே நெய்யென்றும்
வெய்யகதிரோனை விளக்கேற்றி னேனெனவுங்
கையம் புதத்தான் கழற்கேறு மந்தாதி
பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு கட்டுரைத்தான்.

23. அன்பே தகளியென் றார்வமே நெய்யென்று
மின்புருகு சிந்தை யிடு திரியாமென்று
மின்பொருவு மாழி யியலன் கழற்குலகிற்
புன் புறவி நீங்கவிளக் கேற்றினார் பூதத்தார்.

வேறு.

24. திருக்கண்டே னென்றுபேய் செப்பியசீர்ச் சொற்றொகையா
லிருக்கின்முடி வானானை யேத்தினர் சீர்ச் சொன்மாலை
பெருக்குநெறி மூவருஞ்செய் பேருண்மூ வந்தாதி
கருக்கடலை யுயிர்க்கடக்குங் கப்பலெனும் படிகழறி.

25. வாழ்வித்தா ருலகனைத்தும் மாமாயைப் பெருப்பிணியை
யாழ்வித்தார் முதன்மூவ ரெனத்தோன்று மாழ்வார்கள்
வீழ்வித்தார் திங்கடொறு மும்மாரி மெய்ஞ்ஞானஞ்
சூழ்வித்தா ரனைவரையு மரிநாமஞ் சொலவைத்தார்.

26. இவ்வண்ண முலகனைத்துந் திருத்திவா ழிவாருளரு
மெய்வண்ணப் பாமாலை விடைவார்க் கேணியாய்
மைவண்ணப் பரஞ்சோதி வைகுந்த மேற்றுவிக்கப்
பொய்வண்ண மில்லாதார் பலகாலம் போக்கினார்.

27. அப்படியே பலகால மற்றதற்பின் மூவர்களு
மெய்ப்படிந்த பரஞ்சோதி வெள்ளத்தான் விடனைந்தார்
பொய்ப்படிந்த வறுமையப் புரையிருளுக் கருக்கர்கள
யிப்படியை விலக்கினா றிறைபிரிவுக் காற்றமல்.

ஆழ்வார்கள் வைபவம்— க. முதலாழ்வார் பிரபந்தம்.

பாசுரம் 27-ம் முற்றும்.

## 2; பெரியாழ்வார் பிரபந்தம்.



1. பொய்கை பூதம் பேயென்னப் புகல வரிய முதலாழ்வார்
செய்ய கமலத் திருவடிக டிருந்த விறைஞ்சித் திருவருளான்
மெய்கொள் புதுவை நகர்வந்த விஷ்ணுசித்தன் கதைவிரிவை
யையம்புலனா லலைப்புண்ணா மடிபேனறிந்தபடியறைவேன்.

வேறு.

2. விண்ணாட்டு ளந்தாம வியன்புரிசை வேந்தனுக்கு
மண்ணாட்டு ளான்மாவாந் தவசமருள் வழிநடத்தி
யெண்ணாட்டு மூவர்களு மேவியபின் னிருநிலத்தின்
கண்ணாட்டி நீங்காத களப்புலனாய்க் குறும்புசெய்யும்:

3. வேடர்களோ ரைவர்களு மேதினியின் மிக்கவிருட்
காடுமலை யன்றிவெளி யேயிடமாய்க் கவித்திலங்கு
நாடுமதின் கிழாய நற்பதியு நசிப்பித்து
மூடவிலங் கவைசாத்தி முடித்தனர்கள் புவிமுழுதும்.

4. அத்திறத்தார் புவிமுழுது மல்லலுறும் படிகண்டு
மெய்த்திறத்தான் மெய்வீட்டில் வீற்றிருந்தே மூலகாள்வான்
பொய்த்திறத்தார் புலைச்சார்பும் பொடியாகக் கருடனைத்தன்
சித்திரத்தாற் பெரியாழ்வா ராயுலகைத் திருத்தென்றான்.

5. என்றிறைவ னருள்புரிய விறைபருந்தந் திருவாதனு
மொன்றிபரி ரன்பினு டன்கொண்டு புவியிலிறை
சென்றதுயில் கொண்டவருட் சிறந்தவில்லி புத்தூரி
னன்றிதரும் வேதியரிற் சோழியரென் றேநவிலும்.

6 குலத்தினொரி யுடைமுகுந்தர் தந்தையாய்க் கோதில்வர
நலத்தினார் தேவியார் பற்புமைநற் றாயாராய்
நிலத்தினிருள் கெடத்தோன்று மருக்கனென நிலவுமுயிர்
புலக்கூடா நிசியொழிக்கும் போதமாக் கதிரவனாய்.

7. ஆனியெனுந் திங்களினில் வளர்பிறையிலருஞ்சோதி
மேனியனார் சோதியினில் விண்ணவர்பூ மழைசொரிய
வானில்வரு முகிலொலியு மறையொலியு மாறுசெயப்
பானிலா முகத்தியர்கள் பல்லாண்டி னிசைபாட.

8. அறந்தழைப்ப மெய்ஞ்ஞானம் யாவர்களு மறிந்துய்ய
மறந்தீய வேரோடு மடியவஞ்சம் பாழாகத்
திறந்திறம்பா துயர்ந்தோங்கத் தீவினைகால் குலைந்தோட
வுறங்கினு னுடுகடா வினுதே யுயிர்நோக்க:

9. திருவவதாரஞ்செய்தார் செகமுழுது மீடேற
மருவமரும் பொழிற்புதுவை வடபெருங்கோ யிலானன்று
தருகுழவி தனைநோக்கிச் சதஞ்சீவ னெனவாழ்த்திப்
பொருவவருக் கவரேயாய்ப் புவிமீதில் வளர்ந்திடுநாள்.

10. பூதமுத லுயகன் சீர்ப் பூங்கழற்கீழ்ப் பசுந்துளவா
லேதமிலாப் பூமாலை பாமாலை யெனுமிரண்டு
மாதரவி னுற்கட்டி யருளவல்ல வாழ்வார்க்கு
வேதநெறி விஷ்ணுசித்த னெனுநாமம் வியந்துரைத்தார்.

11. தருக்காக்கு மிந்திரனுஞ் சதுமுகனுஞ் சராசரமு
மெருக்காக்குஞ் சடையானு மிறைஞ்சவெய்தா திடர்க்கரியி
னுருக்காக்கும் பெருமானை யுவந்துபல்லாண் டெனவோதித்
திருக்காப்பன் றிடுவார்க்குத் திருக்காப்புஞ் செய்தனரால்.

வேறு.

12. பூதத்தனி நாயக னுயலையார் புனலுட்டுயிலும் புயன்மேனியி
னைப்
வேதத்தனிநாயகனே யெனவான் விடையாராயனுர்
விண்ணோர்கோமா
ஞேதிக்கரை வாரறியானெறியா னுலகிற் றமர்கட்குதவுந்
திருமால்
பாதக் கமலங்காணீரென்றூர் பாதக்கமலங் கண்டார் பலரும்.

வேறு.

13 ஒத்தவரு மிக்கவரு மன்றியொளி ரும்பன்
ஞேதமவை யேழுமல கேழு மலையேழு
மித்திறம லாதுபிறி தில்லையென வொல்லை
யின்பமுறு மீமடியி னுறுற வளர்தான்
முத்துநிறை யன்னநக பத்திகள் விளங்கு
மொய்ம்மல ரிதழ்ம்பிருது வாமுளரி யந்தாட்
பத்துவிர லுங்காண்மி னென்றவர் பதத்திற்
பத்து விரலுந் தொழுது பத்தர்கள் பரிந்தார்:

வேறு.

14. வினைக்கா றியொடு மிக்கவி ரண்டை
வேதனை யாலமிடற்று னானைப்
பனைக்கா னன்மறை யைப்பக லோனைப்
பலவைக் கனிவா யுறவுண் டுறவோர்
துணைக்கா லாகக் கொண்டிலை மீதிற்
றுயிலும் பெருமா டிருமா லழகார்
கணைக்கால் காண்மி னெனக்கசி வோர்தங்
கணைக்கால் கண்டு களித்தன ரன்பர்.

வேறு.

15. பாராரு நூற்றுவரைப் பாழாக்கிப் பாண்டவருக்
காராத வின்ப மருளப் பிறந்த பிரான்
சீரார் கருணைத் திருமுழந்தாள் காண்மினென்று
னோரார் முழந்தாள் யாவருங்கண் டின்புற்றார்:

16. வங்கக் கடற்றுயின்ற மாமான் மதுசூதன்
வெங்கட் களிறடர்த்தாண் டைவர்களை வெல்லுவித்த
செங்கமலக் கண்ணன் றிருக்குறங்கு காண்மினென்று
ளங்கக் குறங்கை யனைவருங்கண்டாதரித்தார்.

17. புன்புலத்தார் பாரம் புவிமடந்தை யாற்றரிதென்
றன்புறநின் றேத்த வவனியின்கட் போந்த பிரான்
மின்பொறுத்த ஜோதி விளங்கு முத்தங் காண்மினென்று
னின்பமுறு முத்தம் யாவருங்கண் டின்புற்றார்,

18. வையமுழுதும் வயிற்றுள்வைத்துத் தேவகியா
ருய்ய வழகா ருதரத் துதித்த பிரான்
மைய னையஜோதி மணிமருங்குல் காண்மினென்ற
வையன் மருங்கை யனைவருங்கண் டாதரித்தார்.

19. சத்தம் பரிச முருவந் தனைக்கந்த
மொத்த குரம்பைதொறு முட்டியென்னை யாட்டுவிக்கு
மத்தன் றிருவுந்தி யாயிழையீர் காண்மினென்ற
நித்தனெழி லுந்தி கண்டு நீணிலத்தோர் வாழ்த்தினர்.

20. கொல்லு மதவானைக் கோடுங் கொடியவிறன்
மல்லுந் தொலைப்ப வடமதுரை வந்துதித்த
செல்லுருவ மன்னன் றிருவுதரங் காண்மினென்று
சொல்லும் பிரானுதரம் போற்றினார் தூயோரே.

21. சங்கக் குழையான்கைச் சாபந் தவிர்த்திரைக்கும்
பொங்குகடலேழும் பொடிசெய்து வந்தபிரான்
செங்கமலை தங்குந் திருமார்பு காண்மினென்றான்
பங்கமில்லா மார்பழகு கண்டார் பரிவோடே.

வேறு.

22. பெருத்தோங்கு நூற்றுவர் மாளப் பிறந்த
குருத்தோங்கு நான்மறைக் கோவலர் குட்டன்
றிருத்தோளிருந்தவா காணென்றான் றோள்கள்
கருத்தோங்கு மன்பர்கள் கண்டார் களித்தே.

23. சூழவிசும்போடுமுன் றொல்லுல குண்டவன்
ஆழியுஞ் சங்கு மடங்கு கரங்களை
யேழையர் காண்மின்க ளென்றவன் கைத்தலம்
பாழிய மண்ணவர் கண்டு பணிந்தார்.

24. பெருக்கண்ட முட்டிப் பிறங்கிய பொன்ன
உருக்கண்டங் கண்டே முலகுமுண் டான்றன்
றிருக்கண்டங் காணென்ற சேய்களங் கண்டு
கருக்கண்டங் கண்டனர் கற்றறிந் தோரே.

25. முன் றொண்டை கண்டாமன் மூவுலகு முண்டவன்
செந்தொண்டை வாய்காண்மி னென்றுபின் செப்பமுன்
றன்றொண்டு தானே சகியாய்ப் பிறந்தவ
னின்றொண்டை வாய்கண்டி யாவர்களு மின்புற்றார்.

26. பூக்குந் திருவுந்திப் பூவை நிறத்தமலன்
வாக்கு நயனமும் வாயுமுறு வலுஞ்சீர்
மூக்கு மிருந்தவா காணீரென்றான் முகத்தி
லாக்குமதுவதுகண் டந்தமார்கள் வாழ்த்தினார்.

27. திங்கள் வதனத் திருவனைய தேவகியாற்
றங்கிப் பிறந்தாயர் தம்பால் வளர்ந்தபிரான்
செங்கமலக் கண்காண்மின் சேயிழையீரென்றவர்த
மங்கமலக் கண்கண் டனைவர்களும் வாழ்த்தினார்.

## 2; பெரியாழ்தார் பிரபந்தம்.

28. நெருப்புருவத் தான்சாப நீக்கிவரு நீலப்
பொருப்புருவங் கொண்டவிறை பூமகடன் கேள்வன்
றிருப்புருவங் காண்மினென்ற செல்வன் புருவத்
திருப்புருவங் கண்டாங் கிமையவரும் வாழ்த்தினர்.

29. அகரத் தனிச்சோதி யாயர்கள் கோமா
னுகரத் திருவோ யுறத்திற் றறித்தான்
மகரக் குழையிரண்டுங் காண்மினென்ற வள்ளல்
பகர வரியகுழை பார்த்தமரர் வாழ்த்தினர்.

30. உற்ற புவன மனைத்துமுதிப் பித்தகனுட்
சிற்றிடைத் தேவகியார் சீரார் வயிற்றுதித்தா
னெற்றி யிருந்தவா நேரிழையீர் காண்மினென்று
னெற்றைப் பிறைநுதல்கண் டுத்தமர்கள் வாழ்த்தினர்.

31. ஆராயும் வேத மயர் வெய்த வண்டர்கையி
லோரா ரணை கயிற்றாற் கட்டுண்ட வெம்பெருமான்
சீரார் குழல் காண்மி னென்றான் றிருக்குழல்கண்
டோரா முற்றாரு முண்மகிழ் வோடாடினர்.

வேறு.

32. இவ்வண்ணம் பாத மாதியாய்க் கேச மந்தமா யிலங்கு மெய்ஞ்ஞான
மெய்வணக் குழவி யவையவச் சிறப்பை மேதினியுள்ளவர் தமக்கு
ஐமவனத் திறைசேர் புதுவைமா நகரின் மறையவர் மகிழ்வொடு முறைப்பப்
பொய்வணத் துயரைக் கடிபவர் பலரும் புகுந்தனர் முகுந்தன தகத்தில்.

33. ஆணவந் திரண்டு ளுருவெடுத் துலாவு மைம்புல வேடர்களணியாம்
பூணவம் பூண்டு பொய்ப்பரி மீதாய்ப் பூமியைப் பொடிசெய் வார் செயலைக்
காணவந் தவரைக் காணவந்தவர்க ளுடம்பெலாங் கண்ணிலா கையினு
லாணவ முறக்க மவம்பிறப் பவமென் றுளங்கசிந் தாருகினைந் தொசிந்தார்

34. எண்ணிநின் றிறைஞ்சிப் பாலனை நோக்கி யிரங்கினார் வாக்கினு லிசைப்பார்
புண்ணியக் கொழுந்தோ நான்மறைக் கொழுந்தோ போதத்தின் பொலிசுடர்க் கொழுந்தோ
வெண்ணிய சாந்தி கருமெழிற் கொழுந்தோ விரைப்பதோர் கமையருட் கொழுந்தோ
விண்ணிய லமுதின் சுவைதிரண் டதுவோ வேதியர் தவந்திரண் டதுவோ.

35. தந்தைதாய் செய்த தவப்பயன் றானோ தத்துவத் தற்றமெய்ப் பொருளோ
விந்தமா நிலத்தோர் செய்தவப் பயனோ விலங்கு வானவர் செய்ததவமோ
கந்தநாண் மலரோன் வாசவ னாக்கன் காண்பரும் பரஞ்சுடரொளியைக்
தந்துநா முய்ய விந்ததோ ருருவோ வென்றென்று சாற்றி வாழ்த்தினரால்.

36. இப்படி படியிற் பாலனைக் கண்டார் யாவரு மிரங்கி நின்றேத்த
மைப்படி கண்ணார் மாதர்கள் பலரும் மகப்பெறு மற்புமைத் திருவு
மெய்ப்படிந் திலங்கு குழவி யோடளாவி மிது மனுபவ விளையாட்டின்
கைப்படிந் திலங்கும் பருவமோர் பத்துங் கருமுகிற் குரைத் தவற் றுரைத்தார்.

37. சிறுடைக் குழவி யிணையடியாதி திருமுடி வரையினி லணியா
மேறுடைச் சதங்கை சுட்டிமற் றிகனுக் கிடையிடை பூண்பன கமலத்
தாருட னணிந்து வளருநாளொருநாட் டையலார் தம்பரா வமுதைக்
கூறிய தவத்தோர் செவிப்புல னிறைய்ய கொள்ளுநீ ளமுதெனக் கொடுத்தார்.

38. இன்னமு தருந்திச் சவுள் நான் மறைக ளிசைத்தவர் செய்துமுப்புரிநூ
றன்னைபு மந்நூ லறைந்தவப் படியே தரித்துமா னுரிமுஞ்சி தரித்து
மன்னிய பிரமசாரியாய்ப் புவியில் வாழுநாண் முழுவதும் வாழ்வா
ரன்னம தூர்தி தாதையா ரடிமை யாருதா மென்பதை யறிந்தார்.

39. அத்திற மறிந்து வடபெருங் கோயி லுடையவ ரடியிணை வணங்கி
யெத்திறஞ் செய்தா லவருள மகிழு மெனவிறை திருவவதார
மெய்த்திறத் தாரின் மூன்றினிற் கஞ்சன் விறல்கெடப் பிறந்தவர்தமக்குச்
சித்திர மாலா காரர்தம் பூவிற் றிருவுள மகிழ்தல்சிந் தித்தார்.

40. அதுவலா வடிமைத் திறத்தினுக் குரிமை யிலதெனா வகத்தி னுட் டெளிந்து
மதுமலர்த் துளசி மல்லிகை யலரி சண்பகம் வளர்மதுப் பிச்சி
புதுமதுப் பொங்கி வளர்கழு நீர்கள் செவ்வந்தி புகழுறு கமல
மிதுவது வென்றி றைவனுர் சாத்தற் கிசைவன நறுமலர் யாவும்.

41. ஆக்கிடு நந்த வனங்கள் பற்பலவு மணிதிகழ் பொய்கைகள் பலவு
மாக்கிமற் றதனு ளலர்மலர் போக்கியரும்புவிட் டப்பொழு தலரும்
பூக்களைத் தெரிந்து புழுக்கடி போக்கிப் பொய்யிலா மெய்யனுர் புனைதிர்
மூக்கிலம் மணஞ்சென் றணைந்திடா வண்ணமூடி வாய்புதைத்து முக்குணத்தில்.

42. துன்பகல்கிரண்டுந் துடைத்துமெய்ஞ்ஞானச் சுடர்தரு சாத்திகத் துணிவா
லன்பனுர் திருப்பூக் கூடையின்முன்ன மறைந்தசீர் நறுமல ரமைத்து
முன்பினுர் கூடை யிரண்டொருகோலின் முறையினுற் கோத்தவைகாவி
பென்பெலா முருக வானந்தவாரி யிருகணு லிடையறு தொழுக.

43. பங்கய வடிபேர்த் திடுந்தொறு மதனுட் பட்டபுற் பசுமை கொண்டோங்கப்
பொங்கிய சாமு மசாமு முருகப் பூமகண் மனமொடு வாக்கு
மங்கமுங் குழைய நடந்தவர் கிடந்த வச்சுதன் வடபெருங் கோயி
றங்கிய திருமா றிருவுள முவப்பத் தடமலர்த் தார்பல சமைத்தே.

44. பகலொரு சாமங் கழிந்தபின் னொளிக்கொள் பரஞ்சுடர் வடபெருங்கோயிற்
புகலருங் கருணை யிறைவனை வணங்கிப் பூமலர்க்காவினிற் புகுந்தே
யகலம துடைந்தாய் நொய்யதாய்க் கைசேர்ந் தழகுறு கொட்டவ னெடுத்து
சகலரு மிரங்க விருநிலங் குடைந்து தட்டுற நித்தியத் தலத் தில்.

வேறு.

45. மருவேரு மல்லிகையுஞ் சண்பகமும் வளர்துளவு
மிருவேலி தருதளிரு மிலாமிச்சி னெழின்மூடுங்
கருவேரை யறுத்தபிரான் கயிங்கரிய முதிர்ச்சிதருந்
திருவேர்வி லானந்தக் கண்ணீரிற் சேறு செய்தே.

46. வைத்து நன்னீ ருறப்பாய்ச்சி மாயனிடை மடைமாறுப்
பத்தியினர் மடைமாற்றிப் பகற்பொழுதைக் கழித்ததற்பி
னெய்த்தநறு மலரந்தித் திருமாலை நேயத்தாற்
பைத்தபாம் பணைக்கிடந்த பரமனுக்குச் சமைத்தளித்தே.

47. மங்குறோய் மணிமாட வடபெருங்கோ யிலர்தமக்குப்
பொங்குமதுப் பொழிகாவிற் புகுந்துபணி செய்வதற்குக்
கங்குலெனத் தடைசெய்த கயிங்கரிய விரோதியை நொந்
தங்கமிடிந் திருந்தாழ்வா ரருணவுதை யத்தெழுந்தே.

48. நீராடிக் கற்பனையா னியமத்தின் றுறைமுடித்துங்
கூராழி சங்கங்கைக் கொண்டபிரான் றனைவணங்கிப்
பாரோரும் விண்ணோரும் பணிந்தேத்தப் பசுந்துளபத்
தாரேறு மெழிற்கூடை தாங்கி நந்த வனஞ்சார்ந்தும்.

## 2; பெரியாழ்வார் பிரபந்தம்.

வேறு.

49. சிலபகல் கடத்தினாச் செயல்கண்டு புதுவை மன்னும்
புலவர்களிவரை வாழ்த்திப் பூங்கழ லிறைஞ்ச வன்னார்
மலமறுத் திறைக்காட் செய்யு மதியளித் தவர்பான்மாறா
நலமரு ளாழி சங்க நற்பொறி நல்கி யாண்டார்.

50. எருடைத் தொண்டரோடு மிலங்கைசெற் றவற்கு நற்பூத்
தாருடன் சமைத்த மாயன் றாளிணை வணங்கு நாளிற்
பார்முழு தாளு நீதிப் பாண்டியர் குலத்திற்கொண்டு
சீர்பெற வவனிகாக்குஞ் சீவலதேவ னென்றோர்.

51. தென்னவன் மதுரை மன்னிச் சிறந்தர சாளுநாளின்
மன்னுமந் நகரிலுள்ள மாந்தர்கட் காசாலெய்து
மின்னலு மிதழுங்காண வேண்டுமென் றிராக்காலத்தப்
பொன்னகர் வீதியெங்கு மொருவனாய்ப்போய்மீள்போதில்.

52. திருநகர் காவலாளர் செழுமணிப் பாரிபோட்டு
வருபவ ரெதிரே மன்ன மன்னவன் மறைந்தோர்நீதி
யருமறை யந்தணாளன் றிண்ணையின் மறைய வாங்கே
யொருவனோர் மூச்சனாகி யுறங்குவா னுயிர்ப்பக்கேட்டான்.

53. கேட்டமெய் நீதி மன்னன் கிள்ரொலிப் பாரிக்காரர்
கூட்டமவ் வீதி நீங்கக் குவலையந் தாங்குங்கையிற்
பூட்டிய வுடைவாளோடும் புகுந்தறி லுறங்கு கின்றான்
மாட்டனைந் திருந்தானோர் கொலிவனென மனத்திலெண்ணி.

54. இருந்தமன் கிடந்தான்றன்னை யெழுப்பி நீ யாவனென்று
இருந்துமின் னுறையாற் கூறத் திண்ணையிற் றுயில்கொள்வோ
னும்
வருந்துயில் யாவு நீங்கி மறையவ னாகு நானென்
றருந்தவன் கூறமன்ன னவனொடு மறைவதானான்.

55. வேதியர் குலத்து ளீரேல் வெறுமையுற்றிவண்ந் துஞ்சு
நீதியே தறைக வென்றான் மன்னவனெறி நின்றோங்கு
மூதிய மறிந்த பார்ப்பா னுரைப்பனான் கங்கை யாடி
யாதியெம் மிராமசேது வாடுவே னனைத்தேனையா.

56. என்றவனுரைப்பக் கேட்டாங் கிருநில முழுது மாளும்
வென்றிவேல் வேந்தனந்த வேதியன் றன்னை நோக்கி
நன்றிசேர் கதைகள் போமேன வில்கவென் றறையப் பார்ப்பா
னென்று நானறியேனையா வுளதொரு கிரந்தமென்றான்.

57. ஆங்கதை யருளு வீரென் றரசனு முவந்து கூற
வோங்குசீ ரந்தணாளனுரைத்தன னுரைப்பவையந்
தாங்கிய மன்னர் மன்னன் சாற்றுவீர் பயனையென்றான்
மூங்கரு மறியும்வண்ண மொழிந்தனன் றெளிந்தசொல்லால்.

58. மாரியின் காலந் றுய்ப்பான் மற்றுள காலத் திட்டுங்
கூரிய விருளிற் றுய்ப்பான் கொழுஞ்சுடர்ப் பகலிலீட்டுஞ்
சீரிய விளமை தன்னின் மூப்புக்குஞ் சிறப்பாலீட்டு
மேரியல் பதனாலிம்மை தன்னிலே மறுமைக் கீட்டும்.

59. என்பதை யாயன் சேட்டாங் கிரங்கி நைந் துருகி யந்த
வன்பனை யுடன் கொண்டேகி யளவறு நிதிய மீந்து
புன்புல னற்று பேகென்றனுப்பியப் பொழுதே தானுந்
தன்பெருங் கோயில் புக்கான் றடமணி வயிரத் தோளான்.

வேறு.

60. வந்துமனை புக்கபுவி மன்னவர்கண் மன்ன
னந்தண னுரைத்தபொரு ளாய்வுறுமெய் நாவின்
முந்தவரு மொன்றுட னிரண்டுமுடி வெய்து
மெந்தவகை யான் மறுமை யெய்துமென வெண்ணி.

61. இருந்தன னிருந்துழி யிருட்பொழுது மாயா
வருந்துயரு மாயவெழி லாதவ னெழுந்தான்
றிருந்துநியமத் தொழில்கள் செய்துமறை வாழ்வைத்
தருந்தவர்கள் கொள்வபல தானமு மளித்தே.

62. அண்டமுக டுருவி யாசற நிமிர்ந்த
மண்டல மிலங்குமணி வாயிலுற மன்ன
னெண்டரு திசைப்புவியின் மன்னவ ரிறைஞ்சத்
தண்டாள மார்பனுயர் தானையர் வணங்க.

63. எய்தியரி யாசனம தெய்தியிட ரற்ற
வைதிகர்க ளாசினொடு மன்னவெழின் மன்ன
னுய்திற மறிந்திடு முபாயமவை யெண்ணிச்
செய்திற மறந்துவளர் தென்னவ னிருந்தான்.

வேறு.

64. பூங்கழற்கால் விறற்றென்னன் புக்கிருக்கு மவையின்க
ணாங்கவற்குப் புரோகிதனா மச்சுதன் சீரருள் வடிவைத்
தாங்குமெழின் மனத்தினனாய்ப் தத்துவனைப் பிரியாதே
யோங்குமடி யவராலும் பழவடியா னெனுமுறையில்.

65 உற்றவனாய்த் தென்னவனுக் குயிர்த்துணையா யறமன்றி
மற்றறியா நிலையானாய் மறைநாலுங் கற்றவனாய்
செற்றமிலா மனத்தினனாய்ச் செல்வநம்பி யெனுநாமம்
பெற்றவனா யெதுவரினும் பேராத நிலையானாய்.

66. உளனொருவ னவன்வந்திட் டோங்கியசீர்த் தென்னவன்முன்
னளவிறந்த மகிழ்ச்சியொடு மணைந்தருகோ ராசனத்திற்
றுளவநெடு மணிமுடிமா ரோத்திரம்வாக் கேந்தவஞ்சா
வளவனுக்குஞ் சோனுக்கு மன்னவவாழ் கெனவிருந்தான்.

67. பொய்மையற்ற மறையோனைப் பூபால னுறநோக்கி
மைமையெனும் புலைச்சமைய மயக்கிடையிற் படாதடியே
னிம்மையிலே மறுமைதனக் கியற்றுவதைப் படிபொன்று
மெய்மையைநா னடைபுநெறி செல்வநம்பி விளம்புகென்றான்.

வேறு.

68. முத்திசித் திக்குமாறு மொழிகென மன்னன்கூறு
மத்திரு மொழிகேட்டுள்ளத் தந்தணனன்புகூர்ந்து
தத்துவமறிய வேண்டு மன்னவர் தலைவ வென்றான்
மெய்த்திற மருள்வார் யாரென் றரசன்வே தியனைக் கேட்டான்.

69. படிமுழு தாளுஞ் செல்வம் புன்னுனிப் பனியென் றெண்ணி
முடிவிலாப் பேரானந்த முத்திநீ விருப்ப லாலே
விடிவிலா மாயா கங்குல் விடியும்வீ டெய்தக் காட்டு
மடிகள்வே தாந்தம் போனோ ரருள்வர்நீ யஞ்சலென்றான்.

70. வேதியனஞ்சலென்ற மெய்மொழி விளக்கங்கேட்டுப்
பூதல முழுது மாளும் புண்ணியன் மகிழ்ச்சி தாங்கி
யோதுமெய் வேத வாண ருறைவதைத் தலத்தி லன்னோர்
பாத தாமரைக ளண்போய்ப் பணிவனீ பகர்வா யென்ன.

71. மன்னவர் பெருமான்கூற மாசறு செல்வ நம்பி
யென்னுமப் மெய்ம்மை யாள னியம்புவா னிலங்கு நீதித்
தென்னவ பூமி யெங்குந் திரிந்துநாங் காண்போ மென்று
லன்னவர் வெளிவா ராரோ ருபாயமிட் டழைப்போமென்றான்.

72. சென்றுநாந் தேடி யாடுந் திர்த்தகின் னன்பினாலே
யின்றெனிலாடி யுய் யென் றெனக்குமீண் டெய்து மாகி
லொன்றறி னுறுதி யுண்டோ வுரைத்தி யவ் வுபாய மென்று
னன்றுமே னென்று செல்வ நம்பியு நவில லுற்றான்.

73. ஆதியம் பரமன் மாயா விநோதத்தா லனந்த கோடி
நீதிகொள் சமைய மாக்கி நின்றன னதிற்று ணென்று
யோதிய சமையத் துள்ளோ ரொன்றை யொன்றெவ்வா
தென்பர்
வேதமு மவனாற்சொல்ல விதித்தவம் மெய்மையாளன்.

74. அத்திரு வேத நீதிச் சிரத்தினி லுறு மத்த
மெய்த்தவ னில்லைத் தாங்கும் வேதமு மறியமாட்டா
வுத்தம குணத்தினனே யோங்கிய பரம சோதிச்
சித்திர வருள்பெற் றேங்குந் திறத்தினர் தெளியக் காண்பர்.

75. அதுவலாற் சமையத் தோர்க ளவனருட் சமையர்தன்னை
யிதுவது வாமுமென்றே யெடுத் தெடுத் தியம்பாநிற்பர்
பொது வென்பர் சிலர்களந்தப் பொய்ம்மையைத் தெரிக்க
மாட்டா
தூதுபதர் மணிபோற் றேன்றியுறையுமம் மணியோடொத்தே.

76. அன்றது காணவேண்டி லறைதரு வழிநோக்கி
நன்றுநீதி ரண்டுங்காணு நன்மையர் தன்மைபோலே
யின்றுநாம் பரத்தின் மேன்மை யிதுவென வறியவேண்டி
லென்றிய மறையோராதி யுரைத்தபல் சமையத்தோரும்.

77. வருகவென் றழைத்து நின்பொன் வாயிலிற் கிழியைத் தூக்கி
யருமறை முடிவில் வைகு மாகியம் பரமீதென்னப்
பொருவறு முறையால் வென்ற புண்ணியர் கொள்கவென்று
லொருவரே யறுப்பர் வேண்டாரெனினுமவ் வுண்மைகாட்ட.

78. ஆதலானினக்கு நின்சீ ரவனியோர் தமக்கு மன்று
வோதுமிப் பரமீதென்ன வுணர்ந்ததை யடைதலாகு
மாதவத்தோரும் வாழ்வ ரென்றனன் மறைவலாளன்
பூதலத் திறைவனேலே புறையறு பூமி யெங்கும்.

79. ஒன்று கற்றோர்க ளாதி யோங்குநான் மறையுமோதிச்
சென்றதின் முடிவு கண்ட சின்மயத் தோர்க ளந்தம்
பொன்றலின் முத்திநீதி புகலவல் லார்களெல்லா
நன்றிசேர் மதுரை நண்ணி நவிலுறுங் கடவுள் மேன்மை

80. இதுவென வருளி யென்னை யிலங்குறுங் கடவுளார்த
மதுமலர்க் கமலபாத மன்னவைத் தென்றுற் கட்டும்
பொதுவுறு கிழியுங் கொண்டு புகழ்கொண்டு போவானின்றே
கதுமெனப் புதுவிரென்னும் வாசகங் கழறிவிட்டான்.

81 தூதுவர் கையினீறு தொடர்ந்தவா சகங்கொள்ளோலை
மாதிர மெட்டுமுட்ட மன்னவன் விடுத்தபின்னைப்
பூதல முழுதுங்காணும் பொற்கிழி பொருந்தச் சேர்த்துக்
கோதறு நெறியான் மன்னுங் கோமுனை வாயிறன்னில்.

82. கட்டினன் தூதரோலை காசினிபுள்ளோர்க்கெல்லா
மிட்டனர் தலத்துளோரும் யாவரு மறிந்தா ரன்றே
வட்டமா மேருவொத்த மணிமதின் மதுரை தன்னி
லுட்டெளி வுடையா ரெல்லாந் தூதுவ ருடனே சென்றார்.

83 சித்தர் புகுந்தார் தேவர் மகிழ்ந்தா
ரத்திரம் வாழ்வெனு மந்தணர் வந்தார்
புத்த ரடைந்தார் சைவர் புகுந்தார்
மத்தமுறும்மீ மாங்கிசர் வந்தார்.

84. மாயா வாதியர் வந்து புகுந்தா
ரோயா தேமது வுண்டு தமைத்தா
ஞயா வாமிக ளக்கணம் வந்தார்
தேயா வஞ்சவை சேடியர் சென்ருர்.

85 ஆசறு சாங்கிய யோக மணைந்தார்
பாசுப தத்தவ ரும்பதி யுற்ருர்
மாசில ஞமெனு மாவிர தத்தார்
தேசு பெறுபடி கூடல் செறிந்தார்.

வேறு.

86 ஆருயிர் கொல்லோ மென்னு மருகரு மதுரை சார்ந்தார்
தேருமெய் யன்பில்காளா முகவருஞ் சென்றுசோர்ந்தார்
பாருறு மின்ப மல்லாற் பரமெனல் பழுதா மென்றே
யோருல காயதத்தோ ரெனுமவ ருடனே சென்ருர்.

87 நல்லியற் கூடற தனி லிவரிவர் நண்ணு நாளில்
வில்லிபுத் தூரின் மாயன் விட்டுணு சித்த னென்பா
னெல்லியம் பொழுதிற் றுஞ்சு மிடத்தினி லொருநாளெய்தி
யல்லியங் கண்ணு ளேக்கி யருளளித் தன்பன் மாட்டில்

88. இருந்தவர் திருப்பேர் சொல்லி யெழுப்பின ரெழுப்புங்காலை
யருந்தவ முடையார் தாண்ணென் றெழுந்திருந் தருகினோக்கக்
கருந்தட முகில்போன் மேனிக் கருணையங் கடலைக்கண்டார்
குருந்துறைத் தவனே போற்றி யெனக்குழைந் தடியில்
வீழ்ந்தார்.

வேறு.

89. வையமுழு தாண்டவர் பதங்களில் வணங்கி
நைவுறு மனத்தின ரெழுந்து நவையில்லாக்
கைதலை குவித்தெழில்கொள் கண்கள் புனல்சிந்தச்
செய்திற மறந்துருகு சிந்தையரு நின்ருர்.

90. நின்றநெறி யன்பனிலை கண்டு நிகரில்லா
வொன்றுளது கேளென வுகந்திறை யுரைப்ப
மன்றல்கம ழுந்துளப மாலைபுனை மார்பா
வின்றறியும் வண்ணமதி யம்பிடுக வென்றான்.

வேறு.

91. நன்னெறி மதுரை தன்னி னாற்பெருந் திசையுங் காணத்
தென்னவன் விகாரத்தாலே திரண்ட பொற்கிழி யொன்றாக்கி
மின்னவிர் முடியான் றன்சீர் விளங்கிய வாசறன்னின்
முன்னுறத் தூக்கி வைத்தான் முகுந்தனார் மதலாய் நீபோய்.

92 அறுத்திவண் கொணர்வாயென்ன வச்சுதனருளிச் செய்ய
வெறுப்புடன் விருப்பொன்றில்லா விட்டுணுசித்தன் கூறுங்
கறுத்த மாமுகிலே வாதில் வென்றவர் கைக்கொளென்றே
நிறுத்தினான் மன்னன் வாய்மை நீணில மதனிற் றொண்டன்.

93. எதுரைத் தறுப்பே னெந்தா யிநகையா லெடுத்து வெட்டு
நீதிமண் வெட்டிக் கோட்டா னிறை பெருந்தழும்பைக்காட்டி
வேதநிச் சயங்காட்டாதே விமலனே யறுக்க லாமோ
பூதலமாறா மன்னன் பொறுப்பனோ புகல்வா யென்றான்.

94. அன்பரிவ்வாறு கூற வச்சுதனவரை நோக்கித்
துன்பிலா மன்னன் கேட்ட சுருதியின் முடிவைக் காட்ட
லென்பரம் வாயிறன்னி லிலங்கு பொற்கிழி கைக்கொள்ள
லுன்பாமேகா யென்றாங் குரைத்திட வுரைப்பர் தொண்டர்.

95 பூதல முழுதிலுள்ள புலவர்கள் சபையி னுள்ளே
மாதிரம் பொருந்து திண்டோண் மன்னவர் மன்னன் முன்னே
யோதுமோ வெழுத்தும் போகா வூர்த்தையே னுடலந்தாங்கி
நாதனே வெட்கமின்றி நண்ணுத னலனோ வென்றார்.

96. என்றிவா றறையக் கேட்டங் கிறை பெருமுறுவல் செய்து
நன்றிகொள் வேதநான்கு நவிலுஞ் சாத்திரமோ ராறு
மின்றெனதுடைமையாகு மென்னை.நீ யுடையை யாது
லொன்றுனக்கரிய துண்டோ வுத்தம குணத்தினானே.

97. என்னமின் னவிருநேமி யெம்பிரா னருளிச்செய்யப்
பொன்னடித் தலத்தில் வீழ்ந்து புண்ணியக் கொழுந்தே யன்னார்
தென்னவன் மதுரைதன்னிற் றிருமகனாக னின்றே
மன்னுவான் விடைசொல்கின்றேன் வாழியென்றெழுந்து வாழ்த்தி

98. நின்றவர் தம்மை யேகு நீ யென வனுப்பித் தாமுஞ்
சென்றுதங் கோயில் சேர்ந்தார் திருமரு மார்பான்று
நன்றிகொள் பெரியாழ்வாரு நற்றவத் தோர் கடாங்கப்
பொன்றிகழ் சிவிகையேறிப் பூபதி கூடனோக்கி.

99. ஏகினான்பர் சூழ விமையவர் வணங்கி வாழ்த்த
மாகமீதிலங்குஞ்சோதி மதிக்குடை நிழற்றச் சீர்கொள்
பூகமார் மருதவேலிப் புதுவைமாநகர நீங்கிப்
மேகமே காவா யென்று விழிவழி யருவி சோர.

வேறு

100. கற்குழைய மரங்குழையக் கானில்வளர் விலங்கினத்தின்
விற்குழையப் பறவைகளின் மெய்குழைய மேதினியிற்
புற்குழைய வேதாந்தப் பொருள்குழைய மெஞ்ஞானச்
சொற்குழைய வேதமவர் தலைந்துவனம் பலகடந்தே.

வேறு.

101. சென்றனர் மதுரை நோக்கித் தென்றிசை வாயில் சேர்ந்தங்
கன்றதிலுறையுங்கூட லழகிய பெருமாடன்னை
யொன்றிய மனத்தராகி வணங்கினு ரோவா தன்பா
னின்றிருந் தவரை நோக்கி நிலவுசித் திரம தானர்.

102. இமைத்திலர் விழிகள்வாயா லிசைத்திலர் துதிகணின்ற
தமைச்சில கடிகைப் போதுமுணர்ந்திலர் தரணிதாங்குங்
கமைப்பெரு முலகின்மேற்சென்ற கருத்தினைத்திருத்தி
வாக்கால்.
வெமைத்தொடர்ந் தெடுத்தாட் கொள்வீரென் செய்கேன்
கைம்மாறென்றார்.

103. அவண நின்றாழ்வார்கூற வண்டமுண்டண்டத்துள்ளே
புவனமேதேறி விழிபுலாவுவாரிசைப்பாரந்தோ
விவணமோரன்பா னோக்கி லிகபரத் திலதென்றெண்ணி
மவண மற்றவமே சென்றவ் வாதினை வெல்வீரென்றார்.

104 என்றிறை யருளிச் செய்ய விருகணீ ரருவி சோர
நின்றவ ரிருந்தார் தம்மை நீணிலத் திறைஞ்சி வாழ்த்தி
சென்றனர் வீதியூடே தென்னவன் செயலே தென்னிற்
குன்றென வுயர்ந்த நீதிக் கோமுனை வாயிலெய்தி.

வேறு.

105 வாசம லர்த்திரு மங்கையும் வாணியும் வீரம டந்தையும்
நேசமு டன்புவி மங்கையு நேர்பெற நேமி தரித்தவன்
றேசுடை வானவர் கோனெனச் செல்வமி குந்துசி றந்தசிங்
காசன மீதிலி ருந்தன னண்டரும் விண்ணி னெருங்கினர்.

106 நன்றிக ருஞ்செல்வ நம்பியு நான்மறை யாளரு மன்பருஞ்
சென்றுயர் தென்னனி ருந்ததோர் சீரிய வாசன மாடுற
வன்றரு ளெய்தவி ருந்தன ராசரு மன்னர மைச்சரு
நின்றனர் முத்திவி ரும்பினோர் நேர்பெற வந்துநி ரைத்தனர்.

107 போக்குமி குத்துழல் புத்தரும் போதம கன்றவை சேடரு
நக்கனை நம்பிய சைவரு நன்றிகொள் சாங்கிய யோகருந்
தோக்கல காயத வீணருந் துன்புறு மாவிர தத்தரு
மெக்கரு மத்தினு மையுற வேயுறு மாற்கரு மெய்தினார்.

108 மாயைத ரும்பெரு வாதரும் வஞ்சம்வி டாவரு சோர்களு
மாய்வறு வாமியர் கூட்டமு மாதிய வாதிய ரெய்தினா
பேயுறு மவ்வவை யின்கணே யேழுல குண்டவர் தொண்டராய்த்
தூபதா யந்தைவி ளக்கிய சுந்தர வந்தணர் தோன்றினார்.

109 தோன்றிய வன்பரை நோக்கினன் னோமறு வார்செல்வ நம்பியு
மூன்றுல குண்டவர் தொண்டனா ரெய்தினா ரென்றுமொ ழிந்திட
வூன்றுமெய் யன்பின்மன் னோக்கின னுத்தம னார்வண மாய
னாய்த்
தோன்றினர் தென்னவன் கண்கனோர் துண்ணென வோடி
யெழுந்தனன்.

வேறு.

110 எழுந்திருந்த விறற்றென்னன் செல்வநம்பி யுடனேகிச்
செழுந்தவனை யடிவணங்கிச் சீரியநான் மறைக்குமொரு
கொழுந்தென்னத் திருவுருவங் கொண்டபெரி யாழ்வாரும்
விழுந்திறைஞ்சு மன்பர்களை விரைந் தெடுத்தார் சீர்விதிப்ப.

111 கொடியகொடு வினைக்கிடாய்க் கூற்றுவன்கைப் பட்டுழலு
மடியனேற் கருணல்கி யாளவந்த திருவுருவோ
படிமீதின் மாமாயை பாறவந்த பரஞ்சோதி
வடிவிதுவோ வெனமன்னன் மகிழ்ந்துரைத்தாங் குடன்
கொடுபோய்.

112 சீரியசிங் காசனத்திற் றேவவினி திருத்தியென்று
னேரியனுன் மறைவல்லா ரெழிலரியா சனத்திருந்தார்
கூரியமெய் யறிவில்லா வாதியர்கள் குழாத்திடையிற்
றேரிலுறு மிரவியெனச் சென்றவர்தே வர்கள்கண்டார்.

113 வாசவனு மதுகண்டு மற்றிவனுற் றென்னவனம்
ஈசனடி யறிந்தடைவ னிவைபுலக்க வேண்டுமெனத்
தேசுபொலி சுரர்குருவைச் சென்றுசிங்கா சனத்திருந்த
மாசிலான் றனைவெல்க மானுடனு யெனவிட்டான்.

114 இந்திரன்சொற் பணியாலே யிருநிலத்தில் வியாழகுரு
வந்துமா னிடவடிவாய் மன்னவன்முன் றோன்றினு
னெந்தநா டெவ்வூர்நீர் யாவரதை யியம்புமெனச்
சந்திரன்சீர்க் குலத்துதித்த தார்வேந்தன் மகிழ்ந்துரைப்ப.

115 பொன்னுலகாள் பவன்சூதாற் போந்தவர்சென் றுங்கிருந்து
மன்னவநீ கிழிகட்டி வாதிடைநின் றவர்கொண்மி
னென்னவுரைத் தனைபார்ப்பா னேதுசெயித் தவன்றுளிற்
றென்னவிழுந் தனையாதைச் செப்புதிநா னெனைச்செப்ப.

116 என்றுரைத்த வவ்வேலை யிருந்தசமயத்தவர்க
ளொன்றுபட வியாழகுரு வுடன்கூடி முடிவேந்தை
யின்றெமது முன்னுக விருநிலத்தி லிறைஞ்சுவித்த
நன்றிதரும் வேதியரே கிழியறுக்க நாமுமென.

117 சன்னைசொல்லி யவன்பதத்திற் றுழ்ந்தமன்னை மிகவிகழத்
தென்னவனு மருகிருந்த செல்வநம்பி முகநோக்கி
யென்னையினிச் செய்வதென வியம்பியிடு மளவையினின்
மன்னவமற் றிவரவரை வெல்வார்வருந் தேலென்றுன்.

118 எனவியந்து செல்வநம்பி யுறைப்பவிற லியல்வேந்தன்
மனமகிழ்ந்தாங் கினிதிருந்தான் வானவர்கோன் விடுத்தவனு
மனவயல்சூழ் புதுவைநக ரச்சுதனூர் விடுத்தவரும்
வினவரிய பரசமைய தர்க்கத்தின் மிகழுண்டார்.

119 பாத்துவமே தறைந்துகிழி பற்றுமென்றான் வியாழமுனி
விரத்திநெறி நின்றவரும் விண்டுவென்று ரண்டர்குரு
வுரத்துமல ரயனென்று ஞேதவண்ணர் தொண்டரவன்
சிரத்தையான் கைகொடுத்த திறமறந்தா யோவென்றார்.

120 நன்றவ்வா றுளதூ நாரணனன் றேபரமன்
கொன்றைமுடி வைத்தகுண வெற்பமென்றே கூறுதுநா
னென்றனன்வா னவர்குரவ னேழுலகு முண்டவரை
யொன்றியசீர் மனத்துள்வைத்த வுத்தமனூர் நகைத்துரைப்பார்.

121 அறிவிலாய் முன்புகன்ற வயன்சிரத்தை யறுத்துரைத்த
மறியமருங் கரத்தானூர் மற்றவினை போக்கியிடு
நெறியறியார் பலியிரந்து நெடுங்காலந் துயாழுற
வெறியார்பூந் துழாய்முடியெம் விண்டுவன்றோ வதுதவிர்த்
தான்.

122 இவ்வண்ண மிவர்கூற விமையவர்தங் குருவுரைக்கு
மெய்வண்ண முடைக்கால கற்பிதத்தில் விட்டதெனப்
பொய்வண்ணக் காலத்தைப் பரமென்றான் போக்கற்றான்
மைவண்ணப் பரஞ்சோதி தொண்டரிவை மறுத்துரைப்பார்.

123 காலமொரு மூன்றுமுடைக் கடவுளார் கருத்தினிடை
மூலமுடி வறியாதாய் மொழிகவென வவன்மொழிவான்
ஞாலமிசை யிருணீக்கி நற்பொருளை விளக்குவிக்குங்
கோலவெழிற் கதிரொளியை யவன்பரமா மெனக்கொண்டே.

124 உரைத்தனனவ் வுரைகேட்ட வுத்தமனூர் முறுவல்செய்து
வரைத்தடந்தோள் விறன்மன்னன் மாமுகத்தை நோக்கியிவன்
றிரைக்கடலுட் டினம்பிறந்துந் செத்து முழல் கின்றவனை
யிரைக்குமறை காறுத பரமென்று விசைந்திடுமோ.

125 சொல்லாயென் றனராழ்வார் தொல்லுலகங் காத்தளிக்கு
மல்லார்திண் புயத்தென்னன் மதிகெட்டா ரெனவுரைத்தான்
கல்லாத சார்குருவுங் கட்டுரையற் றுங்கிருப்ப
வெல்லாருந் தங்கடங்க டெய்வமெழிற் பரமென்றார்.

126 அதுகேட்ட செல்வநம்பி யாழ்வார்த முகநோக்கி
யிதுவேனிப் புல்லருட னெம்பெருமான் விளையாடன்
முதுவேத முதற்பொருளை மொழிந்துவெளி யிடுகவென
வதுவேநங் கருமமென வாழ்வாரங் கெதிர்ந்தவரில்.

127 சைவர்களாங் கரித்திரட்கோர் சாற்றுசிங்க வேறனார்
பொய்யுடைய வாமிகளாம் புலியிருட்கா தவனுறை
ரையமுறு புத்தர்களா மாட்டினத்துப் புலியானார்
மையலரு சப்பஞ்சின் மாகனலா னார்பிறராம்.

128 சற்பங்க டனைமாய்க்குங் கருடனெனத் தான்சமைந்தார்
நிற்பனசெல் வனவிரங்க நேமிபான் றிருத்தொண்ட
ரற்புதமென் றமரர்குழா மிறைஞ்சவா ரணத்தந்தச்
சிற்பரத்தை யுலகுய்யத் தென்னவன்முன் கட்டுரைத்தார்.

129 கட்டுரையைக் கேட்டமண்ணோர் கனன்மெழுகாய்க் கரைந்திட-
விண்
டொட்டுயர்ந்த மண்டபத்திற் றூக்கியசீர்க் கிழிதாழ
வெட்டெழுத்துக் குறைவிடமா மாழ்வார்த மிருதாளிற்
பட்ட கிழிதனையறுத்துப் பாண்டியன்முன் பரிந்திட்டார்.

130 தென்னவனச் செயல்கண்டு திருவடியி லுற வீழ்ந்தான்
முன்னவனை யிகழ்ந்துரைத்த முழுமூடச் சமையத்தார்
மன்னவனு முறுவல்செய வந்தாழ்வார் பதத்திறைஞ்சப்
பொன்னகரத் திறைபணியாற் போந்தவரும் போயினரால்.

வேறு.

131 இடிநிகர் முரச மார்ப்ப விமையவர் குழாங்க ளார்ப்பப்
படிமுழு தடைய வாளும் பாண்டியன் பரிவி னோடும்
மடியேனே னல்ல நீர வாளவந் தவரே யின்றிக்
கடிநகர் வலமாய் நண்ணிக் காட்சிதந் தருள்வி ரென்றான்.

132 என்றசொற் கேட்ட போதி லீசனை நினைந்தாழ் வாரு
மொன்றதற் காமா காதென் றுரைத்தில ரொடுங்கி நின்றார்
சென்றெடுத் தவரை நீதித் தென்னவன் நீலக் கைக்குன்
றொன்றென வுயர்த்தயானை யெருத்தமீ துவப்போ டேற்ற.

133 பூதமோ ரைந்து மேத்த புரையறு மறங்க ளேத்த
வேதமோர் நான்கு மேத்த விண்ணவர் குழாங்க ளேத்த
வோதுமூ வுலகு மேத்த வோங்கிரு சுடரு மேத்த
மூதறி வுடைய மன்னன் சேனைகண் முழுது மேத்த.

134 அந்தணர் குழாங்க ளேத்த வருமுனிக் கணங்க ளேத்தப்
பந்தணை விரல்சேர் செங்கைப் பாவையர் வீதிதோறுஞ்
சந்தனக் குழம்பு சுண்ணந் தாதவிழ் மலர்கள் சிந்தி
யிந்திர விழாவ தென்ன விறைத்தனர் மணியும் பொன்னும்.

135 மதிக்குடை நிழற்றத் தெய்வ மங்கையர் கவரி வீசக்
கதிக்குநின் றிறங்கு வோருங் காசினி யோருங் கண்டு
துதித்தெழ வேகுங் காலைச் சுடரொளிப் பாலோ கத்திற்
பதித்தபே ரருளோ டோங்கும் பாவசா னந்தநாதன்.

136 அந்தமில் பேரின் பத்தா ரடியரோ டமைந்த சோதிச்
செந்திரு மார்ப ராழ்வார் சிறந்தசீர்ப் பவனி காண
வந்தனர் கருடன் மீதின் மான்மறிக் கரனும் வையந்
தந்தநான் முகனும் போற்றந் தாமரைச் செல்வியோடும்.

137 மண்ணெலா மனிதர் செற்ற மறையவர் மறைகள் பாட
விண்ணெலா மிமையோர் செற்ற விரிஞ்சனு மரனும் போற்று
மண்ணலார் நித்தர் முத்த ரணியணி நிறைப்ப வாங்கே
கண்ணெலாங் களிப்ப வான வேந்தனுங் கசிந்து போற்ற.

138 கண்டுயர் பெரியாழ் வாருங் கருத்தினி லிறுமாப் பற்பங்
கொண்டிலர் கொண்டல் வண்ணன் குளிர்மதி வதனங்கண்
புண்டரீ கத்துள் வைகும் பூவையை மார்பிற் கண்டார் [டார்
தொண்டர்கள் குழாத்தைக் கண்டார் துணைவிழி யருவிசோர்
வார்.

139 கருதுவார் கருத வாடுங் கருணையங் கடலார் மேனி
யிருதுவை யிளமை தன்னை மெய்யுறு குழைவை மார்பில்
வருதிரு வருளைக் கண்டு மண்ணவர் கண்ணே ரூலே
பொருவரு முருவில் மாசு புகுமெனத் துணுக்கென் றஞ்சி

140 தன்னிரு விழிகள் சென்று சாரினும் பிழைக்கு மென்ன
முன்னுறப் பல்லாண் டென்று மொழிந்துகாப் பிட்டக்கோலம்
பின்னுறக் காண்போ மென்று பிரிந்தொரு திசையை நோக்கி
யென்னையாண் டருள்வார் பல்லாண் டெனுந்திருப் பதிகந்
தன்னை.

141 ஆனைமே லிலங்கப் போட்ட வணிமணி தாள மாகத்
தேனையுந் தலங்க லான்றன் சேவடி செவ்வி மார்பிற்
கானையுந் தளத வல்லி கதிரொளித் திகிரி சங்க
மேனைய பிறவுங் காப்பென் றிசைத்தன ரிசைத்த பின்னர்.

142 நோக்கினர் திருக்கோ லத்தை நோற்றநோன் புடைய வன்பர்
வாக்கொடு மனமுங் கண்ணும் வள்ளற னுருவிற் பாயக்
கோக்கிளர் மதுரை யுள்ளோர் மன்னவன் கோதி லாத
பாக்கியச் செல்வ நம்பி யெனுமவர் பலருங் காண.

வேறு.

143 உளங்கருணைச் சடகோப ருரைத்ததிரு வாய்மொழியில்
விளங்கியசீர் நெறிப்படியே விமலனருட் கருடன்மிசைக்
கிளர்ந்துபிர மன்சிவனொன் றிவர்வணங்கக் கிளரொளியா
யளந்தெவரு மறிவரிய வச்சுதனார் வீற்றிருந்தார்.

144 அவ்வண்ணம் வீற்றிருந்த வருளுருவை யாழ்வார்கண்
டெவ்வண்ணத் தவஞ்செய்தேன் யானந்தோ வெனவழுது
மவ்வண்ண மிலாதவரு மலர்க்கரங்கள் சிரங்குவித்து
மைவண்ணப் பரனேசைம் மாறில்லே னெனவாழ்த்தி.

145 காராருந் திருவுருவின் கருணையினா லுளமழிந்திட
டாராத காதலினா ரனுபவமுள் ளடங்காதே
கூராழி சங்கேந்துங் கொண்டலுக்குப் பாமாலை
சீராருஞ் சொற்றமிழாற் பாடவென்று சிந்தைசெய்தே,

146 மச்சமுதல் கற்கிவரை மண்ணிடையில் வந்துதித்த
வச்சுதனார் திருவுருவி லாயர்மனை வளர்ந்தவர்த
மெச்சுதிருக் கலியாண குணங்களுமெய் விளங்கியசீர்ப்
பச்சைமுகிற் பாலகனும் பருவத்தின் பலசெயலும்.

147 டாடுவான் சிந்தித்துப் பரிவோடு மிறைதிருத்தாள்
சூடுவா னினைந்தனராந் தோமில்லார் தஞ்சிரத்திற்
றேடுவார் தேடநின்ற திருமால்சீ ரடிவைத்தா
னாடினார் வானவர்கண் மண்ணவர்க ளதிசயித்தார்.

148 சைவர்முதற் சமையத்தார் தத்தமக்காங் கடவுளரைக்
கைவிட்டா ரிங்கில்லா ரங்கில்லை யெனுங்கருத்தான்
மெய்வைத்தார் திருமால்சீ ரடியார்தம் விரைமலர்த்தா
ணைவுற்றான் பாண்டியனு நாரணன்சீர் நலந்தெரிந்தே.

149 நின்றனனக் காலத்து நெடுமாலுஞ் சமையிகளை
வென்றவரே யின்றுமுதல் வேதக்கோன் பட்டார்பிரா
னென்றிசைக்கு மொழினாம மியம்பினோ மெனவியம்பிச்
சென்றனர்வான் றேவருடன் றெளிவிசும்பிற் சேர்ந்தனரால்.

150 பட்டர்பிரா னாழ்வாரும் பரஞ்சோதித் தடங்கடலா
மெட்டெழுத்தின் தனிநாத னேகியபின் மாகரியை
விட்டிறங்கித் தோற்றவரை வியன்மதுரை மன்னவனை
மட்டவிழ்பூந் துழாய்முடியா னடியவராய் மன்னவைத்தே.

151 மனக்கருத்து முற்றுவிப்பான் வடமதுரை பிறந்தவர்வாழ்
புனத்துளப வனஞ்சூழ்ந்த புதுவைநகர் தனிற்போந்து
தினந்தினமு மருள்விளங்குந் திருப்பல்லாண் டாதியாய்க்
கனத்தவருட் சென்னியோங் கந்தமாய்க் கலைதெரிந்தே.

152 நன்னெறிச்சீர்க் திருமொழியோர் நானூற்று நாற்பதையு
மின்னிசையா லெடுத்தோதி யேழுலகு முய்வித்தாங்
கன்னவயற் புத்தூரி லளவிறந்த பலகால
மின்னுமணி முடிமாயன் றிருவடிக்கீழ் வீற்றிருந்தார்.

**2-வது பெரியாழ்வார் பிரபந்தம்**

**முற்றும்.**



ஸ்ரீ

திருஞானமுத்திரைக் கோவை: 17.

(ஆழ்வார் திருநகரி சேஷகவி இயற்றிய)

# ஸ்ரீ பராங்குச நாடகம்

என்னும்

# ஆழ்வார் நாடகம்.



பரிசோதித்தவர்:

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித் துறைத்தலைவர்

ராவ்சாகிப்: S. வையாபுரிப்பிள்ளை அவர்கள்.

பதிப்பாசிரியர்:

பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸையங்கார்

திருஞானமுத்திரைப் பிரசுராலயம்

ஆழ்வார்திருநகரி.



1945

[விலை அணா 12

# ஆழ்வார் திருநகரி பழந்தமிழ் நூற்கள்

## புதிய பதிப்பு

—oo>o<oo—

| திருஞான முத்திரைக் கோவை | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ நம்மாழ்வார் நூற்றெட்டுத் திருப்பதித் தாலாட்டு | 0 | 4 |
| 2. | ஸ்ரீ சடகோபன் சந்திர கலாமாலை .... | 0 | 1 |
| 3. | ஸ்ரீ சடகோபன் திவ்ய சரித்திரம் .... | 2 | 0 |
| 4. | ஸ்ரீ ராமாயணம் (பாசுரப்படி) இனும். | | |
| 5. | துலைவில்லி மங்கலம் தேவர்பிரான் சந்திர கலாமாலை | 0 | 1 |
| 6. | ஸ்ரீ நம்மாழ்வார் பிள்ளைத் தமிழ் 2ம் பதிப்பு அச்சில் | | |
| 7. | திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக்குறம் .... | 0 | 4 |
| 8. | குருகூர்ப்பள்ளு .... | 0 | 6 |
| 9. | ஆழ்வார்கள் வைபவம் (முதலாழ்வார், பெரியாழ்வார்) .... | 0 | 6 |
| 10. | தென்திருப்பேரை திருக்கோளூர் திருப்பணி மாலைகள் .... | 0 | 6 |
| 11. | திருவைகுந்தநாதன் பிள்ளைத்தமிழ் .... | 0 | 8 |
| 12. | கம்ப ராமாயணம் பாலகாண்டம் [முதல் ஏழுபடலங்கள் பிரதி பேதங்களுடன்] .... | 0 | 10 |
| 13. | தெய்வச்சிலையார் விறலிவிடு தூது .... | 0 | 10 |
| 14. | கம்பராமாயணம் (ஆழ்வார்திருநகரிப் பிரதிகளின்படி) பாலகாண்டம் .... | 2 | 0 |
| 15. | கம்பராமாயணம் (ஷை)திருவயோத்தியா காண்டம் .... | 2 | 4 |
| 16. | கம்பராமாயணம் (ஷை) ஆரண்ய காண்டம் .... | 2 | 4 |
| 17. | ஸ்ரீ பராங்குச நாடகம் .... | 0 | 12 |

**பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸையங்கார்,**
பதிப்பாளர்
திருஞாந முத்திரைக்கோவைப் பிரசுராலயம்
ஆழ்வார்திருநகரி.

# பதிப்பாசிரியர் முன்னுரை

இந்நூலின் பிரதியொன்று சென்னைப் பல்கலைக்கழக நூல் நிலையத்திலுளது. திருவாளர் ராவ் சாஹிப் S. வையாபுரிப் பிள்ளை அவர்களின் உதவியால் கண்டு பிரதி செய்யும் பாக்கியம் கிடைத்தது.

இந்நூலின் இறுதியில் "960-ம்ஞு ஆவணிமீ 12உ செவ்வாய்கிழமையும், அஷ்டமியும் சுபயோக சுபகரணமும் பெற்ற அனுராத நக்ஷத்தரத்து நாள் இந்தப் பராங்குச நாடகம் எழுதி முகிஞ்சது. முற்றும். ரெகுநாதசாரியார் தாசன் சுந்தர ராஜன்-எழுத்து. ஆழ்வார் திருவடிகளே சரணம். எம்பெருமானுர் திருவடிகளே சரணம். இந்த ஆழவார் நாட்கம் ராமாயணம் சாத்தாதவரும் பார்த்து சுவாமி சந்நதியிலே அரங்கேத்தினது" எனக் காணப்படுகிறது.

திருக்குருகூர் என்னும்' ஆழ்வார்திருநகரியில் அக்காலத்தில் வாழ்ந்து வந்த சேஷகவி என்ற இந்நூலாசிரியர் தன் காலத்துள்ள ஸ்ரீ இராமாயணம் சாத்தாதவரும் பார்த்து அரங்கேற்றியுள்ளார்.

இராமாயணம் திருவேங்கட தாசர் எனப் பிரசித்தமடைந்திருந்த புலவராகிய இராமாயணம் சாத்தாதவர் கொல்லம் 890-ம் யாண்டில், ஸ்ரீ நம்மாழ்வார் திருமஞ்சனக் கவி பாடி வந்த வேங்கடத்துறைவான் கவிராயர் இயற்றி அரங்கேற்றிய மாறன் கோவைக்கும் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். அது வருமாறு:-

ஓரோங்குமாண்டோ ரெண்ணூற்றுத்தொண்ணூற்றில் திருக்குரு
நாரோங்கு செந்தமிழ் நம்மாழ்வார்கோவையைநாவலர்முன் [கூர்
வாரோங்கு ஞானந் திகழ்வேங் கடத்துறை வான்கவிஞ
னேரோங்கு மாதிப் பிரான்கோ யிலி லரங் கேற்றினனே.

இதிலிருந்து இந்நாடக நூலாசிரியராகிய சேஷகவியும், சாத்தாதவரும் 'இன்றைக்கு 230 ஆண்டுகளுக்குமுன் கொல்லம் 890-ல் வாழ்ந்து வந்தவரென்று தெரிய வருகிறது.

திருஞான முத்திரைப் பிரசுராலயத்திலிருந்து தற்காலம் அச்சாகி வெளிவருகிற (ஆழ்வார்திரு நகரிப் பிரதிகளின்படியுள்ள) கம்ப ராமாயணம் இராமாயணம் சாத்தாதவருடைய பிரதி பார்த்தெழுதிய ஏட்டுப் பிரதியேயாகும். இப்பிரதேசத்தின் பற்பல நூல்களும் பிரதி செய்து அவ்வக் காலங்களில் வெளியூரார் கொண்டுபோய்ப் படித்துவந்த வழக்கத்தை அனுசரித்து இக்கம்ப ராமாயணப் பிரதியும் பிரதிசெய்யப்பட்டு பற்பல பிரதேசத்தார்களால் போற்றிப் படித்து வரப் பெற்றன என்பதும் தெரியவருகிறது.

கம்ப ராமாயண உரையாசிரியர் ஸ்ரீ உ. வே. கோபாலகிருஷ்ணமாசாரியார் சுவாமியினுடைய கம்ப ராமாயண உரைகளில் எடுத்தாளப்பட்டுள்ள ஒருமுறையான பாடாந்தரம் இப்பிரதேசத்துப் பிரதியை ஒத்திருப்பதும் நோக்கத்தக்கது.

இதை வெளிப்படுத்த மிக்க உதவி புரிந்த நண்பர் ராவ்சாகிப். S. வையாபுரிப்பிள்ளை அவர்களுக்கும், முன்னுரை அளித்தருளிய செந்தமிழ் பதிப்பாசிரியர் திரு. நாராயணய்யங்கார் ஸ்வாமிக்கும், மற்றும் நன்றியுரை கூறி ஊக்குவித்த பெரியார்கட்கும் நம்மாழ்வார் கிருபையும் எனது நன்றியும் உரித்தாகுக.

திருஞானமுத்திரைப் பிரசுராலயம்,
ஆழ்வார்திருநகரி.

பேரியன்
வெ. நா. ஸ்ரீநிவாஸையங்கார்.

ஸ்ரீ

# முன்னுரை.

தமிழ் மொழியானது பண்டைக் காலந் தொட்டே இயல் இசை நாடகம் என்னும் வேறுபாட்டால் முத்தமிழ் என்று பகுக்கப்பெற்றது. அவற்றுள், இயற்றமிழ் ஒன்றே இக்காலத்தில் இலக்கணங்களாலும், இலக்கியங்களாலும் நிரம்பப் பெற்றது. அதனல் இயற்றமிழ் நூல்களையே புலவர்கள் விரும்புகிருர்கள்; அவை கற்று வல்லோர் சிலர்க்கே பயன்படுவனவாயும் அல்லாதோர் பலர்க்கும் பயன்படாதனவாயும் உள்ளன.

இசைத் தமிழும் நாடகத் தமிழும் அங்ஙனமன்றிக் கற்ரோர் கல்லாதோரெல்லோர்க்கும் இன்பம் பயப்பனவாயுள்ளன.

கற்ரோர் கல்லாதோரெல்லோர்க்கும் இன்பம் பயத்தல் பற்றியே, நாடகத் தமிழ், இலக்கண நடையில் வழுவிய உலகவழக்கும் விரவி எல்லோரும் அறிதற்குரிய எளிய நடையில் எழுதப் பெறுகிறது.

இது, ராக தாள மெட்டுக்களுடன் கூடி ஆடிப் பாடுமிடத்தில் மிகவும் இன்பம் அளிக்கத் தக்கது. இதனை, அரிச்சந்திர நாடகம் முதலியவற்றை ஆடிப்பாடி அபிநயித்துக் காட்டும் நாடக சாலைகளுற் கண்கூடாகக் காணலாம்.

இவ்வாருக உலகவழக்கிற் பயின்றுவரும் நாடக நடைப்பற்றி, **சேஷகவி** யென்னும் புலவரால் ஆழ்வார் நாடகம் என்னும் இந்நூல் இயற்றப்பெற்றிருப்பதாகத் தெரிகிறது, இது ஆழ்வார் அவதாரவைபவம் என்னும் பொருள் தழுவி நாடகவுறுப்புக்களை ஏற்றபெற்றி அமைத்துப் பாடி முடிக்கப்பெற்றிருக்கிறது.

இதனால், தமிழ் வழக்கில் வீடுபேறில்லையென்பாரை மறுத்து வீடுபேறுண்டென்று காட்டுதற்கு ஆழ்வார் அவதரித்தார் என்னும் ஐதிகம் ஒன்று வெளியாகிறது.

ஆழ்வாரும், 'பாடி ஆடிப் பணிமின் அவன் தாள்களே' என்று பாசுரம் இட்டிருப்பதால் இதனை நடித்துக் காட்டுவோரெல்லோம் ஆழ்வாரநுக்ரகத்துக்கு இலக்காவாரென்பதில் ஐயமில்லை.

இந்நூலைப் பரிசோதித்துவிய திருவாளர் S. வையாபுரிப்பிள்ளையவர்களுடைய தமிழபிமானமும், இதனை அச்சிட்டுதவிய ஸ்ரீமான் பெரியன் ஸ்ரீநிவாஸையங்காரவர்களுடைய பகவத் பாகவத ப்ரதிபக்தியும் பாராட்டத் தக்கன.

**திரு. நாராயணையங்கார்.**

செந்தமிழ் பத்திரிகாசிரியர், மதுரை.

---

| பக்கம் | செய்யுள் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | சுக | றுத்திரம் | றுத்தரம் |
| 5 | 6 | திருக்குருகூரினில் | திருக்குருகூரில் |
| ,, | 9 | கவுண்டண்ணியன் | கவுண்டின்னியன் |
| ,, | 10 | செய்வோமென்று | செய்வோமென்றே |
| 6 | 16 | அனந்தகெருட | அனந்தனொடுகருட |
| 12 | வரி 1 | பதிங்காத | பதின்காத |
| 18 | 6 | வந்துதிதத | வந்துதித்த |
| 20 | (25) | கணடபே | கண்டபே |
| 22 | 4 | ராசேசக்ரன் | ராசேசந்த்ரன் |
| ,, | ,, | தத்திமிததக்கிடதாரித் | தததிமிததக்கிடதாரி |
| ,, | ,, | தகிடதிமிதிமி | தககிடதிமிதிமி |
| 22 | 2 | விதித்தானே | விதித்தானோ |
| 31 | 38 | தாண்டம் | தாண்டா |
| 39 | 9 | லோசரணு | லோகசரணு |

நன்றியுரை.

1. புத்தனேரி ஸ்ரீ பத்மநாபையங்கார்.

30—5—43.

தமிழினுக் களித்தான் முத்தி தாந்தமாப் புனித நாடன்
அமிழ்தொலி வேத நான்கின் ஆயிரம் உரைத்த நாவோன்
உமிழ்திரைத் தரளப் பாண்டி ஒளியிசைக் குருகை யாளன்
இமிழ்பொழி காதை மாந்தர் இமைப்பருந் தவத்தின்பேறே.

வேதமாக் கடல் கடைந்த வித்தகன் அதற்கு முத்தி
கோதறத் தந்த மாறன் புகழைமுத் தமிழிற் கூறும்
சோதியா மிந்தத் தொன்னூற் சுவையினைப் பருகு விக்கும்
தீதறு **பெரியன் ஸ்ரீநி வாசனின்** செவ்வி வாழி.

---

2. ஸ்ரீவானமாமலை மடம் ஆஸ்தான வித்துவான் தென்திருப்பேரை
அபிநவ காளமேகம் ஸ்ரீ அநந்த கிருஷ்ணையங்கார்:—

24—9—45.

சேடனும் புலவர் கோன்முன் செய்பராங் குசன்றன் காதை
நாடகச் சுதையுட் கொண்டே நல்லறி வாளர் யாரும்
ஏடவிழ் வகுளத் தாரான் இன்னருட் கிலக்காய் வாழ்வான்
பீடமை **சீநி வாசப் பெரியனே** வெளியிட் டானே.

---

3. திருவனந்தபுரம் தமிழ்ப் பண்டிதர்

T. N. கிருஷ்ணயங்கார்

திருஞான முத்தி ரைக்கை தேசிக னருளாற் றோன்றி
இருஞாலத் தமிழ்நூல் யாவும் அச்சுவா கனத்தில் ஏற்றி
வருஞானப் பெரியன் ஸ்ரீநி வாசனும் நண்பன் தன்னைக்
கருஞாயிற் றொளிசேர் மின்னே காப்பதுன் கடமை அம்மா.

---

கடைசி எட்டின் குறையாக உள்ளதில் காண்பன:—

சேவிக்க வாருங்கோள் பெண்காள்—எங்கள்
வாழ்விக் குருகை வகுளா பரணரைச்
சேவிக்க வாருங்கோள் பெண்காள்.

எருதுக்குக் கொண்டாட்டம் திரணம்—பெண்கள்
இணைமுலைக் கணிவது முத்தா பரணம்
பருதிக்கோர் ஆயிரங் கிரணம்—ஆழ்வார்
பத்தாந் திருநாள் சத்தா பரணம் (சேவி) 13

கொடுங் கையிலே வவ்வால் நாத்தி—ஆழ்வார்
குழம்புப்பால் அரவணை அதிரசம் நேர்த்தி
சடகோபர் தாளிணை போற்றி—சகலர்க்குஞ்
சந்தோஷ மாகத் திருவிடா யாத்தி (சேவி) 14

---

ஸ்ரீ

# ஸ்ரீ பராங்குச நாடகம்

என்னும்

# ஆழ்வார் நாடகம்

---

## காப்பு

1. பருதிநிக ருதையமெனப் பார்புகழுந்
திருப்புளிக்கீழ்ப் பரிவாய்க் காரி
தருபராங் குசன்சரிதை தண்டமிழா
லனுதினமும் பாடி யாடத்
திருவளருங் குருகைமால் சேவடியை
நினைந்து தொழுஞ் சேனைநாதர்
வருநாத முனிகருடன் மதுரகவி
மலரடிகள் காப்பதாமே.

2. கருமுகி லாதிநாதர் கழலிணை தன்னைப் போற்றிப்
பரிவுடன் குருகை வாழும் பராங்குச நாடகத்தை
உரைசெயத் தமிழிநலிவ் வுலகினிற் பாடி யாடப்
பரகெதி பெற்ற ஆழ்வார் பதின்மருங் காப்பதாமே.

## அவையடக்கம்

3. காசினி புகழரங்கக் கந்தாடை யண்ணனுக்கே
தாசனென் றுரைக்குஞ்சேஷ கவிஞன்தண் டமிழாற்செய்து
வாசமாய்க் குருகைதன்னில் வாழ்பராங் குசசரித்திரம்
பேசநற் பெரியோரென்சொற் பிழைபொறுத் தருள்வரன்றே.

## தோடயம்

4. க ஜயபக்த ஜநகருணா ஜயஸகல பூசரணா
ஜயஸரோ ருஹசரணா
ஜயவகு ளாபரணா ஜயஜய ஜயரூப
ஜிதமதந ஜயஜயஸ்ரீ
ஜயமதுஸூதந ஜயகலா நிதிவதந
ஜயகுந்த ரதந ஜயஜய

உ தெள்ளுமறைத் தமிழ்விசித்திர திருவிசாக நக்ஷத்திர
வள்ளற்காரி யருள்புத்திர மாதவசரித்திர-ஜயஜய

௩ மங்களம் மகிழ்மாறற்கு மங்களம்-நாளும்
நங்கைசு தாகரனுக்கு மங்களம் மங்களம்

௪ கங்கையின்கரை மதுரகவிக் கந்தரிங்கப் பொருள்
எங்கும் விளங்கவே உகந்தியம்பினற்கு மங்களம்

௫ நாலாயிரப் பிரபந்தமும் நாதமுனிக் குரைக்க
மாலெனுஞ்சொல் நம்மாழ்வாராய் வந்தவற்கு மங்களம்

௬ அங்ககத்தியன் றவத்தா லருமறைத் தமிழ்பாடுஞ்
செங்கை முத்திரையின் ஞானதேசிகற்கு மங்களம்
மகிழ்மாறற்கு மங்களம்.

அகவல்

5. அருள்மிகு நிரம்பும் அகத்தியன் செந்தமிழ்ப்
பொருளுயர்ந் திலங்கும் பொதியமா மலையான்
வருகபல் தாவும் பொருநையா றுடையான்
பொழிமலர்த் தேன்சொரி வழுதிநன் னாடன்
திருவளர் கின்றதென் குருகைமா நகரான்
மருவணி செண்பக வகுளமா லிகையான்
கரியமா முகிலெனுங் கரிபரி யுடையான்
விருதனக் கொடியும் முரசுமூன் றுடையான்
சேணுல கெங்குந் தெரிசனத் தாபகன்
ஆணையென் றுரைக்கும் ஆக்கினை யுடையோன்
அடையலர் சிங்கம் அகளங்க துங்கன்
கொடையினிற் கன்னன் கொற்றவன் காரி
தந்த பராங்குசன் சரித்திரந் தன்னைச்
செந்தமி ழாலே செப்புமா கமங்கள்
நானிலம் புகழும் நைமி சாரண்யந்
தானதில் நாளுந் தவங்களே புரியும்
மகத்துவ முனிவர் அகத்தியன் தமிழை
மகிழ்ச்சி பெறாமல் இகழ்ச்சியாய்ச் சொல்ல
இமவான் வரையில் ஏகி அகத்தியன்
தமிழினால் முத்தி தான்பெறத் தவமுன்
செய்யவை குண்டர் சேவையும் அளித்து
வய்யம்எண் குருகை வந்தவ தரித்து

சித்தமாய்த் தமிழ்க்கு முத்தியுந் தருவோம்
என்றகத் தியன்பால் அன்றுதா னுரைத்தான்
காரியும் நங்கையைக் கல்லியாணஞ் செய்து
பேரினி விளங்கப் பிள்ளையி னாசையால்
ஆதிநா தரைப்பொன் அடியிணை போற்றத்
தீதிலா திருக்குந் திருக்குறுங் குடிமால்
நாதனே புத்திரன் நல்குவ னென்ன
மாதுடன் ஏகி மாதவம் புரிய
அப்போது நம்பியும் ஆகாச வாணியாய்
இப்பிறப் பினிற்சேய் இல்லையென் றுரைக்க
அரசனுந் தான்கேட் டரற்றுமப் பொழுது
நரகரி நம்பி நாமே உமக்குப்
பிள்ளையு மாவோம் பெருமைசேர் மன்னா
உள்ளமுந் தான்மகிழ்ந் துவந்துசெல் கென்னச்
சீர்வளர் தாந்த க்ஷேத்திரம் வந்தான்
கார்முகில் நம்பி கருணையால் நங்கை
கர்ப்பமு மாகிக் காதலன் உதிக்கக்
கற்பகக் கரத்தான் காரிரா ஜேந்திரன்
விரித்திடும் விதைகள் வேதியர்க் களித்து
கருத்தினில் மிகவும் களிப்புடன் இருக்க
அன்னை முலைப்பால் அருந்திலன் மைந்தன்
என்னஓ! என்றே இருக்கஏ ழாநாள்
காப்பிடப் பிள்ளைமா ராப்புட னங்கு
குத்தவுங் காது குறத்திமெய்க் குறியும்
ஒத்ததைச் சொல்ல உகந்தாதி நாதன்
சந்நிதி தனிற்சேய் தனைக்கொணர்ந் திடவும்
பன்னகப் புளிக்கீழ்ப் பராங்குச னிருக்க
வயித்தியர் வந்து சயித்திய உஷ்ணம்
சொல்லவு மேனோ யில்லையென் றுரைக்க
சாத்திரக் காரர் பார்த்துச் சாதகமும்
திருப்புளி யின்கீழ் இருப்பனென் றுரைக்க
மாதவம் புரியும் மதுர கவிக்கே
ஆதித்த னுந்தெற் கவதரித்தது போல்
சேவையும் அளிக்கத் திருக்கோ ளூரான்
ஆவலாய் வந்தே அடிபணிந் தேத்திச்
"செத்தத்தின் வயிற்றிலே சிறியது கிடந்தால்
எத்தைத்தின் றெங்கே இருக்குமோ" என்ன
"அத்தைத்தான் தின்றே அங்ஙனே கிடக்கு" மென்
றுத்திரம் சொல்ல உகந்தந்த முனிவன்
வண்சட கோபன் வருமுறை யெல்லாங்

கண்களி கூரக் காரியர்க் களிக்கச்
செய்திடத் தாந்த க்ஷேத்திர மேவ
மைமுகில் வண்ணர் வைகுண்ட ரப்போ
செந்தமிழ்ப் பிரபந்தஞ் செப்புமென் றுரைக்க
வந்துநூற் றெட்டு மால்தென் குருகைச்
சேடப் புளிக்கீழ்த் தேசிகா எம்மைப்
பாடுமென் றுரைக்கப் பராங்குசனப்போ
தருமறைத் தமிழந் தாதி விருத்தம்
திருவா சிரியமுந் திருவாய் மொழியும்
உரைசெயப் பிரபந்தம் உலகோர் படிக்கப்
பரகதி பெறலாற் பிரபந்தமு மிறக்கத்
திருவளர் விஷ்வக் சேனரை யழைத்துத்
தரணியில் பிரபந்தந் தானினி விளங்க
வாரண முரைக்கு மந்தண ராக
வீரநா ராயணன் மேவு தலத்தில்
மாதவம் புரியும் நாதமா முனியாய்த்
தரணியி லுதித்து வருகுவீ ரென்ன
நாதமா முனிவரும் போதொரு மறையோன்
ஆரா வமுதனை அருளுந் தயத்தில்
பாரா யணஞ்செய் பிரபந்தந் தனிலா
யிரத்துளிப் பத்தும் உரைத்ததைக் கேட்டுக்
குருகையை நோக்கி வரவுமே முனிவன்
பரிவுட னந்தப் பராங்குச னம்பித்
திரமாய்க் கண்ணிநுண் சிறுத்தாம் பைநீர்
நேயமாய்ப் பன்னீ ராயிர முருத்தான்
செய்திடு மிப்போ செங்கையில் முத்திரைக்
கையனுழ் வாரைக் காணலா மென்ன
முனிவனு மந்த மொழிதவ றுமல்
மனமகிழ்ந் துரைக்க வந்துநம் மாழ்வார்
மாதவர் போற்று மாமறைத் தமிழை
நாதமா முனிக்கே நாலா யிரமும்
உரைத்துல கோர்க்கு உரைத்திடு மென்னத்
திருத்தமாய் முனிவன் செப்பஇப் புவியோர்
அனுதின முரைக்க அனுசந் தானமும்
மனமகிழ் பொற்றாண் மண்டபந் தனிலே
சேடப் புளியுந் திருமஞ் சனமும்
பாடுந் தமிழ்ப்பிர பந்தக் கோஷ்டிகளும்
தத்துவ முரைக்கு முத்திரைக் கையன்
எத்திசையும் புகழ் நித்தியோத் ஸவமும்
உளங் களிகூர விளங்கனு தினமும்

நரகரி முகுந்தன் நம்மாழ் வாராய்த்
திருவவ தாரஞ் செய்திடுஞ் சரிதை
நாடக மாக நவின்றிடும் படிக்கே
கா௫ பாடினேன் பெரியோர் பதத்துணை தொழுதே.

விருத்தம்

6. அருக்கன்தெற் குதயமும்போ லாகியே திருப்புளிக்கீழ்
இருக்கும்நற் புகழ்பெற்ற எம்பராங் குசன்றன் திவ்விய
சரித்திரந் தன்னையேநற் றமிழினல் பாடி யாட
திருக்குருகூ ரினில்விஷ்வக் சேனருந் தோன்றினரே.

தரு

வேதனையு மளித்த வாதி நாதனையா ராதனை செய்து
பாதமே யனுதினமும் போற்றி மாதவம் புரியும்நம் மாழ்வார்
நாதமுனிக்கும் மதுரகவிக்கும் போதனைசெய் யும்சரித் திரம்பாடத்
தீதுக ளணுகா மல்விஷ்வக் சேனரும் வந்து தோன்றினரே.

வசனம்-விருத்தம்

8. வேதநூ லாகமங்கள் விளங்குமுப் புரிநூல் மார்பும்
ஸ்ரீதர வாசுதேவ ஸ்ரீஹரி கிருஷ்ணு வென்றே
தீதிலா திருக்கும் நைமி சாரண்ய க்ஷேத்ரந் தன்னில்
மாதவம் புரிய வேண்டி வந்தனர் முனிவ ரெல்லாம்.

தரு

குச்சன்வதிட்டன் கௌதமன்-காசிபன்-கூறும் பிருகுவத்திரியன் புவி
மெச்சுந்து ருவாசனுடன் பரத்து-வாசனும்-வியாசன் கவுசிகனும் மிக
உச்சிதமாய்க் கவுண்டண்ணியன்பரா-சரனும்-உலகில் முனிவர் மெச்சு
பக்ஷ முடன்வர நைமி சா-ராண்ணியப்-பதிவந் திருந்தனரே.

விருத்தம்

10. இருந்தந்த முனிவ ரெல்லாம் இருதயம் மிக மகிழ்ந்தே
வருந்தியே வொருத்தர்க் கொருத்தர் வந்தனஞ் செய்து யோகம்
புரிந்திடும் போது நைமி சாரண்யப் புவியிலே தான்
அருந்தவம் செய்வோ மென்று அகத்தியன் தோன்றி னரே.

11. தரித்த துளசி மணித் தாவட மும்ஜப மாலையும்
விரித்த சடை முடியும் வெண்பு லித்தோ லாசனமும்
நரைத்த தாடி வீசையும் ஞானமும் மிகுந் தகத்தியர்
திருத்த மாக வேதவம் செய்ய வுமே தோன்றினரே.

விருத்தம்

நகைத்தந்த முனிவ ரெல்லாம் நைமிசா ரண்ணியந் தன்னில்
மகத்துவம் பூமி யிற்கீர் வாணமே முத்தி யல்லால்
அகத்தியன் தமிழி னலே யாவது முண்டோ வென்று
இகழ்ச்சியாய்ச் சொல்கை யாலே யிமக்கிரி தன்னிற் சென்றார்.

தமிழ்ப்பரபந் தத்தால் முத்தி தரும்படி மாலே நோக்கி
இமக்கிரி தன்னி லேதான் ஏகியே தவங்கள் செய்யக்
கமைப்பொறி தரித்த மார்பன் கவுத்துவ மணிப் பூணுரன்
தமைத்தொழு மகத்தி யன்பால் சாமிவைகுண்டர் வந்தார்.

தரு: சங்கராபரணம்

14. அனுதினங் கீர்த்திகள் தேடவே — அடிதொழு
தமரர் களுங்கொண் டாடவே
வனிதையர் சாமரம் போடவே — கந்தர்வர்
மனம கிழ்ந்திசை பாடவே
கனகரத் தினபணி யாடவே — சேவைகளைக்
கண்டு கலிபறந் தோடவே
தினகரன் போல்முடி சூடவே — வைகுண்ட
தேவரும் கொலுவிருந்தார்.

விருத்தம்

பன்னக சயனு போற்றி பங்கயக் கண்ணு போற்றி
உன்னரு ளல்லால் வேறே யுலகினி லுண்டோ வையா
என்னுடைத் தமிழைத் தானே இகழ்ச்சியாய் முனிவ ரெல்லாம்
சொன்னதால் தமிழ்க்கு முத்தி சோதியே தருவீ ரென்றார்.

16. பொய்கையார் பூதத்தார் பேயாழ் வாரும்
புகழ்மழிசை சேரலர்கோன் பெரியாழ் வாரும்
வையகத்திற் றொண்டரடிப் பொடிப்பா ணாழ்வார்
மங்கைமன்ன னுடன்மதுர கவியாழ் வாரும்
அய்யனெதி நாதமா முனியோ டந்த
அனந்தகெரு டவிஷ்வக் சேனருந் தான்
செய்திடுவோ மவதாரம் நாமே யென்று
செப்புகின்ற பரமபத நாதன் சொல்வார்:

17. நகைப்புடன் கலியுகத்தில் நான்தானே நம்மாழ் வாராய்
அகத்திய முனியே கேளா யவதாரஞ் செய்தே யிந்தச்
செகத்தினில் முக்கிய மான திருக்குரு கூரில் வந்து
மகத்துவ மாய்வி ளங்க மறைப்பொருள் தமிழ்செய் வோமே.

வசனம் - விருத்தம்

18. சங்கரா ஜேந்திரன் வேதன் தாந்தனும் பூசை செய்யும்
பங்கய மாமலர்ப்பொற் பாதனு மாதிநாதர்
செங்கையிற் கதையும் வாளுஞ் சிலையுடன் றிகிரி சங்கும்
மங்கைய ரிருவ ரோடும் வந்தவர் கொலு விருந்தார்.

### தரு

19. எத்திசையும் புகழ்ந் தேத்தவே
எங்கள் ஆதி நாதஸ்வாமி கொலு விருந்தார்.

க சித்தபரி சுத்த கர்த்தஜக தீசன் முத்தியருளும் பிரகாசன்-குரு
கைத் தலத்தில்நிதம் வாசன் பக்தர்க்கு நேசன்
அடிதொழும் (எத்)

உ வில்லணிதோளன் ஜெல்லுலகாளன் எல்லவர்க்குங் கிருபையாளன்-கருங்
கல்லைப்பெண்ணுக்கிய தாளன் வல்லிமணுளன் குருகை (எத்)

ரூ மேகநற்றேகன் யூகவிவேகன் சோகநகத்திரு மோகன் - வெகு
நாகரிக பகூிவாகன் யோக வைபோகன் உல்லாசன் (எத்)

ச ஸ்ரீதர லோலன் வாதியர் காலன் சாதுஜன பரிபாலன் - நாளுந்
தீதிலாச் சற்குணசீலன் வேதானுகூலன் சொல்லுஞ்சதுரன். (எத்)

### வசனம் - கட்டியக்காரர் வருகிற விருத்தம்

மட்டிலாத் தவங்கள் செய்து மண்ணினிற் கீர்த்தி பெற்றோன்
நட்டணை யாக வேதான் நாரியர் நடனம் செய்யக்
கட்டளை யிடும்ப டிக்கு காரிரா ஜேந்திரன் வாசல்
கட்டியக் காரன் வந்து களரியிற் தோன்றி னுனே.

### தரு

21. தொட்டிடு மெரியடியும் — குல்லாய்த்.
தோளும் பிடித்துக் கையில் பிரம்புங்கொண்டு
சட்டையு மேயணிந்து — நரைத்த
தாடியும் பல்லையும் காட்டிக்கொண்டு
நட்டணை நடையொயிலும் — காரி
ராஜேந்திரன் கீர்த்திகள் கூறிக்கொண்டு
கட்டியம் படித்துக்கொண்டு — கட்டியக்
காரனும் வந்து தோன்றினுனே.

22. எத்திசையும் புகழுஞ்ஜக ராஜசிங்கம்
இங்கிதப் பிரசங்க அக ளங்கதுங்கன்
மத்தகெசப் புயன் ரத்தின மகுடமின்ன
மனுநீதி கீர்த்திவளர் மன்னர்மன்னன்
சித்திரநவ மணிவிளங்க மண்டபத்தில்
சிங்காதனக் கொலுவிற் சகமாள்கின்ற
கர்த்தனென்றும் போர்க்கழியார் பூபாலனீன்ற
காரிமகா ராஜன் கொலுவிருந்தான்.

## கோலு - தரு

23. மாசிலா மணிசூட—மனுநெறி கீர்த்திதேட
காசினி புகழ்ந்திட—கந்தர்வர் கானம் பாட
வீசு சாமரை போட—மெல்லியர்களு மாட
ராஜரீக வேள்காரி—ராஜன்கொலு விருந்தான்.

## விருத்தம்

24. இருபுறம் கவரி வீச இங்கிலத் தவர்கள் வாழ்த்த
அரிவையர் நடனஞ் செய்ய அடையலர் பணிந்து ஏத்த
கருடவா கனமால் தன்னைக் கழலிணை போற்றி செய்யுந்
திருவைவாழ் மார்ப ராஜன் சிறப்புடன் கொலுவிருந்தான்.

## தரு

சகலகலை நிபுண யூகன் - திருவண்பரி - சா ரம்பதியாள் வைபோகன்
ஜெகமரசர் புகழ் விவேகன் - மனுநிபுண - தீரப்பிரதா பேந்திரயோகன்
ககனவாம் பரியின் வாகன் - கீர்த்திவளர் - கர்ணனென அருளுந்தியாகன்
மகராஜ ராஜரீகன் - திருவைவாழ் - மார்பனும் கொலுவிருந்தார்.

## உடைய நங்கையார் வருகிற விருத்தம்

26. கண்கள்களி கூர்ந்திடவேற் கணைகள் பாயக்
கத்தூரித் திலதநுதற் காந்தி மின்ன
வண்பரிசா ரப்பதியில் மேவு கின்ருேன்
மண்டலத்திற் கீர்த்திவளர் மன்னர் மன்னன்
திண்புயநல் செந்திருவாழ் மார்ப னீன்ற
செல்விவத னம்பூர்ணச் சந்திர னென்ன
பெண்கள்குரு பீடமன நடையி லங்கப்
பெண்பெருமா ளுடையநங்கை தோன்றி னளே.

## தரு : புன்னுகவராளி

27. க இங்குல கெங்கும்பொற் பங்கயப் பதம்போற்றும்
நங்கையார் தோன்றினளே :
குங்குமத் திலதமுந் தங்கரேகை போற்றீட்டிப்
பைங்கிளி மொழிதிகழ் பெண்கள் கிரீடி. (இங்கு)

உ செயமதன ரதியோ வென்றுயர் செம் பொற்றுகிலுடையும்
புயல்தவழ் மலர்ச் சடையும்
நயமுமின்னிடையும் நற் செயல் கதளியின் துடையும்
கயல்விழிக்கணை கொண்ட வொயிலன்ன நடையும் (இங்கு)

௩ கொங்கை நற்பணியாடத் திங்கள் வதன மிலங்க
அங்கசனுங் கலங்கச் செங்கையிலணி ரத்தினத்
தங்கவளைகள் குலுங்க
இங்கித மிருது வாக்கியங்களுந் துலங்க (இங்கு)

௪ தெண்டனெனப் புகழ்ந் - தண்டையில் பெண்களும்
புண்டரீகக்கண்களும்
கண்டசரம் பூண்ட விண்டெனுங் கரங்களும்
தண்டைசிலம் பொலி கொண்ட பாதங்களும் (இங்கு)

விருத்தம்

திருவைவாழ் மார்ப னீன்ற செய்யிழை நங்கை யாரை
தருவான காரி யர்க்குத் தந்திட எழுதி யோலை
துரியமா யனுப்ப வேண்டித் தூதனென் றொட்டக் காரர்
அரைநிமி ஷத்தில் இங்கே அழைப்பியென் றுரைக்க வந்தார்.

தரு

29. கிலுக்குத் தடியும் முறுக்கு வீசையும்
கீத்து நாமத் திலத நெத்தியும்
பிலுக்கு நடையுங் கிரிச்சுச் செருப்பும்
பிடித்த வாளும் தரித்த தோளும்
தலைக்குல் லாயு மிடையிற் காவிச்
சல்லட மும்கச்சை யிறுக்கியிவ் வுலகில்
மலைக்க வேயந்த ஒட்டக் காரர்
மன்னர் சமுகந் தோன்றி னரே:

விருத்தம்

வந்திடும் ஒட்டக் காரர் வண்பரி சாரந் தன்னில்
இந்தரை க்ஷணமே நீங்கள் ஏகியே யிந்த வோலை
சிந்தையு மகிழ்ந்து ஈந்தே திருவைவாழ் மார்ப ருக்கே
வந்தனஞ் சொன்னோம் என்றே வழுத்தியே செய்தி சொல்வீர்.

வண்பரி சார மேவு மன்னவா கேளா யுன்தன்
பெண்பெரு மாளென் றோதும் பெயர்வளர் நங்கை யாரைத்
திண்புயல் காரி யர்க்கே தேவியு மாக வேதான்
கண்களி கூர இப்போ கன்னிகா தானஞ் செய்வீர்.

வசனம் : விருத்தம்

நல்லதென் றேயுரைத்து நகரிக ளலங்க ரித்து
வில்லணி மார்பன் காரி வேந்தனைக் குறித்து நங்கை
வல்லியைத் திருவாழ் மார்பன் மகிழ்வுடன் தருவோ மென்று
கல்லியாண முகூர்த்த மிட்டுக் களிப்புடன் வரச்சொன் னாரே.

பூவுல கெங்கும் போற்றும் போர்க்கழி யாத பூப
தேவரீர் குமார னுக்கே சேயிழை நங்கை யாரைத்
தேவியு மாக வேதான் செய்யவும் பந்த லிட்டுப்
பாவனை யாய்மு கூர்த்தம் பண்ணவும் வரச்சொன் னாரே.

தேரணி மன்னர் சூழச் சிவிகைவெண் குடைது லங்க
வீரண முரசெக் காளம் மேளதா ளம்மு ழங்க
வாரணப் பரிக ளோடும் வண்பரி சாரந் தன்னில்
தாரணி புகழக் காரி தான்மணஞ் செய்ய லுற்றான்.

சிந்து : தரு

35. க காரியெனு மகராஜர் மணஞ் செய்தானய்யா
நங்கையார் தன்னை (காரியெனு மகராஜர்)
காரியெனு மகராஜன் களிக்கக்
காமனுமே யதைக்கண் டொளிக்க
சூரிய சந்த்ரன் போற் பரி மளிக்க
தோகையர்களும் பன்னீர்கள் தெளிக்க (காரியெனு)

உ சந்திர சூரியப் பிரபை வச்சிரச் சுட்டி-தகதகென
பந்தலிட் டழ காகவே நெட்டிப்-பதுமைகளும்
விந்தை யாகவே பளிங்கு கட்டி-விரை வகைகள்
அந்தமாய்ப் பாலிகையினிற் கொட்டி அரசாணிமுன்.

மாந்தளிர் தேங்காயும் விஷ்வக்சே னரைவிதித்து மனமகிழ்ந்து
சாந்துபுனு கணிந்துதா ளிணைகளைநன் றாய்த்துதித்துத் தயவுடனே
ஏந்துநவ மணிகள்கா ணிக்கையா கவேபதித் திவ்வுலகாளும்
வேந்தர்களை னைவருந்தா முளமகிழ்ந்து சம்மதித்து வில்லுங் கெதையும்

நேமி சங்கமும் மணியாதி நாதரைப் பணிந்தேத்தி- நிகநிகெனப்
பூமலர் கொணர்ந்து பொற்றிருவடிகளில் நன்றாய்ச்சாத்தி-பூபதியான
மாமனென்னுந் திருவாழ்மார்பனை வந்தடிபோற்றி-மாதா பிதாவுந்
தாமுளமகிழ்ந் திந்தத்தரணியில் விளங்கிய கீர்த்தி சம்பவமுடன்

முப்பத்து முக்கோடி தேவர்கொண் டாடமுனி
நாற்பத்தெண் ணாயிரத் தனைவருங் கூட
செப்பிளங் கொங்கையர் மங்களம் பாட
ஒப்பிலா நங்கையோ டுஞ்சனு மாட (காரியெனு)

நெத்தியி லணிகத்தூரிப் பொட்டும் நிகநிகென
சித்திரம்போலே யழகாயிட்டும் செம்பொற் கொங்கையில்
ரத்தினப்ப ணியும்ரவிக் கைதொட்டும் நளினமலர்
ஒத்தஇந்திர நீலவர்ணப் பட்டும்உடை யழகும்

வண்பரிசா ரமெனும்பதி யாளுமுல் லாசமன் னவனருளப்
பெண்பெரு மாள்பெயர் நங்கையா மெனப்பேசப் பெருமைவளர்
திண்புயங்க ளில்நற்குங் குமவாடை கள்பூசத்தேன் மொழிமாதர்
கண்களிகூ ரவேசெங்கை யால்கவரி கள்வீசக் கணைகள்பாய.

கூரிருவி ழிகளுக்கஞ் சனமழகாய்த் தீட்டிக்கு ழல்விடுத்து
வாரிமுடித் தலங்கார மாய்மரும லர்சூட்டிமா னிலந்தன்னில்
பேரணியெங்கும்விளங்கியபெண்கள்கிரீடி பேசக்கேள்மன்னன்
காரியின் மனைவியென்றே ஜயவிருது கள்நாட்டி கமகமென

சந்தணம் புனுகு மணிந்து சவாது
சந்திர காந்தியின் மேடையின்மீது
சிந்தையு மிக மகிழ்ந்திடவுமப் போது
சிங்காசனத் திலிருந்தனள் மாது (காரியெனு)

கந்த கத்தூரி பரிமளிக்க கருத்தி லன்பாய்ச்
செந்திருவாழ் மார்பனுங் களிக்க தெய்வ ரம்பையர்
வந்து மன்னர்க்குப் பன்னீர்தெளிக்க மருவு மலரோ
டந்தமாய்ச் சுருள்களு மளிக்க அந்தணர்களும்

நாழிகைபார்க்க வென்றோடி வந்தடிக ளளக்க-நாதகீதங்கள்
கோடிமுழங்கவே பூர்ணகும்பம் விளக்க - கொடுங்கை கட்டும்
வாழைகள் தெர்ப்பைகள்வைத்து சமித்துத்துலங்க - மாமறையோர்கள்
சூழவே மந்திரஞ் சொல்லியே ஓமம் வளர்க்க தொனிவிளங்க

நாகரீகத்துடன் நாகேச மேளமடிக்க நலமுடனே
நாக சுரதிருச்சின்ன மெக்காளம் பிடிக்க நாளுமிந்திர வை
போகனெனக் கட்டியங்கள் புகழ்ந்து படிக்க புளகிதமாய்த்
தோகையர் வந்தடி போற்றியே பரதம் நடிக்க சுகந்தவரடை

வீசவுமே பதிங்காத மளாவ
வேதியர் மணமிடுமென்றவர் கூவ
தேச ராஜர்கள் பூ மாரிகள் தூவ
சீர்வளர் தாந்த க்ஷேத்திரமேவ (காரியெனு)

## விருத்தம்

36. காரியும் நங்கை யாரைக் கல்லியாணஞ் செய்து வந்து
தாரணி யாண்டு கொண்டு சுதிருட னிருக்கும் போது
பேரினி விளங்க வேதான் பிள்ளையும் வேண்டு மென்று
வாரணி தனத்தாள் நங்கை மனைவியோ டேது சொல்வான்

## தரு

37. க கீர்த்தி சோதி தங்கையே—ஆதிநாதரைப்
போற்றி வருவோம் நங்கையே

உ ஏத்தமாய்க் குருகையில் வீற்றிருக்கு மால்தன்னை
தோத்திரமுஞ் செய்து பிரார்த்தனை நிறைவேற (கீர்த்தி)

ந தூயன் பஞ்சவற்குச காயன் ஆனெயுண்கனி
வாயன் நமக்குநல்ல சேயனுந் தருவார்காண் (கீர்த்தி)

ச சீலன் ஸத்ஜனபரி பாலன் அமரர்க்கனு
கூலன் நமக்குநல்ல பாலனுந் தருவார்காண் (கீர்த்தி)

ரு தீரன் மரதக சரீரன் சகலஜன
தாரன் நமக்குசற்கு மாரனுந் தருவார்காண் (கீர்த்தி)

சு செந்திரு வளர்மார்பன் இந்துவதனன் அர
விந்தமேலர்சுனன் நல்ல மைந்தனுந் தருவார்காண் (கீர்த்தி)

எ எத்திசை பணியுங்க வுத்துவ மணிமார்பன்
சித்தமகிழ்ந்து நல்ல புத்திரனுந் தருவார்காண் (கீர்த்தி)

## விருத்தம்

38. சங்கரா ஜேந்திரன் பிரமர் தாந்தனும் பூசை செய்யும்
பங்கயப் பதனே புத்திர பாக்கியம் மடியே னுக்கு
விங்களமெல் லாம் வீய வேணுமென் றுரைத்துக் காரி
நங்கைய ருடனே யாதி நாதனைப் பணிகின் றுளே.

39. மேதினி யாளுங் காரி வேந்தனும் போற்றி நிற்க
ஆதிநா தனுமு கந்து அன்புடன் தெற்கு வீட்டில்
தீதிலா திருக்கு மந்தத் திருக்குறுங் குடிமால் நம்பி
பாதமே பணிந்தா யாகில் பாலனுந் தருவா ரென்றார்.

தரு: புன்னாகவராளி

40. வாராய் நீ நங்கையாரே — நமக்கு மைந்தன்
வரமும் தருவ ரவரே.

க நாராய ணவென்று நம்பிமால் தனைத் தியானம்
பாராய ணமேசெய்தால் பலித்திடு மேசந் தானம். (வாராய்)

உ வானமா மலைவாசனை
மாமலர்த் திருவடிபணிந்து சர்வேசனை
தேனே குறுங்குடியிற் செழிக்கும் பிரகாசனைத்
தெரிசித்து வருவோம் நம்பிமால் ஜகதீசனை (வாராய்)

ந பத்தர் பணியும் பொற்றாளன்
பதுமலோசனன் பரமபுருஷ தயாளன்
எத்திசையுமே புகழ்ந்தேத்து மேழைபங்காளன்
இதயானுக்கிர கனிவனென்றும் நற்பேராளன். (வாராய்)

சு இகபர மறிவதற்கும் புத்திரனில்லாற்கு
இல்லையென்று சொல்வார் சொர்க்கம்
சகல பாக்கியமும் பெற்றுத் தானென்ன நிலைநிற்கும்
தவத்தால்ச் சந்ததிபெத்தால் தழைக்கும் நம்முடைய வர்க்கம். (வாராய்)

ரு ஆதிநாதன் சொல்ப்படிக்கே நாமிருவரும்
அடிமை யாயவர் குடிக்கே
மாதே செல்லுவோம் நம்பி மாலின் திருவடிக்கே
வணங்கித் தவங்கள் செய்வோம் மைந்தன் வரும்படிக்கே. (வாராய்)

விருத்தம்:

41. அறங்களும் விளங்க நாளும் அவனியிற் காரி ராசன்
சிறுவனும் வேணு மென்று செய்திடுந் தவத்தி னாலே
நிறங்கள்சேர் சங்கும் வாளும் நேமியுங் கரத்தி லேந்தி
குறுங்குடி நம்பி மாலுங் கொலுவினி லிருக்கின் றாரே.

தரு: கல்யாணி

42. க நானிலமெங்கும் புகழ் திருக்குறுங்குடி
நம்பிமால் கொலு விருந்தார்
வானவர் நிதம் வந்து தொழும் பொற்றாளன்
வண்டணியு மரு மாமலர்க் கண்ணன்
கொண்டல் தவழ்மேனி கொண்ட மணிவண்ணன். (நானில)

உ பாதஞ்சிலம் பொலி கொஞ்ச - சேவையைக் கண்டு
பறந்து கலிகளு மஞ்ச
சீதள சந்திரவதன வொளிகள் மிஞ்ச
திகிரி சங்கமுஞ் சிலையு மிலங்கவே
மகிமை கவுத்துவ மணியும் விளங்கவே. (நானில)

ந. தாதமர் கமலக் கையும் - தகதகென
தபனன் விளங்கிய மெய்யும்
ஹேதகமாகச் சூழ்வினைகளைக் கொய்யும்
சுந்தரந்திகழப் பந்துமுலை மாதர்
விந்தை நயனமுஞ் சிந்தை மகிழ்ந்திட. (நானில)

ச தண்டுள்ப மணிதோளன் - செய் கிருபையாளன்
தரணியளந்த பொற்றாளன்
வண்டணி மலர்க்கையில்க் கெதையும் வாளன்
மாதர்களும் வெண்சாமரைகள் போடவே
வேத நாத சங்கீதம் பாடவே. (நானில)

வசனம்: விருத்தம்

43. வேதனை யளித்தாய் போற்றி விண்ணவர்க் கரசே போற்றி
பூதல மளந்தாய் போற்றி புதல்வனுந் தருவாய் போற்றி
ஸ்ரீதர மார்பா போற்றி திருங்குறுங் குடியில் மேவும்
நாதனே யென்னையாள் கின்ற நம்பியே போற்றி போற்றி.

வசனம்: சௌராஷ்டிரம்:

44. க உன்னை நம்பினேன் நானே
பின்னை வேறில்லை தானே
இந்நிலம் புகழ் பொற் பாதா
என்னையாளும் நம்பி நாதா (உன்னை)

உ அடியவர்க்கரு ளாளா-அணிசேர் துளவத் தோளா
முடியழகிய பொற்றாளா-முகமலர்ந் தென்னையாளா
(உன்னை)

௩ கல்விப் பொருள்களைத் தேட-கருத்தில் நித்தங் கொண்டாட
வல்வினைகள் பறந்தோட-வாழ்குருங்குடி நாட (உன்னை)

௪ அனுதினங் கிருபை பார்க்க-அடியேனையும் தற்காக்க
மனதன்பாய்ப் பரமேற்க-மைந்தன் கலியைத் தீர்க்க (உன்னை)

## விருத்தம்

45. தீர்க்கமாய்க் காரி மன்னன் தேவியுந் தானு மாக
கார்க்குழ னேமி நம்பி கழலிணை போற்றி நிற்கும்
மார்க்கமு மறிந்தா காச வாணியு மன்னு வுந்தன்
பேர்க்கிந்தச் சென்மந் தன்னில் பிள்ளையு மில்லையென்றார்.

46. பிள்ளையில் லார்க்கு முத்தி பெறுவது முண்டோ வென்று
உள்ளமு மிகத்த ளர்ந்து உருகியே மேனி வாடி
வெள்ளமாய் விழிநீர் சோர வேந்தனென் றோதுங் காரி
வள்ளலும் நம்பி மாலே வருந்தியே புலம்ப லுற்றான்.

## புலம்பல் : தரு

47. க உன்தன் பாதங் கதியல்லாலிந்த
உலகினில்வேறு முண்டோ நம்பிநாதா—நான்
மைந்தன் இல்லாப் பாவியென்றே
நிந்தனைக்கா ளாகவிதித் தாயோ நம்பிநாதா

உ கர்த்தனே யுன்பாதமெனக்
குற்றதுணை யென்றிருந்தேனே நம்பிநாதா—நான்
புத்திரனில்லாப் பாவி யென்றே
பித்தனென்றுஞ் சொல்லவிதித் தாயோ நம்பி நாதா

௩ ஆலயம டைத்துவைத்த
சாலைவெட்டி வீடுகட்டி னேனோ நம்பிநாதா—நான்
பால னில்லாப் பாவியென்றே
ஞாலமுமந கைக்கவிதித் தாயோ நம்பிநாதா

௪ வேலியடைத் தபயிரைக்
காலிகளை விட்டழித்தேனோ நம்பிநாதா—நான்
கூலியைக் குறைத் தளந்து
சூலிகளைக் கண்டுபிரமித் தேனோ நம்பிநாதா

௫ தெள்ளுமறை யோர்பொருளைக்
கொள்ளையிட்டுக் குடி கெடுத்தேனோ நம்பிநாதா—நான்
பிள்ளையில்லாப் பாவியென்றே
யுள்ளமுமுரு கவிதித்தா யோ நம்பிநாதா

௬ விற்கும் விலைகள் குறைத்தக்ரமமாகப்
புவியாண்டேனே நம்பிநாதா—இப்போ
மக்களில்லாப் பாவியென்றே
சொர்க்கமில்லை யென்றுவிதித்தா யோநம்பி நாதா

௭ நல்லோர்களைக் கண்டு நானும்
பொல்லாங்குசொல் லியேதூஷிந் தேனே நம்பிநாதா
வல்லமையே சியேபிற
ரில்லாளைக்கூடிப் பாவஞ்செய் தேனே நம்பிநாதா

௮ மண் தனிலோ ரங்கள்சொல்லிப்
பெண்கொலைகள் செய்யவுஞ்சொன் னேனே நம்பிநாதா
கண்களாலே பார்த்து நல்ல
தண்கரைகளை வெட்டிவிட் டேனே நம்பிநாதா

௯ தந்தைதாய்க ளைக்குருவை
நிந்தனைகள் சொல்லித்திரிந் தேனே நம்பிநாதா—இப்போ
தொந்த வினைகள்சூழ்ந் திடச்
சந்ததியில்லாப் பாவியானேனே நம்பிநாதா

௧௦ நித்தியகர் மங்கள்விட்டு
சத்தியந்த வறித்திரிந் தேனே நம்பிநாதா—நான
பெற்ற பிள்ளை களைச்சிறை
வைத்துப் பணங் கொடென்றடித்தேனே நம்பிநாதா

௧௧ பசுகத்தவுங் கன்றுக்குப் பாலைச்
சற்றும் விடாமலே கறந்தேனே நம்பி நாதா நல்ல
பத்தி னிமங்கையர் களைக்
குத்தஞ் சொல்லிப் புணர்ந் தேனே நம்பி நாதா.

## விருத்தம்

48. தேவியைப் பார்த்து மன்னன் திகைத்தவன் சிறுவ னில்லாப்
பாவியு மானே னென்று பரதவித் துருகி யேதான்
ஆவியும் பதைக்கு தையோ அரிகரி நம்பி யென்றே
கூவியே மனைவி யோடுங் குனிந்தவன் போற்றி செய்தான்.

49. போற்றியே் காரி மன்ன புகலுவோம் கேளா யுந்தன்
கோத்திரம் விளங்க வேநாங் குமாரனு மாவோ மென்றும்
ஏத்தமாய் நீயு மிப்போ திவ்வுல காண்டு நாளும்
கீர்த்திகள் பெறுவா யின்னம் கிலேசமேன் விட்டி டாயே.

50. மாசிலா முடி தரித்த மன்னவன் காரி ராசன்
வாசமாய்த் தாந்த க்ஷேத்ரம் வந்தபின் நம்பி மாலும்
பேசின படிக்கு நாமே பிள்ளையு மாவோ மென்ன
காசினி விளங்க நங்கை கர்ப்பமு மாகி ளுளே.

51. மைப்புயல்குழலாள்கற்ப மசக்கையால் முகம்வெளுத்
தப்பொழு தைந்து மாத மாகவு முடல் கனத்து
செப்பிள முலை கறுத்துச் செல்லவும் பத்து மாதம்
சப்பைவாய் மருத்துவச்சி தானவள் தோன்றி ளுளே.

தரு

முலையுந் தோல் துருத்திபோல - முகமுந் திரங்கி யேதான்
தலையும் பஞ்சி போல - மிகத்தா னரைத்து
எலிக்கண் பீளைகள் சோர-இரும்பி யிரைத்துடல்
குலுக்கக் குலுக்கக் கையிற் – கோல்பிடித் தந்த
மருத்துவச்சி தோன்றி ளுளே — ஐயா அந்த
மருத்துவச்சி தோன்றி ளுளே.

விருத்தம்

53. மருத்துவம் பார்க்கும்போது மைந்தனு மவதரிக்கக்
கருத்தினில் மிகமகிழ்ந்து காசிரா சேந்திரனப்போ
விரித்திடும் விதைகள்தானம் வேதியர்க் கேயளித்துத்
துரைத்தன முடனேமன்னன் சுகமுட னிருந்தகாலை.

54. இருந்திடும் பொழுதுநங்கை யிவ்வுல களந்தநம்பி
தருந்தவப் பாலனென்று தானுள மிகமகிழ்ந்து
வருந்தியேயெடுத்தணைத்துமடிமீதில்வைத்துக்கொண்டு
திருந்தவுமே தாலாட்டுச் செப்பியே மகிழலுற்ருள்.

தாலாட்டு

சூரியன்போல் தெற்குதையந் தோன்றவுமே மேனியெங்கும்
காரி குலம்விளங்கக் கண்மணியாய் வந்தவரோ. (1)

வாரிக் கனகரத்தினம் மாமறையோர்க் கேயளிக்கும்
காரிக்குப் பிள்ளைக் கலிதீர்க்க வந்தவரோ. (2)

வள்ளலென்னுங் காரி வரங்கேட்க நம்பியென்பாற்
பிள்ளைக்கலி தீர்த்த பெருமானே கண்வளரீர். (3)

சிறுகுழந்தை வேணுமென்று செய்தவத்தாற் காரியார்க்கே
குறுங்குடியில் மேவுநம்பி கொடுத்த மகனுரோ. (4)

ஆணிப்பொன் னேயமுதே யடிதொழுது வேந்தரெல்லாம்
காணிக்கை கொண்டுவருங் காரி மகனுரோ. (5)

கழுவாத நன்மணியோ கண்ணுரந்த கற்பகமோ
வழுதிவள நாடாள வந்துதித்த குஞ்சரமோ. (6)

சந்ததியும் வேணுமென்று தவஞ்செய்த காரிமன்னன்
சிந்தைக் கவலையெல்லாந தீர்த்த தயாபரனே. (7)

சேவித்துக் கைகட்டித் தேசமெங்குந் தான்புகழப்
பாவித் தரசாளும் பாலகனென் பால்குடியாய். (8)

தங்கவளைக் கைவீசித் தவழ்ந்துமடி மீதிருந்து
கொங்கை சுரக்குதடா குழந்தாய்நீ பால்குடியாய். (9)

விருத்தம்

56. பாலையு மேகுடிக்கப் பரபரத் தழுதுகையும்
காலையு முதறிக்கொண்டு கண்ணையும் திறந்துபாராப்
பாலனைக் கையிலேந்திப் பதைத்துட லுருகியேதான்
வேலினேர்விழியாள்நங்கைவிசாரமிட்டரற்றலுற்ருள்.

சிந்து தரு

57. கோடான கோடிதவ மாச்சுதோ மகனே-யென்
குழந்தையாய் வந்தநீ கூவியழாயோ யென்மகனே (1)

நாடாளுவாயென்றெண்ணி யிருந்தேனேமகனே-என்னை
நல்லோர்கள் நாட்டில் நகைக்கவுதித்தாயோ மகனே. (2)

அன்னை முலைப்பா லருந்தா திருப்பாயோ மகனே-நா
னுன்னை நம்பியிவ் வுலகி லிருந்தேனே மகனே எந்தன் (3)

சிந்தைக் கவலையைத் தீர்ப்பாயென் றெண்ணினேன் மகனே - புவி
மைந்தரைப் போலுன் வாயைத் திறந்தழாய் மகனே (4)
உண்மையாக உன்னைப் பெற்று மகிழ்ந்தேனே மகனே - என்றன்
கண்மணியே யுன்தன் கண்ணைத் திறந்துபார் மகனே (5)
பெற்ற மனதுதான் பித்தாகு தென்செய்வேன் மகனே - நீதான்
சற்றேயுன் சர்க்கரை'வாயைத் திறந்தழாய் மகனே (6)
கொற்றவன் காரி குலம் விளங்க வந்த மகனே-யுன்னைப்
பெற்றும் பெறாத மல டியு மானேனே மகனே-பிள்ளை (7)
பெற்றாரைக் கண்டு பெருமூச் செறிந்தேனே மகனே - இப்போ
உற்றார் நகைக்கவுடம் பெடுத்தே னேயோமகனே-இந்தக்(8)
கோட்டிகள் கொள்ளுங் குறுங்குடி மால் தந்த மகனே - என்னைச்
சாட்டைப் பம்பரம்போலாட்டி வைப்பாயோ சொல்மகனே-இந்த
நாட்டில் விளங்கிய கீர்த்தி பெருமலே மகனே-நடுக்
காட்டிலேவீ ணுயெறித்த நிலவானேன் மகனே (10)
பட்டமுங் கட்டியிப் பாருல கையாளு மகனே-செத்தே
வட்ட முலையுண்ண வாயைத் திறந்தழாய் மகனே (11)
கட்டியங் கூறியெக் காளம் பிடிக்கிறார் மகனே-வெகு
திட்டமா யுன்தன் கண்ணைத் திறந்துபார் மகனே (12)
சீதள சந்திரன் போல் வதனம் பெற்ற மகனே-பெற்ற
மாதாவென் றேயுன் மனதி ரங்காதோ சொல் மகனே (13)

விருத்தம்

சங்குமங் கிலியம் ரத்தினச் சரப்பளி தகத கென்னச்
செங்கயல் வயல்சூழ்தாந்த க்ஷேத்ரம்வாழ் காரிமன்னன்
நங்கைமைந் தனுக்கேயேழா நாளிற்காப் பிடவுமென்றே
கொங்கைகள் குலுங்கக்காது குத்தவுங் குறத்திவந்தாள்.

தரு

59. சிங்கப் பதக்கமுஞ் சங்குப் பணியுமி
லங்கக் குறக்கூடை யிடுக்கியே
தங்க மெனுமிரு கொங்கைக் குடங்கள்கு
லுங்கக் குலுங்கமெய் குலுக்கியே-குறவஞ்சி வந்தாள்

பார்த்திபன் தாந்த க்ஷேத்திரம் வளர்காரி
வீற்றிருக்கும் வள நாட்டினில்
தோத்திரங் கள்செய்து சாத்திரம் பகர
மாத்திரைக் கோலுங் கையுமாய்க்-குறவஞ்சி வந்தாள்.

குறத்தி அகவல்

60. குழல்முகில் பிறையின் அழகிய நுதலும்
சிலையிரு புருவம் வலையெறி விழியும்
நலமெனுஞ் செண்பக மலரெனு நாசி
பல்லொளி முல்லை சொல்லிளங் கிள்ளை
வாசமே கமழ்வாய் தேசுநற் குமுதம்
தொனிகுயி லிதழ்மாங் கனிமதி முகமும்
கண்டமுங் கமுகு விண்டெனுங் கரமும்
இளங்கிளி யுகிர்காந் தளுளங் கையும்
கொங்கைகள் திகழ்நல்மாறி பங்கய வரும்பு
காரிரு ளெறும்பு சாரிரோ மாவலி
உந்திநீர்ச் சுழியர விந்தநூ லிடையும்
மான்குளம் பல்குல் தான்துடைக் கதலி
ஞெண்டு வராலெனக் கொண்ட முழந்தாள்
அரும்பு தெரிந்த குறும்பை கணைக்கால்
பொத்தக மெனுமிரு சித்தடி யழகும்
தாள்பொற் சிலம்பு சதங்கையுங் கொஞ்ச
வாள்விழிக் கணையில் மாதவர் மயங்க
சந்திரசூ ரியப்பிரபை தரளமும் வச்சிர
கொந்தள வோலை கூர்நுதற் சுட்டி
சிந்துரத் திலகந் தீட்டியே யழகாய்
சந்திர வதனந் தகதக தகெனக்
கஞ்சமா மலர்விழிக் கஞ்சனந் தீட்டி
பச்சிள முலைபொற் கச்சணி விளங்கு
கணடபே ரணம்பொற் குண்டுநற் பவளமுங்
குன்றி மணியுநற் கொத்துடன் வச்ர
கண்ட சரப்பளி கழுத்தணி யாரம்

சங்குமங் கிலியந் தரளமா லிகையும்
சிங்கப் பதக்கமுஞ் சிறப்புட னிலங்க
முன்கை முத்தாரி முத்துமூக் குத்தி
தங்கக் கடையமும் சரிகையு மணிந்து
சங்கணி வளைகள்தான் கலகல கலென
கும்கும் வாடை குமுகுமு குமென
மாகன கத்துகில் மளமள மளென
மேகலா பரணம் மிகசல்சல் சலென
ஒட்டியா ணமுடன் இட்டரை ஞாணும்
வடிவுள வெவையும் கடைவிழிப் பார்வையும்
பிள்ளைமா ராப்புங் கொள்ளிறு மாப்பும்
நாடுசெம் பொற்குறக் கூடையும் இடுக்கி
சாத்திரம் பகரும் மாத்திரைக் கோலும்
குறியுரை செய்யும் அறிவுள மெய்யும்
பூசிய கதம்பம் வீசியே காதம்
குமுகுமு குமென கமகம கமென
திருவளர் காரி வரைதனில் மேவும்
அரிவையர் கையில் உரைசெய்மெய்க் குறியும்
மிஞ்சிய புகழ்க்குற வஞ்சிவந் தனளே.

தரு

61. ஞானக் குறத்தியும் வந்தாளையா—ஒய்யாரமாக
ஞானக் குறத்தியும் வந்தாளையா.

ஞானக் குறத்தியும் வந்தாள்
நற்குறி சொல்கையிற் பிந்தாள்
தானிவள் நங்கைக் குகந்தாள்
ததகிட திமிதிமி தலாங்கு தோமென (ஞான) 1

அங்கமி வளப ரஞ்சி
அன்ன நடைஒயில் மிஞ்சி
பைங்கிளி மொழிபோற் கொஞ்சி
பத்மினி சாதியு தித்தனள் வஞ்சி. (ஞான) 2

சங்குமங் கிலியங் கட்டி
சந்திரசூர் யப்பிரபை சுட்டி
செங்கை தனிற்குறப் பெட்டி
சேணுதய சௌந்தரி தலாங்குதோமென.(ஞான) 3

நற்றமிழ்க் கருளுங் காரி
ராசேசந்ரன் நாட்டில் சிங்காரி
தத்திமி ததக்கிட தாரித்
தகிட திமிதிமி தலாங்கு தோமென. (ஞான) 4

குங்கும வாடைகள் பூசி
கொங்கண டங்கண தேசி
தங்க வளைக்கையை வீசி
ததகிட திமிதிமி தலாங்கு தோமென. (ஞான) 5

ஞானக் குறத்தியும் வந்தாளையா - ஒய்யாரமாக
ஞானக் குறத்தியும் வந்தாள்.

வசனம் — வாசல் தரு (நவரோசி)

62. வாசலிது வாசலிது - அம்மே
மகராசன் வாசலிது அம்மே.
ராசரீக னெனுங்காரி யம்மே
மகராசன் வாசலிது அம்மே. (1)

வன்னமணி முடி தரித்த மன்னர்
வந்துதொழும் வாசலிது அம்மே.
அன்னமுடன் சொன்னங்களு மன்பாய்
அளிக்கும்செம்பொன் வாசலிது அம்மே. (2)

தனதான்ய சௌபாக்யம் மிகவே
தான் விளங்கும் வாசலிது அம்மே
கனதைபெற அனைவருக்கும் அருளும்
கன்னனென்னும் வாசலிது அம்மே. (3)

தங்கரத்தின சிவிகைகளும் அம்மே
சந்திரகாந்த மேடைகளும் அம்மே.
மங்களம்போ லனுதினமும் மிகவே
வாழ்வுபெறும் வாசலிது அம்மே. (4)

தேசமெங்கும் புகழ்தாந்த க்ஷேத்திரம்
செழிக்க வந்தோன் வாசலிது அம்மே.
மாசிலாமா முடிதரித்த காரி
மன்னனுடை வாசலிது அம்மே. (5)

பொழிகருணை யாதிநாதர் பாதம்
போற்றுகின்றேன் வாசலிது அம்மே.
வழுதிவள நாடாள இங்கே
வந்துதித்தோன் வாசலிது அம்மே. (6)

சொற்காதி போகம்வள ரிந்த்ர
சுமுகனுடை வாசலிது அம்மே.
சற்குணனும் போர்க்கழியார் அருளும்
தனயனுடை வாசலிது அம்மே. (7)

வசன விருத்தம்

63. வாசநல் தாந்த க்ஷேத்திர மன்னவன் வழுதி நாடன்
காசினி புகழ்ந்து போற்றுங் காரிரா சேந்திர னுட்டில்
வாசலின் மகிமை கேட்டு மனசுசந் தோஷ மாச்சு
தூசிலா துனது சாதி மகிமையைச் சொல்லு வாயே.

தரு

64. சாதியின் மகிமைகே ளம்மே - எங்கள் குறச்
சாதியின் மகிமைகே ளம்மே.

ஆதிநாதரைத் தொழுங் காரி ராசன்னுட் டணங்கே(சாதி)1

கறுத்தபொற் றுகிலாடை யுடுப்போம் - மனம்
களிக்கக் கொழுந்தனைக் கட்டியணைத்துப் படுப்போம்.
குறத்திகள் பிள்ளைபெற் றெடுப் போம்-நாங்கள்
குழுவனுக் குக்காயம் கூட்டியே கொடுப்போம். (சாதி) 2

சங்கையில் லாமல்சஞ் சரிப் போம் - அம்மே
சங்குப்பணியுஞ் சிங்கப் பதக்கமுந் தரிப்போம்
வங்கணவகை தெரிந் துரைப்போம் - செம்பொன்
மலையிற் கனிகளுண்டு மகிமைபெற் றிருப்போம். (சாதி) 3

இட்டமாய்க் கைக்குறி பார்ப்போம் - பெண்கள்
இருதயத்தில் இருக்கின்ற கவலையைத் தீர்ப்போம்
திட்டமாய் அபிமானம் காப்போம் - குறி
செப்பியே செம்பொன்தரச் செங்கை ஏற்போம். (சாதி) 4

காட்டி லகிற் கொம்பு வெட்டிக் - குடிசை
கட்டிக் கவரிமயிர் கனக்கவே கட்டி
மேட்டிமை யாய்க்குறப் பெட்டி - கையில் விளங்க
நாட்டினிற் குறி விளம்புவோம் கெட்டி. (சாதி) 5

வக்கர மணிகுன் றி பூனே - காச்சி
மணியணி வோம்வள்ளி மணவாளன் தானே
திக்கெங்கும் புகழ்படைத் தோனே-யந்தச்
சிவனுடை மகனெங்கள் மருமகன் தானே. (சாதி) 6

வசன விருத்தம்

65. குறிசொல்லுங் குறத்திமாதே கொற்றவன் காரிராசன்
அறிவுடன் தவங்கள்செய்யு மதிசயங்கண்டு அன்பாய்
குறுங்குடி நம்பிமாலுங் குமாரனு மாவோமென்னச்
சிறுவனுக் கின்னதென்றே செய்கையைச் சொல்லுவாயே.

விருத்தம்

66.செய்கையைச் சொல்வேன் காரிதேவிநீ நங்காய்கேளாய்
மைம்முகி லாதிநாத மாலின்சன் னதிக்கேசென்றால்
உய்யவு முலகமெல்லா முத்தமாசுணப்பு ளிக்கீழ்த்
தெய்வமாய் வாய்திறந்து செப்புமுன் மகனுமென்றாள்.

67. வெகுமதி குறத்திக்கீந்து வேந்தனும் நங்கையாரும்
நகைமுகச் சோதியாதி நாதனைப் புகழ்ந்துபோற்றி
செகமெல்லாம் விளங்கவேயான் சிறுவனைப் பெற்றகீர்த்தி
தகைமையும் விளங்கவென்றே யுரைத்துச்சன் னிதியில்விட்டாள்.

68. பிள்ளையென் றேமகிழ்ந்தே பெற்றிடும் நங்கையாரும்
வள்ளலென் றோதுங் காரி மன்னனும் பார்த்திருக்க
உள்ளமு மகிழ்ந்தே யாதிநாதனை புகந்துபோற்றிக்
கள்ளமாய்ப் புளிக்கீழ் மாறன் கைதவழ்ந் தேகலுற்றான்.

தரு: (மத்யமாவதி)

69. தவழ்ந்தே வரற் சேவையைப் பாரும்–ஞானதேசிகன்
தவழ்ந்தே வரற் சேவையைப் பாரும்.

தவழ்ந்தே மலர்க்கரங்கள் சிவந்திடவும் புளிக்கீழ்
தவம்புரிந் தடியவர் பவங்களை யுமகற்ற. (தவழ்)

தண்டைநூ புரவொலி கொஞ்ச – தழைக்குஞ் சந்திர
மண்டல முகத்தொளி மிஞ்ச - வடிவழகைக்
கண்டே யோடவுங் கலியஞ்ச - கத்தூரிக்காப்பும்
வண்டணி மலர் முத்துக் - கொண்டைகுலுகுலென
கண்ட சரப்பளி கலகலகலென. (தவழ்) 1

சந்திரசூரியப் பிரபையுஞ்சுட்டி – தகதகதகென
விந்தையா கச்சிரசிற் கட்டி - மெய்யர்க்குமெய்யன்
தந்தை தாயையு மெள்ளத்தெட்டி - தானுதிமாலை
வந்தனமும் செய்து – சிந்தை மகிழ்ந்துசேட்த்
திந்திருணிக் கீழ்மறைச் செந்தமிழ்பாட. (தவழ்) 2

தொண்டர்க் கன்பான கிருபையாளன் - சோதிச்செழும்
புண்டரீக மலர்ப் பொற்றாளன் - புளகிதமான
தண்டுளப மணிந்த தோளன் - தாழ்வச்சிர
குண்டலங் களசைய எண்டிசை – யனைவரும்
தெண்டனிட்டுச் சேவையைக் கண்டுகண்களிக்க. (தவழ்)3

விருத்தம்

70. விட்டிடும் பிள்ளைதானும் மெள்ளவே தவழ்ந்துவந்து
திட்டமாய்த் திருப்புளிக்கீழ் சிறுவனும் இருக்கும்போது
அட்டதிக் கினிலும் போற்றும் ஐயனென் றோடிவந்து
வட்டமா முலையாள்நங்கை மைந்தனைப் பார்த்துச்சொல்வாள்.

தரு (கேண்டை)

ஆதிநாத ரையுமன்பாய் அடியிணைகளைப் போற்றி
சோதிவாய் திறந்துவார்த்தை சொல்லுவாய்நீ யென்றிருந்தேன் 1

வேதனைக்கா ளாவாயென்று விதித்தானோ என்தலையில்
மாதவம்செய்த திதனுக்கோ மைந்தனேநீ யிங்குதித்தாய் 2

வேதியர்கள் வீதிகளும் வேந்தர்களின் வீதிகளும்
தாதியர்கள் வீதிகளும் சற்சனர்கள் வீதிகளும் (3)

ஓதுமறைச் சாலைகளும் ஓங்குகரும் பாலைகளும்
தாதலர்ப் பூங்காவுகளும் தாமரையின் வாவிகளும் (4)

மண்டபவ லங்காரமும் மணிமதிட்கோ புரங்களும்
அண்டர்கள்பரி வாரமும் ஆதிமாலுக் குபசாரமும் (5)

சேடப்புளிக் கீழ்ப்பிரம தியானஞ்செய் திடும்நேசமும்
நாடுந்தென் திருக்குருகை நகரிதனில் வாசமும் (6)

பத்துமாத முஞ்சுமந்து பரிவாக நானுமுன்னைப்
பெத்ததிதுக் கோமகனே பெருமானே யிங்குதித்தாய். (7)

விருதெக்கா ளம்பிடிக்க மெல்லியர்க ளும்நடிக்க
மருமலர் கள்முடிக்க வந்துகட்டி யம்படிக்க (8)

முரசுக ளுமடிக்க முடிமன்ன ரடிபோற்ற
அரசாளா மல்மகனே அய்யனேநீ யிங்குதித்தாய். (9)

வசனம் கலித்துறை

72. திருவவ தாரத் திருப்புளி நீழற் சிறுவனுமே
ஒருகையில் ஞான உபதேச முத்திரை யோங்கியநல்
பெருமையி னுண்மையை நங்கையு மேகண்டு பிள்ளையென்றே
அருமை களுமிட் டழைத்தோடி யேவந் தரற்றினளே.

புலம்பல் தரு கேண்டை

ஐயகோநா னென்னசெய்வேன் அரியதவ மும்செய்தேன்
வையகம்ந கைக்கப்பெற்றேன் மைந்தனில்லாப் பாவியானேன். 1

வள்ளல்காரி ராசன்தானே வரம்பொய்த்த தறியேனே
பிள்ளையென்று மகிழ்ந்தேனே பெற்றும்மல டியானேனே.2

இட்டபாக்கி யங்கள்பெற்றேன் இவ்வுலகை ஆண்டிருந்தேன்
பட்டங்கட்ட யாரைவைப்பேன் பாலனேநான் என்னசெய்வேன்

பாலனுமில் லாதபாவி பதைக்குதடா என்னுவி
ஓலமிட்ட ழைத்தாற்கூவி ஓடிவாகு ழந்தாய்தாவி. (4)

கொற்றவன் தவம்புரியக் கொங்கைரெண்டும் பால்சொரிய
பெற்றவர்க் குபகரியாப் பிள்ளையுண்டோ சொல்தெரிய (5)

பெற்றமனம் பித்தாமல்லோ பிள்ளைமன தேதுகல்லோ
உற்றதுகே ளெந்தன்சொல்லோ உன்செவியிற் கேளாதல்லோ.

புதல்வருட னேகூட போய்மகனே விளையாடடா
கதறநான் ஞாயமோடா கண்மணியே கிட்டவாடா. (7)

மாதவத்தோர் போதனையோ மனத்துயர வேதனையோ
ஆதிநாதன் சோதனையோ அறியேன்சொல் நீதானேயோ.

இன்னதென்று அறியேனே ஏதுசெய்வேன் விதியோனே
மன்னவர்க்கு மன்னவனே வாய்திறந்து சொல்மகனே. (9)

விருத்தம்

74. மகத்துவ முடைய நங்கை மன்னவன் காரி ராசன்
திகைத்தவர் விசார மிட்டுச் சிந்தையும் உருகியேதான்
செகத்தினில் விளங்கவேநான் சிறுவனைப் பெற்றதற்கு
நகைக்கிட மாச்சு தென்று ராசனும் வீற்றி ருந்தான்.

வசனம் விருத்தம்

75. வீற்றிருந் தவனுங் காரி வேந்தனும் மைந்த னுக்கே
பார்த்திட வேணும் நாடிப் பரிக்ஷையும் ஆய்ந்து பார்க்க
மாத்திரைப் பையுங் கொண்டு வாகடப் படியு ரைக்கும்
சாத்திர வைத்யர் தம்மைத் தானிங்கே வரச்சொல் வீரே.

76. வாதபித் தங்கள் சேட்பம் மந்திர யந்த்ர தந்த்ரம்
பூதலந் தன்னில் நம்மைப் போலவே யில்லை யென்றும்
தாதுலட் சணவை யித்ய சாத்திரப் படிக்கு நன்றாய்
ஓதுவோ மெனவை யித்யர் உசிதமாய்த் தோன்றி னாரே.

தரு

77. சீதள உட்டிணமும் வாதங் களுக்கந்த
சிந்தா மணிசந் திரோதயமும்
வாதராட் சஸமாத் திரைகளும் கொண்டு
வயித்திய ரும்வந்து தோன்றினரே. (1)

சங்கத் திராவகம் பூபதி தர்ம்பிர
பஸ்மமுஞ் சொர்ண புஸ்மமுடன்
வங்கண மாய்வங்க பஸ்மமுங் கொண்டு
வயித்திய ரும்வந்து தோன்றினரே. (2)

இந்தவுல கிற்பில்லி சூனியங் களுக்கும்
எதிர்த்த வர்க்குமார் பாணியென்றும்
மந்திர மினுமினுங் தெந்திர மெழுதும்
வயித்திய ரும்வந்து தோன்றினரே. (3)

கோகர்ண கெசகர்ண வித்தைக ளும்ரச
குளிகள் மூலிகைக் கிரிகைகளும்
ஆகம மாயக்னித் தம்பமு மோடிக்.
களத்தலா கமும்வாயுத் தம்பங்களும் (4)

மோகனத் தம்பமு டன்சலத் தம்பமும்
மூகவசி கரமிருக் வசிகரமும்
மேகசூ லையுங்குன்ம வாதங்க ளுக்கந்த
வில்வாதி விஷமுட்டித் தயிலங்களும் (5)

ரோகங்க ளுந்தானின்ன தென்றே யறிந்துசொல்ல
நொண்டித் திம்மாசிப் பண்டிதனும்
வாகடப் பொத்தக மாத்திரை யுங்கொண்டு
வயித்திய ரும்வந்து தோன்றினரே. (6)

விருத்தம்

78. வயித்தியர் தானுங் காரி மன்னவா கேள யுந்தன்
வயித்தில்மா தவப்பாலற்கு வாதபித் தங்கள் சேட்பம்
நயத்துட னறியவேண்டி நாடிகள் நன்றாய்ப் பார்த்தோம்
சயித்தியமுட் ணஞ்சேர் வ்யாதி தானிது வல்லவென்றார்.

79. தானிது வல்ல வென்றால் சாத்திரக் காரர் சோசியர்
ஞானமு மேமி குந்தோர் நன்மறை யோது பார்ப்பார்
பானுவைப் போலு தித்த பாலற்கீ தென்றே சொல்ல
மானிலத் தாய்ந்து பார்த்து வந்திடச் சொல்லு வீரே.

தரு

80. அப்பையுந் தொப்பையுங் குப்பா பட்டரும்
அம்பியு நம்பியின் தம்பியு மாயந்த
அம்மா ளய்யனும் பெம்மா ளய்யனும்
அத்தா னய்யனும் பொத்தா னய்யனும்

அப்பா வையனும் சுப்பா பட்டனும்
ஆதிமுத் தையனும் வேதம்பெத் தய்யனும்
அண்ணா வையனும் தெண்ணா ரையனும்
அந்தணரும் வந்து தோன்றினாரே.

விருத்தம்

பாட்டன்தலை முறையிலேநாம பஞ்சாங்கம் பார்த்ததில்லைக்
கேட்டைமுட் டையுமே செவ்வாய்க் கிற்திகை பரணி நாளும்
கேட்டுத்தமமே காதெசி கிராணமும் வருகு தென்று
போட்டிசாத் திரங்கள்சொல்லப் புரோகிதர்தோன்றினாரே.

தரு

82. சீவை குண்டங் திருக்குருகூர்
தென்திருப் பேரும் திருக்கோளூர்
தேவ ரிரட்டைத் திருப்பதியும்
சீர்வளர் தாந்த க்ஷேத்திரமும்
பூவுல கம்புகழ் பெருங்குளமும்
புளிங்குடி வரகுண மங்கையுடன்
காவலன் பாற்சாத் திரங்கள்சொல்லக்
கட்டளைப் புரோகிதர் தோன்றினாரே.

வேறு தரு

83. பட்டவர் திதிக்கிலை யிட்டரிசி வாங்கும்
மட்டிச் சங்கரனு மொட்டைச் சுப்பனும்
பட்டணப் புரோகிதம் கட்டளை நம்மதென்று
குட்டைநா கநாதனுந் தோன்றினாரே.

விருத்தம்

சாத்திர மெல்லாம் பார்த்தோம் சகலசோ சியங்கள் பார்த்தோம்
பிரார்த்தனை யான உன்றன் பாலன்சா தகப்ப லன்கேள்
நாற்றிசை புகழு மாதி நாதனைப் பணிந்தெந் நாளும்
ஏற்றமாய்த் திருப்பு ளிக்கீ ழிருப்பனென் றிருக்கு தையா.

இருக்குதென் றுரைக்கு மப்போ திதயமு மிகத்த ளர்ந்தே
உருக்கமாய்ப் பெற்ற பாலன் உகந்துதான் திருப்பு ளிக்கீழ்
இருக்கவும் பிரம தேவன் எழுதின படியோ என்று
கருத்தினில் விசார மிட்டுக் காரிரா சனுமி ருந்தான்

86. நங்கைபால் நம்பி மாலும் நாமமும் நம்மாழ் வாராய்ச்
செங்கைமுத் திரையு மாகித் திருவவ தாரஞ் செய்யச்
செங்கதி ருதயம் போலத் தெட்சிணம் விளங்கக் கண்டு
கங்கையின் கரையி ருந்த கனதவ யோகி வந்தார்.

தரு

87. கதிரவ னுதயம் போலக் காணவுமே தெட்சி ணத்தில்
அதிசயம் பார்க்க வென்று அன்புடனந்த க்ஷணத்தில்
துதிபர வுங்குருகூர் சுருதித் தமிழ் மணத்தில்
மதுரமொழி தேடிய மதுரகவி தோன்றினார். (1)

தரித்தசெப தாவடம் தண்டுடன் கமண்டலமும்
விரித்த சடைமுடியும் மின்னூல்ரத்ன குண்டலமும்
மருக்கமழும் வகுள மாறன்னு வீறன்தலமும்
கருத்துள்நா டிமதுர கவியோகி தோன்றினாரே. (2)

விருத்தம்

88. கொற்றவன் காரி ராசன்குமாரமார்த் தாண்டம் போற்றி
முத்திக ளருளும் ஞான முத்திரைக் கையா போற்றி
நற்றவ முடையாய் போற்றி ஞானதே சிகனே போற்றி
கர்த்தனே போற்றி யுன்தன் கழலிணைபோற்றி போற்றி.

89. "செத்தத்தின் வயிற்றிலேதான் சிறியது கிடந்த தானால்
எத்தைத்தின் றெங்கேதானே யிருக்குமோ இயம்பும்" என்ன
"அத்தைத்தின் றங்கே தானே யிருக்கு"மென் றந்த ரங்கம்
முத்தமிழ்த் திருக்கோ ளூரின்முனிவனுக் குரைசெய்தானே.

முனைபெறத் திருக்கோ ளூரின் முனிவனங்கேது சொல்வான்,
மனமிக வும்ம கிழ்ந்தேன் மன்னவா கேளா யுன்றன்
தனையனென் றிருக்க வேண்டாந் தானிவன் தேவன்கண்டாய்
உனதுநாடாண்டு கொண்டு உகந்துதானிருக்கச் செல்வாய்.

91. எனதுள மகிழ வேதான் இவ்வுல களந்த நம்பி
தனையனென் றேயு தித்த தாலவன் தேவ னென்றால்
முனிவனே அடியே னுந்தான் முத்திதான் பேறவே தேவர்
அனைவருஞ்சேவையென்பா லளித்திடச் செய்வீ ரென்றான்.

92. விளங்கவு முனிவ னப்போ விண்ணவர் மாறன் மார்பில்
உளங்களி கூரச் சேவை யுகந்துதா னளிக்கச் செய்து
வளங்கள்சேர் வழுதி நாடும் மன்னவா ஆள்நீ யென்ன
தெளிந்துநற் காரி தாந்த க்ஷேத்திர மேகினானே.

அந்தமாய்த் தவங்கள் செய்யும் அகத்திய முனிக்குத் தானே
சந்ததந் தமிழ்க்கு முத்தி தந்திட நம்மாழ் வார்க்குச்
சிந்தையில் துயர கற்றிச் சேவையு மளிப்போ மென்று
நந்தணி ஸ்ரீவை குண்ட நாதனுங் குருகை வந்தார்.

கண்டார்வம்—தரு

94. கருடன் மேல்ஸ்ரீ வைகுண்ட நாதர் வருவது
காணக் கண்க ளாயிரம் வேணுமே.

விருது நாகசர மேள வாத்தியங்க ளடிக்க
மெல்லியர் சாமரைபோட வெண்குடைகள் பிடிக்க
கருணைக்கிருபைக் கடலெனவுங் கட்டியங்கள் படிக்க
கனகரத்தி னாபரணக் கன்னியர்கள் நடிக்க—கருடன் மேல் (1)

கந்தருவர்க ளும்நாதகீ தங்களும் பாட
கமலமல ரடிசேவை கண்டுகளி யாட
அந்தரத் தமரர்களும் அனைவருங்கொண் டாட
அவனிதனில்விளங்கஅருமறையின் தமிழ்தேட—கருடன்(2)

நாதமுனிக் காகநம் மாழ்வார வதரிக்க
நான்முக னிந்திரன் முனி நாரதரு முபசரிக்க
பாதசேவை களைக்கண்டு பத்தர்ந மஸ்கரிக்க
பாருலகோ ருய்யும் படிக்கவேவங் துபகரிக்க (3)

கருடன் மேல்ஸ்ரீ வைகுண்ட நாதர் வருவது
காணக் கண்க ளாயிரம் வேணுமே.

விருத்தம்

வாசவன் முனிவன் போற்றும் வைகுண்ட பதியேபோற்றி
காசினி யளந்தாய் போற்றி கருடவா கனனே போற்றி
தேசுள சிலையும்வாளும் திகிரிசங் கணிந்தாய் போற்றி
ஈசனே போற்றி யுன்றன் இணையருள் போற்றி போற்றி.

96.முனைபெற நம்மாழ் வாரை முத்தமி ழுரைக்கச் சொல்ல
அனுதினம் விளங்கந் தாதி யாசிரி யமும்வி ருத்தம்
எனுந்திருவாய் மொழிச்சொல்இயம்பவு நூற்றெண்மாலும்
மனமகிழ் திருப் புளிக்கீழ் வந்தெமைப் பாடு மென்றார்.

இந்தநற் பிரபந்தம்சொல்ல எடுத்ததைப் படித்த பேர்கள்
அந்தமாய் வானிற்செல்ல ஆதலா லஃதி றக்க
செந்தமிழ்ப் பிரபந்த மிந்தச் செகந்தனில் விளங்கச் செய்ய
சிந்தையுமகிழ்ந்துவிஷ்வக் சேனரைப் பார்த்துச்சொல்வார்.

98. செகதலம் புகழும் விஷ்வக் சேனரே சொல்லக் கேளீர்
நகைமுகச் சோதி மன்ன ஞர்தலந் தன்னி லேதான்
முகமிக மலர்ந்து நாத முனியென அவத ரித்து
மகிமைசேர் குருகை நோக்கி வந்திடும் என்று சொன்ஞர்.

தவங்கள்செய் காரி ராசன்[illegible]னையன்வாழ் தலத்தை நோக்கி
கவனமும் மனதில் எண்ணிக் கடுகியே வருகும் போது
நவமணித் துளவம் பூண்ட நாதமா முனிகு டந்தை
அவனியிற் புகழ வந்தார் அந்தணர் தோன் றி ஞரே.

100. பீளைகள் சோரக் கண்கள் பீத்தெழ இருமல் நோக்கும்
கோளையும் உடல்ந டுங்கிக் குழறியே பேசிக் கொண்டு
வாளைகள் தாவுஞ் சோலை வயல்கயற் சூழ்கு டந்தை
ஆளெனத் துதிகள் செய்தே அந்தணர் தோன்றிஞரே

தரு

101. குடுக்கைக் காப்புப் போலுடல் மாசியும்
குறுகியே நடந்து லூகையை வீசியும்
நடுக்கி நடுக்கிக் குழறிப் பேசியும்
நரைத் தலையுபல் பிடித்த பாசியும்
இடிக்கி யிடிக்கியே கண்கள் கூசியும்.
இரைத்திலும் பிக்கொண்டு சிந்தும் நாசியும்
அடுத்தாரா வமுதனைத் துதிகள் செய்யும்
அந்தண ரும்வந்து தோன்றி ஞரே.

விருத்தம்

சிலையுடன் கதையும் வாளும் திகிரிசங் கணிந்த தோளன்
அலைகடற் றுயிலும் ஆரா வமுதனைத் துதிகள்செய்யும்
சொலவினில் ஆயிரத் துளிப் பத்தெனுஞ் சொல்லைக் கேட்டு
நலமருள் குருகை நோக்கி நாதமா முனிவந் தாரே.

தரு

103. நம்மாழ்வாரை நாளும் போற்றிசெய்திட
நாதமுனி வந்தாரே.
இம்மா நிலம்புகழ்ந் தேத்துங் குருகையில்
இங்கித மாயந்த ரங்கம் மதுரகவிக்
கங்கமா யுரைசெய்த நங்கை சுதராக (நம்மாழ்வாரை)

பாகவ தப்ரா வண்ணியமு டன்சீர் வேஷ்டியும்—திரு
பன்னிரு நாமம் விளங்கிய பரத நாட்டியம்
ஆகம வேத புராண ப்ரபந்த கோஷ்டியும்—செக
தாதிநா தன்சந் நதித்திருப் புளிநிழற் காட்சியும்
கோகந கக்கரம் ஞான முத்திரையும்
யோகமுந் தாம்பிரவர் ணியின்நதிக் கரையும்
பாகெனும் நற்றமிழ் ராகம்பண் ணிசைவை
போகமும் நித்திய ராகிய குருகூர் (நம்மாழ்வாரை) 1

காசினியெண்ணேழ்தேசமெங்கும்புகழ்மாகாரியின்-பாலில்
காதல னுகிவந் தவதரித் திடுமா காரியன்
தேசுள ஞானப் பிரகாசம் விளங்கிய சூரியன்—போல
திருவவ தாரமும் பூரண கடாக்ஷ உதாரியன்
வாசமு மேகமழ் வகுளா பரணன்
மாமதி முகம்விளங் கியலோக சரணன்
வீசிய புகழ்மகா தேசிகன் குருகூர்
வாசமு மானஉல் லாசவை போக (நம்மாழ்வாரை) 2

கொண்டல் தவழ்மலர்க் குழல்முடி யிட்டலங் காரமும்-கொண்ட
கோலமு மேவளர் சுந்தர வச்சிர சரீரமும்
அண்ட ரண்டபகி ரண்டங் களுக்கா தாரமு—மான
அருமறை யின்பொரு ளின்றமிழ் வேதகம் பீரமும்
வண்டணி செந்துள பந்திகழ் தோளும்
வாதியர் நிதம்பணிந் தேத்தும்பொற் றாளும்
தண்டனிடுந் தொண்டர் கண்டுகண் களிகூர
புண்டரீகக்கரங்கொண்டமுத்திரையும்(நம்மாழ்வாரை)3

கலித்துறை

துயர்நீக்கும் ஞானச் சுடரொளி யாய்வந்து தொண்டுகொள்ளும்
செயலும் பரகதி தானே யளிக்கும் தெரிசனத்தின்
நயமும் வகுளப் பெருமான் உரைக்கின்ற நற்றமிழும்
உயர்தென் குருகை நகர்க்கிணை யோஇவ் வுலகங்களே.

தரு

105. இந்தப்பூ லோகத்தில் குருகூரி னதிசயம்
போலவே தானுமுண்டோ.
நம்பிமா லானநம்மாழ் வார்வாழும் வளநாடும்
வல்வினை கள்பறந் தோடும்—நாளும்
நல்கும் வரமுங்கை கூடும்—நல்ல
கல்விப் பொருளுங்களைத் தேடும்—வேதச்
சொல் விளங்குந் தீம்ழ்ப்பாடும் (இந்தப்பூ)

கொஞ்சு கிளிகுயில் கூவும் செம்பொன்மதில்
கோபுர மும்மலங் காரம்—நாளும்
மிஞ்சு புகழ்வேத கோஷம் முழங்கொலி
வீதிகள் தோறும்விஸ் தாரம்—அந்த
பஞ்ச பாணனு மயங்குந் தெரிசனம்
பாகவ தாள்பரி வாரம்—மனச்
சஞ்சல மில்லாமல் தானளிக் குமுத்தி
தாம்பிர வர்ணிநதி தீரம்—அதைத்
தஞ்சமென் றூர்க்குப சாரம்—ஆர்க்கும்
நெஞ்சமஞ் சாதாண்மை வீரம்—செய்யும்
வஞ்சனை தீர்க்குங் கொடூரம்—அதை
என்சொல்வேன் காணுங்கெம் பீரம் (இந்தப்பூ) 1

உன்மத பித்தம் பிடித்துப் பதைத்துடல்
ஊன்றும்ல் வேருடன் பேர்க்கும்—பின்பு
தன்மனி னைவுகொள் ளும்படி யாக்கியே
தன்பொரு ளன்றேதற் காக்கும்—அந்த
மின்முகில் வண்ணன்அ டிமையென் றேபரம்
வீற்றிருக் கும்படி சேர்க்கும்
பொன்முடி வானவ ரினனுடன் கூடிப்
பிரியாம லேகிருபை பார்க்கும்—செய்த
கன்மவி டாய்களைத் தீர்க்கும்—இனிச்
சென்மமெ டாவர மேற்கும்—படி
இம்மையி லேதாரை வார்க்கும்—அதில்
நன்மையுண் டாமேயெல் லார்க்கும் (இந்தப்பூ) 2

ஞாலமுண் டானடி காணவுண் டாம்மிக
ஞான பக்திவை ராக்கியம்—அந்த
நீலவண் ணனுறை நாதன்சே வைநிதம்
நிட்சேப மும்வேண பாக்கியம்—நாளுஞ்
சேலெழு துந்திரு வின்கடாட் சம்வளர்
செய்யும் மறைத்தமிழ் வாக்கியம்—நங்கை
பாலனு கியநம் மாழ்வார் களிகூரும்
பாங்கான க்ஷேத்திர ஆரோக்கியம்—அனு
கூலதெ ரிசன யோக்கியம்—அதி
னூலே விளங்குஞ்சி லாக்கியம்—இனி
மேலுண் டோபோக போக்கியம்—ஒருக்
காலுமே நீங்காத சௌக்கியம் (இந்தப்பூ) 3

விருத்தம்

106. பரிவுடன் திருப்பு ளிக்கீழ்ப் பராங்குச நம்பி யப்போ
கரிசன மாக வந்து கண்ணிநுண் சிறுத்தாம் பைத்தான்
உரையுமா யிர மீரா றுருவெனச் செய்தீ ராகில்
கருணைசேர் நம்மாழ் வாரைக் காணலாம் என்று ரைத்தார்.

கரமுமே கூப்பி அன்பாய்க் கண்ணிநுண் சிறுத்தாம் பைத்தான்
உருவுமா யிர மீரா றுரைத்திட வேயு கந்து
சுருதிநற் றமிழ்ப்ர பந்தஞ் சொல்லவென் றேநம் மாழ்வார்
பிரியமாய் மாமு னிக்குப் பிரத்யக்ஷ மாயி னுரே.

சாவேரி தரு

108. நம்மாழ் வார்திரு அவதாரஞ் செய்த
ஞான தேசிகன் சேவை பாரும்
இம்மா நிலத்தில்கா ரியுமனங் களிக்கவே
மின்முகில் நம்பி மாலுமக வாகிய (நம்மாழ்)

நெத்தியி லணிகஸ் தூரியின் காப்பும் - துயர்
நீக்குமங் தகாசச் சேவையின் கோப்பும்
பத்தியு டனடி யார்கை கூப்பும் - நாளும்
பரப்பிரம்ம த்தியானம்செய்திடும் வாய்ப்பும்-எங்கும்பிர
சித்த னெனும்பரி சுத்தன் நித்திய
முத்தி தரும்மறை நற்றமிழ்க் கொரு
கர்த்தன் எனவளர்த் தமுத் திரை
பெற்ற திருக் குருகைத் தலந்தனில். (நம்மாழ்) 1

தாதம ருஞ்ச ரோருகக் கையும் - அந்தத்
தபன னுதயம் விளங்கிய மெய்யும்
ஆதிநா தனையா ராதனை செய்யும் - அன்பாய்
அடிய வர்க்கிரு வினைகளைக் கொய்யும்-திகழும்வெண்
போதில்நான் முகன்வே தந்தமிழ் செய்து
நாதமு னிக்குகந் தோதும் மகிமையும்
தீதிலா மனு நீதி புனையூநல்
மாதவம் புரி சீதர னிந்த (நம்மாழ்) 2

திருமஞ் சனமு முழக் கொலியும் – அந்தச்
சேவையைக் கண்டோடுங் கலியும்
சுரர்து தித்துத் தொழுமஞ் சலியும் – காந்தி
துலங்க வேவத னமம் புலியும்-நற்புனல்
பருகுகங் கையின்கரை யில்நற் றவம்புரி
மதுரகவி வருகவவற் குகந்துரை செய்கையுங்
திருவர வப்புளி நிழல்திர முமான
தென் குருகை வாசமும். (நம்மாழ்) 3

விருத்தம்

காமவேள் தாந்த க்ஷேத்ரங் காரிரா ஜேந்த்ர சந்த்ரன்
தாமகிழ்ந் தருளும் ஞானத் தமிழ்க்கடல் அமுதே போற்றி
நாமமே விளங்கு கின்ற நற்றவ முடையாய் போற்றி
மாமலர்ப் பதனே போற்றி வகுளதே சிகனே போற்றி.

தாழிசை

110. குருகைவா ழுந்திரு வழுதிநா டனெனுங்
குருபரன் இருபதாம் புயன்
குணநிதிக் கடலும் இணையுமற் புதமும்
குமுதவா யின்மொழி யமுதமும்
இருசெவிக் குழையும் அசையும்விற் புருவம்
இந்துநேர் வதன அந்தமும்
எழில்முடிக் குழலும் அழகுபற் குறியும்
இருபுயங் களணி வகுளமும்

அருமறைப் பொருளை உரைசெயுந் தமிழை
அடியவர்க் கருள் சகாயமும்
அன்னகே தனமும் பன்னகா சயன
ஆதிநாத னுடைத் தியானமும்
தெரிசனப் பிரபல வரிசைபெற் றமகா
தேசிகன் பரம ராசியன்
செங்கையேந் துந்திரு ஞானமுத் திரையுஞ்
சேவை காண் இவன் இலாக்கியமே.

சுருட்டி தரு

111. இவனே சிலாக்கியங் காணும் - அறியச் சொன்னேன்
இகபர சாதகம் பூணும்
தவஞ்செய் ஞான போதனன் தனைக்கு மன்ன கேதனன்
அவனே மது சூதனன் அவனுக் கவன் சேதனன். (இவனே)
தருஞான முத்திரைக் கையும் - இவனையல்லாற்
றவங்கள்செய் வதெல்லா மையம்
இருவி னைகளைக் கொய்யும் பெருமை பெற்றிடும் வையம்
குருபீ டமான மெய்யும் திருவவ தாரம் செய்யும். (இவனே)
உள்ளங்கைக் கனிபோல் மித்திரன் - அமரரெல்லாம்
உரைக்கின்ற தேகப வித்திரன்
தெள்ளுந் தமிழ் விசித்திரன் திருவி சாகந க்ஷத்திரன்
வள்ளல்கா ரியன் புத்திரன் மாலா கியச ரித்திரன். (இவனே)
பதுமப்பொற் பதங்கள்நாடும் — சேஷகவிஞன்
பகருந் தமிழ்மாலை சூடும்
மதுரவாய் மொழி பாடும் மகிமைபோ லுண்டோ யீடும்
சதுமறைப் பொருள் தேடும் சடகோப னைக்கொண் டாடும். (இவ)

தாழிசை

குருகைப்பதி தனிலற்புத னெனுஞ்சற்குரு பரனே
கூறுந்தமிழ் மாறுவளந் தேறும்புளி நிழலும்
மருமொய்த்திடு களபப்புய வகுளப்பெரு மானே
மதுரைப்பதி சங்கத்தமிழ் வணங்கும்பொற் பதஉன்
சுருதிப்பொருள் தமிழேதமிழ் அல்லாமலே உலகில்
சொல்லுங்கவி எல்லாம்ஒரு சொல்லுக்கிணை யாமோ
தருவொப்பெனும் அருமைப்பொருள் கருணைக்கடல்நிதியே
தரணிப்புகழ் காரிக்குல ஞானச்சட கோப.

நீலாம்புரி—தரு

113. சடகோப திவ்வியகுண ரத்னப் பிரதாப
தடசித்த தாம்பிர வர்ணிநதி தீர
திருக்குரு கூர்வாழுஞ் செண்பக மாற
கெம்பீர உபகார அவதார (சடகோப)

சுந்தரஞ்சேர் சந்திரபிம்பம் போல்வதனப் பிரகாச
சிந்தைதனிலே தியானம்செய்யுந் தவயோக உல்லாச
மந்தகா சமும்சேவை தந்தருள் வாயே
வாசங் கமழ்வகுள மாலிகா பரண
லோசரணு ரவிகிரண திவ்யசரண (சடகோப)

மதுரகவிக்கே அந்தரங்கம் உரைக்கின்ற மெய்ய
சதுமறைக்கும் தமிழ்செய்யும் ஞானமுத்திரைக் கைய
பதுமநாப னென்றுதி மலரனே துய்ய
பரஞ்சோதி யேபரந் தரும்ஆசை பூணும்
நெஞ்சிற்பே ணும்வினை நாணும்திரங் காணும்(சடகோப)

மனமகிழ்ந்து சேஷகவி தமிழ்புனையும் பொற்றுள்
அனுதினமும் அன்பாய்அடி யவர்க்கருளுந் தயாளா
உனதருமை என்றிந்த சன்மமுமீடேற
உண்மைசொன் னேனுன்த னடிக்கேயா ளாக்கும்
இசைநோக்கும் தமிழ்வாக்கும் துயர்நீக்கும் (சடகோப)

வசன விருத்தம்

114. ஞானதே சிகனும் அந்த நாதமா முனிக்கு கந்து
தானவர் பிரபந்த முற்றுந் தானுரைத் திட்டெந் நாளும்
மானிலத் தவர்க்கு நீரும் மறைத்தமிழ் ப்ரபந்தந் தேவ
கானமாய்உரையுமென்று களிப்புடன்முனிக்குச்சொன்னார்.

மகிமைசேர் மாறன் பொற்றூண் மண்டபந் தனிலி ருக்க
நகைமுகம் இலங்க வேதான் நாதமா முனிவ னுந்தான்
இகபரந் தரும்ப்ர பந்தம் என்றுல கோர்க்க ளித்து
அகமகிழ்ந் தனுசந் தானம் அனைவரும் உரைக்கச்செய்தார்.

116. நாதமா முனிக்குச் சேவை நல்கியே நம்மாழ் வாரும்
பூதலம் புகழ்ந்து போற்றப் பொற்றூணின் மண்டபத்
மாதவைத் திருப்பு ளிக்கீழ் மஞ்சன மாடி ஆறி
நாதனைப் போற்றிசெய்தே நாளுந்தென் குருகைவாழ்ந்தார்.

117. அனுதின முச்ச வத்தோ டாண்டுபட் சோச்ச வங்கள்
மனமகிழ் வாக னந்தேர் மாதவுச் சவம்வி ளங்கத்
தனதடி யார்க்கு நித்திய ததியா ராதனை செய்தே
தினகரன் உதயம் போலத் திருமகிழ் மாறன் வாழ்ந்தார்.

மங்களம்

118. மதுரகவி எதிராசர் மணவாள மாமுனிக்கு
நதிதாம்பிர வர்ணியாதி நாதனுக்கு
பதின்னார்மறைத் தமிழ்ப்பிரபந்தம் பாடும்நாத மாமுனிக்கு
கதியருளுந் தென்குருகைக் காரிமா றற்குசெய
மங்களம் நித்திய சுப மங்களம்.

காரேசிகர் கருணைவள்ளற் காரிரா சேந்திரனுக்கு
பாருலகில் உடைய நங்கை பாலனுக்கு
மாறன்திரு வண்பரிசா ரந்திருவாழ் மார் பனுக்கு
சீருலவும் புயன்வகுள தேசிக னுக்கு செய
மங்களம் நித்திய சுப மங்களம்.

ஆதிநாதரைப் பணிந்தே யரவத்திருப்புளிக்கீழ்
மாதவம் புரியும்நம் மாழ்வாராய் வந்தவர்க்கு
மங்களம் மகிழ்மாறற்கு மங்களம்.

விருத்தம்—வாழி

119. அருமறையின் தமிழ்நாலா யிரமும் வாழி
அரங்கநகர்க் கந்தாடை அண்ணன் வாழி
திருவளரும் நாதமுனி ஆதிநாதன்
திருக்கோளூர் முனிவன்தென் குருகை வாழி
கருணைவளர் நூற்றெட்டுப் பதியும் வாழி
காசினியிற் சேஷகவிப் பிரபந்தம் வாழி
தருவளருந் தாம்பிரவர்ணி நதியும் வாழி
தலத்தாரும் சடகோபர் நாளும் வாழி.

விருத்தம்

தரணியில் நம்மாழ்வார்தஞ் சரித்திரந் தன்னை அன்பாய்
பரிவுடன்படிப்போர்கேட்போர் பரதமாய்நடிக்கின்றோரும்
நரகரி முகுந்த னுதி நாதனந் திருபையி னாலே
பரகதிக் கன்ப ராகப் பாருல காள்வர் தாமே.

ஸ்ரீ பராங்குச நாடகம் முற்றிற்று.